# வள்ளுவர் கண்ட உயிரினங்கள்

ஆசிரியர்:
வித்துவான் பூ. அமிர்தலிங்கன் எம். ஏ.,
தமிழ்விரிவுரையாளர், அழகப்பா கல்லூரி,
காரைக்குடி.

முதற்பதிப்பு: ஆகஸ்டு 1955
இரண்டாம் பதிப்பு: பிப்ரவரி 1962
மூன்ரும் பதிப்பு: அக்டோபர் 1964

*உரிமையுரை*

*என் அருமை அண்ணன் அண்ணியார்*

*திருஞானம்—மீனுட்சி*

இருவர்க்கும் இந்நூல்

அன்புக்காணிக்கை

விலை ரூ. 3—00

சென்னைப்
பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர்

**டாக்டர் மு. வரதராசனார்,**

எம். ஏ., எம். ஓ. எல்., பி. எச். டி.,

அவர்கள் நல்கிய

# முன்னுரை

திருவள்ளுவர் இயற்றிய அரியநூல் தமிழில் அமைந்தது தமிழர்தம் நற்பேறு ஆகும். அவர் தம் வாழ்வில் பெற்ற அனுபவங்களையும் அறிந்த அறிவுநலங்களையும் பிறர்க்கு உணர்த்த விழைந்த நன்னோக்கமே திருக்குறளாக உருக்கொண்டது. இத்தகைய விழுமிய நூலைப் பெருஞ்செல்வமாகப் பெற்றுள்ள நாம், இதனை வாழ்க்கையோடு இயைத்து ஆய்ந்து ஆய்ந்து அரும் பொருள் பலவும் காணுதல் வேண்டும். இத்தகைய ஆய்வின் பயனாக, ஆய்வு நூல்கள் பல வெளிவருதல் வேண்டும். காலப்போக்கில், ஒவ்வோர் ஊரின் நூல் நிலையத்திலும், திருக்குறள்பற்றிய நூல்கள் நூற்றுக் கணக்காக இடம்பெறல் வேண்டும். திருவள்ளுவப் பயனைப் பெற்ற நாம் நன்றியுணர்ச்சியோடு போற்றிச் செய்யவேண்டிய கடமை இது.

'வள்ளுவர் கண்ட உயிரினங்கள்' என்னும் இந் நூல், திருக்குறளைப் புதியதொரு துறைவகுத்து ஆய்ந்து எழுதிய நூலாகும்.

இதன் ஆசிரியர் திருவாளர் அமிர்தலிங்கனார், தாம் கற்று உணர்ந்த பல நல்ல கருத்துக்களை இதன்கண் ஒழுங்குபெற அமைத்து விளக்கியுள்ளார். எத்தனைவகை உயிரினங்கள் எங்கெங்கே எவ்வெக் காரணம்பற்றி எவ்

வெவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளன என்பதைத் திட்பம் பெற எடுத்துரைத்துள்ளார். 'பதினொரு விலங்குகளை இருபத்தொரு குறள்களில் எடுத்தாண்டுள்ளார்' என்பது போன்ற இடங்களில் வரையறையுடன் ஆசிரியர் கூறுவது காணலாம்.

இடையிடையே கருத்து வேறுபடும் இடங்களையும், காலத்திற்கேற்ற புதுக்கருத்துக்கள் கொள்ளத்தக்க இடங்களையும் நடுநிலையில் நின்று விளக்குவதுடன், திருவள்ளுவரின் ஆழ்ந்த அனுபவம் இத்தகையது எனக் கற்பவர் உணருமாறு புலப்படுத்துகிறார். குறள்கருத்துக்களோடு ஒப்புமை காணும் வகையில் பிற புலவர் பாடல்களையும் மேற்கோள் காட்டுகிறார்.

ஆசிரியரின் நடை செம்மையும் தெளிவும் வாய்ந்துள்ளது. திருக்குறளைப் பலகால் ஓதி உணர்ந்த உணர்வு அவர்தம் நடையில் புலனாகிறது.

இந்த நன்முயற்சியைத் தமிழகம் வரவேற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

சென்னை
12—8—55.

*மு. வரதராசன்*

# முகவுரை

சொல்லரிய பொருளாழச் சுவையாய் நின்று
சோதியென வழிகாட்டுந் தமிழ ணங்காம்
வெல்லரிய முப்பாலைச் சங்கத் திட்டு
மெய்வளர ஊட்டுந்தாய் வணக்கம் செய்வாம்.

தமிழகத்தில், திருக்குறள்பற்றி இதுகாறும் வெளி வந்துள்ள நூல்கள் பலதிறத்தன. பரிமேலழகர் ஈருன பண்டை உரையாசிரியர்களின் நூல்கள் ஒருவகை. அவ் வுரை நூல்கட்கு விளக்கம் எழுதித் தொகுத்து, விரித்து, விருத்திசெய்து பதிப்பித்த உரைவளநூல்கள் இன் னொருவகை. பொழிப்புரை, கருத்துரை, தெளிவுரை, புத்துரை, திருந்திய உரை. எளிய உரை எனவாங்கு எழுந்த புதிய உரை நூல்கள் மற்றொரு வகை. குறளடி களை ஈற்றில்கொண்டு, அவ்வக் குறட்கருத்தை முன் னிரண்டு அடிகளால் விளக்கம் செய்யப்புகுந்த செய்யுள் நூல்கள் பிறிதொரு வகை.

நாடக முறையாகக் குறள்களைத் தொகுத்துச் சுவை படக் கட்டுரைக்கும் முறையிலும், இலக்கிய நயங் காணும் வகையிலும், தனிக்குறள் ஒன்றின் சீர்மையை மேற்கோள் காட்டித் திறனய்வு செய்யும் நெறியிலும், பின்வந்த புலவர்க்குச் சொல்லும் பொருளும் உதவும் களஞ்சியமாய் விளங்கிய வளங்காட்டும் வழியிலும், வள்ளுவரின் சமயம், பெயர், கொள்கை, காலம் இவற்றை ஆராயும் போக்கிலும், இன்னும் பிற வகை யானும் எழுந்த ஆய்வு நூல்கள் ஒரு தனி வகை.

இவ்வெல்லாம் நிற்க, திருக்குறள் ஒரு வாழ்க்கை நூல், செயல்நூல் என்ற நோக்கில் புதுத்திருப்பம் ஒன்றை உண்டாக்கி வள்ளுவங்களை வாழ்க்கையில்

கடைப்பிடிக்கவேண்டிய வழிமுறைகளை வகுத்துரைக்கும் வாழ்க்கை விளக்கச் செயல்நூல்கள் ஒரு புது வகை.

இங்ஙனமாகத் திருக்குறள் பற்றி இற்றைநாள் வரை எழுந்துள்ள நூல்கள் பலதிறத்தனவாயினும், கால மாறுபாட்டுக் கேற்ப, கருத்து வளர்ச்சிக் கேற்ப, சூழ்நிலைக்குத் தக வருங்காலத்திலும் புதுப்புதுவகை நூல்கள் தோன்றுதல் இயல்பே.

'வள்ளுவர் கண்ட உயிரினங்கள்' என்னும் இந்நூல், குறளாசிரியர் தம் கருத்துக்களை விளக்கக் கருவியாகக் கையாண்ட அஃறிணைப் பொருள்பற்றி ஐந்து பிரிவும், மக்களினத்துள் எதிர்நிலையினராகக் காணப்படும் முறை பற்றி உயர்திணைக்கு ஐந்து உட்பிரிவுமாகக் குறட்கருத்துக்களை ஒருவழிப்படுத்துத் தரும் முறையில் அமைந்துள்ளது.

ஆசிரியர் வள்ளுவரின் உள்ளக்கருத்து இங்ஙனமிருத்தல் சாலும் என எண்ணிய சில இடங்களில் என் மனத்திற் பட்டாங்கு அவைகளை ஆங்காங்கே விளக்கியிருக்கிறேன். அம்முடிவுகளைத் திடீரெனக் கருத்து மாறுபாடு எனத் தள்ளிவிடாமல் நிலைத்து நின்று நடுநிலையுடன் ஆராய்ந்து ஒரு முடிவுக்குவருதல் நும்கடமை.

இந்நூல் வெளிவரற்குப் பல்லாற்றானும் எனக்குத் தூண்டுகோலாயும், ஊன்றுகோலாயும் இருந்து உறுதுணை செய்த அருமை நண்பர், திரு. அ. லெ. நடராசன் அவர்கட்கு என் நன்றியைத் தெரிவிக்கும் கடப்பாடுடையேன். இந்நூலுக்குப் பேராசிரியர்-டாக்டர் மு. வரதராசனர் அவர்கள் மனமுவந்து, பொருள் செறிந்த முன்னுரை யொன்று வழங்கியிருக்கிருர்கள். அவர்கட்கும், இந்நூலை ஏற்று முதற்கண் பதிப்பித்த நண்பர் பாரி நிலைய உரிமையாளர், திரு. அ. செல்லப்பனுர்க்கும். என் நன்றி என்றும் உரித்து.

காரைக்குடி<br>23-2-62

**பூ. அமிர்தலிங்கன்**

## உள்ளுறை

# வள்ளுவர் கண்ட உயிரினங்கள்

தமிழ்த்தாயின் இனிய உயிர்நிலையான திருக்குறளை அருளிய தெய்வப் புலமைத் திருவள்ளுவர், இயற்கை யோடியைந்த வாழ்வு நடாத்தியவர். அவர், இயற்கை யில் காணப்படும் இரு திணைப் பொருள்களையும் தம் புலமைக் கண்கொண்டு நோக்கி, நிலையியற் பொருள் கள் மூலமும் இயங்கியற் பொருள்கள் மூலமும் தாம் உணர்ந்த உண்மைகளை, மனித சமுதாயம் மனிதத் தன்மையுடன் வாழத் தமது நூலில் ஆங்காங்கு குறித்துச் செல்கின்றார்.

நிலையியற் பொருள்களைக் கொண்டு அவர் காட்டும் உண்மைகள் பலப்பல. அஃதொப்பவே ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈருகவுள்ள இயங்கியற் பொருள்கள் மூலம் அவர் விளக்கும் கருத்துக்கள் மிகப்பல. நிற்பன, ஊர் வன, நீர்வாழ்வன, பறப்பன, நடப்பனவாகிய எல்லா உயிர்ப் பொருள்களும் அவர் கையில் ஒழுக்கத்தை உணர்த்தும் கருவிகளாக விளங்குகின்றன.

இயற்கையோடு வாழ்ந்து ஆய்வுக்கண் கொண்டு நோக்கி, ஒவ்வொரு உயிர்ப் பொருளின் தன்மையையும் உணர்ந்து, அத்தன்மையறிவைப் பூதக் கண்ணுடியாக்கி, அவற்றின் மூலம் நுண்ணணுப்போன்ற உண்மைகளை, எல்லோரும் பெரிதாகக் கண்டுணருமாறு காட்டுதல் அவர் புலன்நெறி வழக்கு. மிகச் சிறு நிகழ்ச்சிகளில்

வைத்துப் பெரும்பேருண்மைகளைக் காட்டும் ஆசிரியர்க்கு உயிர்ப் பொருள்களில் வைத்து உண்மைகளை விளக்குதல் தஞ்சம் எளிதுதான்.

இந்நூற்ருண்டில் கடற் கண்ணியாக ஆழ்ந்து, மின் சாரமாக அகன்று, அணுவாராய்ச்சியாக நுணுகி, அறிஞர் கருத்தை யெல்லாம் அள்ளிக் கொண்டிருக்கும் விஞ்ஞானம், தனித் தனித் துறையின் மூலமாக, ஐம்பூதங்களைப் பற்றியும் புல் முதலாக மனிதன் ஈருக உள்ள உயிர்களைப் பற்றியும் இன்று ஆராய்ந்து வருகிறது. ஆனல் வள்ளுவர் நூலியற்றிய காலத்தை மனத்திற் கொண்டு, பயிரினம் முதலாக, ஊர்வினம், நீர்வாழினம், புள்ளினம், விலங்கினம், மக்களினம்ஈருக அவருக்கிருந்த ஆராய்ச்சி அறிவை நாம்எண்ணினல் அவரது இயற்கை வாழ்வும், நுண்மாண் நுழைபுலமும், பரந்த நூலறிவும், அநுபவ உணர்வும், ஆய்வுக் கண்களும் நமக்குப் பெரு வியப்பையளிக்கின்றன. இதற்கெல்லாம் மேலே அவ் வியற்கை உண்மைகளை மனித இனத்தின் வாழ்வோடு பொருத்தி, அவர்க்கு நன்மை செய்யும் மெய்ஞ்ஞானக் குறட்பயிராக நவில்தொறும் நயம் தோன்ற விளைவித்த அவர்தம் அருட்புலமையை எண்ண எண்ண மனம் இறும்பூது எய்துகின்றது. சிந்தைக்கினிதாய்ச், செவிக் கினிதாய், ஓதற்கெளிதாய், உணர்தற்கரிதாய், ஓரடி முக்காலாலே உலக மக்கள் உணர்வை அளந்த அவர் பெரும் புலமையை அளவிட முற்படின் அது கடை போகாதுகாண்.

திருக்குறள் ஒரு செயல் நூல் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. முன்னேற வேண்டுமென்ற விருப்பமுடையார்எந்நிலையிலிருந்தாலும், அவ்வந்நிலையினின்று அவரவர் மேன்மேல் உயரவழிகாட்டுவதே திருக்குறளின் தனிச்சிறப்பு. தனி மனிதன் தான் உள்ள நிலையிலிருந்து உயர்வானயின் சமூகம் தானகவே மேம்

பாடடையுமன்றே. "ஊழையும் உப்பக்கம் காணலாம்; வேண்டியதெல்லாம் தன் உண்மை நிலையறிந்து உயர வேண்டுமென்ற எண்ணம் தலைக்கொண்ட ஆள்வினையே யாகும்" என, மனிதனின் அறிவில் நம்பிக்கையூட்டு கின்ற ஆசிரியர் இவர் ஒருவரே.

திருக்குறள் கற்பதன் தலையாய நோக்கம், தன்னை உணர்ந்து, தன் நிலையினின்று முன்னேறச் செயலில் ஈடுபடுதல் என்பதாயிருத்தல் வேண்டும். இலக்கியம் என்று சுவை காண்பதெல்லாம் அதன் அடுத்த நிலை யென்க. எனவே, அவர் செயல் நூலை ஓதி, உணர்ந்து, ஒழுகி, உள்ளம் தெளிந்து சான்றோராக உயர்வ தொன்றே அவரது செய்யாமற் செய்த உதவிக்கு நாம் செய்ய வல்ல கைம்மாருகும். அதுவே நாம் அவர்க்குச் செய்யும் வழிபாடும், வணக்கமும் எல்லாம் என்க.

அங்ஙன், மக்களினம் வாழ்வாங்கு வாழ வழிகாட்டத் தமது நூலில் வள்ளுவர் எடுத்துக் கையாண்ட உயிர்ப் பொருள்களை இனமுறையாக ஈண்டு ஆராய்வோம். அதன் மூலம் நாம் பெறும் உலக அறிவு நமது வாழ்க்கையை உயர்த்திக்கொள்ளப் பயன்படுவதோடு, ஆசிரியரது அளக்கலாகாப் புலமையையும் ஓரளவு புலப் படுத்தும் என்று எண்ணுகிறேன்.

# பயிரினம்

'செந்தமிழ்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்' என இறையனாரால் பாராட்டப்பெற்ற மணம் மிக்க திருக்குறளிலே பயிரினங்களைப் பற்றிய குறிப்புக்கள் பலப்பல காணக்கிடக்கின்றன. பயிரினங்களின் பல்வேறு வகைகள், உறுப்புக்கள், வேறுபாடுகள், தன்மைகள் முதலிய பற்பல செய்திகளை நாம் அவற்றின் மூலம் அறிய முடிகின்றது. புல், பயிர், கொடி, கொம்பு, மரம், மலர், காய், கனி, வித்து, முளை எனப் பல பொருள்களை வள்ளுவர் ஆங்காங்கே பொதுவாகவும், சிறப்பாகவும், உவமை முகத்தானும், பிற வகையானும் எடுத்தாள்கின்றார்.

## புல்லும் பயிரும்

புல் என்னும் சொல் குறளில் பத்து இடங்களில் காணப்படும். ஆனால் தாவரப்பொருட்டாகப் புல்லைக் குறிப்பிடும் குறள் ஒன்றுதான் உளது. ஏனைய இடங்களில் புல் என்னும் சொல்லுக்குச் சிறுமை என்பது பொருள். புல்லறிவாண்மை, புல்லவை, புன்கேண்மை காண்க.

புல்லுக்கு அடைகொடுத்துப் பசும்புல் எனச் சிறப்பாகக் குறிக்கும் ஒரே இடத்தில்கூடப் புல்லின் சிறுமை காரணமாகவே அதனை வள்ளுவர் குறிக்கின்றார்.

> **விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே**
> **பசும்புல் தலைகாண்பு அரிது**

மேகத்தினின்று துளி விழுந்தாலல்லாமல், மிகஎளிய ஓரறிவுயிராகிய பசும்புல்லின் தலையையும் இங்கே காண்

பது அரிது என்று கூறுவதன் மூலம் மழையின் சிறப்பை யும், அதன் இன்றியமையாமையையும். மழையின்றேல் உலக மில்லாமையையும் உணர்த்துகின்றூர்.

கால்நடைகட்குப் புல்லே தலையாய உணவு, உயிரி னத் தோற்ற வரலாற்றுக் கூர்தல் முறைப்படி, மனித னுக்கும் விலங்குக்கும் முந்தித்தோன்றியது பயிரினம். புல்லின்றேல் விலங்கினமோ, மக்களினமோ வாழ்தல் அரிது. பயிரினத்தின் முதல் தோற்றம் புல்லே என்க.

புல் என்றவுடன் கால்நடைகட்கு உணவாகும் புல் ஒன்று மட்டுமே நம் மனத்திற்கு வருகின்றது. அஃது உண்மையின் ஒரு பகுதி. இன்றையப் பயிரினக் கலைஞர் கள் பயிர்களை இரு பெரும் பிரிவினுள் அடக்குவர். ஒற் றைப் பருப்பு விதைப் பயிர் ஒன்று. இரட்டைப் பருப்பு விதைப் பயிர் மற்றது. அவற்றின் வேறுபாடுகளைப் பல படியாக விரித்தும் காட்டுவர். இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டு கட்கு முற்பட்டது என்று எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட முழுமுதல் இலக்கண நூலாகிய தொல் காப்பியத்தில் புல்லின் இலக்கணமும் மரத்தின் இலக் கணமும் வரையறுத்துக் கூறப்பட்டிருக்கின்றன.

புறக் காழனவே புல்லென மொழிப
அகக் காழனவே மரமென மொழிப

என்பது தொல்காப்பிய மரபியற் சூத்திரம். வெளிப்புறத் துத் திண்மையுடையன வெல்லாம் புல்லாம். உட்புறத் துத் திண்மைடையன வெல்லாம் மரமாம். எனவே பனை, தெங்கு, கமுகு, வாழை, கரும்பு, மூங்கில் என்பன புல்லி னத்தைச் சார்ந்தனவாகும்.இக்காலத்தில் நாம் பனைமரம், வாழைமரம், மூங்கில்மரம் என்று கூறுவது மரபு பிறழ்ந்த வழக்காறுகள் என அறிகின்றேம், தொல்காப்பியர் மேலும் புறக்காழ்புடைய புல்லின் உறுப்புக்களாவன;—

தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை முதலிய வென்றும்; அகக் காழ்புடைய மரத்தின் உறுப்புக் கள் இலை, முறி, தளிர், கோடு, சினை, குழை, பூ, அரும்பு, நனை முதலிய வென்றும்; புல், மரம் இவ்விரண்டிற்கும் பொதுவான உறுப்புக்கள், காய், பழம், தோல், செதிள், வீழ் (விழுது) ஆகு மென்றும் தெள்ளிதின் வகுத்து விளக்கியிருக்கின்றார். இனைய மரபுகள் காலப்போக்கில் மாறுவது, வளரும் மொழியியல்பு. இங்ஙன் பண்டை மரபுகளைத் தெரிந்துகொள்வதால் நாம் மொழி வரலாற்று அறிவும் பெற்றவர்களாகின்றோம்.

கால்நடைகட்கு உணவாகும் புல் மனிதர்க்கு உண வாகும் புல்லினமாகிய பயிரோடு சேர்ந்து களையாக வளருமாயின் அதனைக் களைதல் உழவர்தம் கடன். தாம் விளைக்கும் பயிரில் வேறு எவ்வகைப் பயிரினம் தோன்றி னும் அது களைந்தெறியப்பட வேண்டியதொன்றே என்ற கருத்துக் கொண்ட தமிழுழவர், அங்ஙனம் தான் தோன்றியாக, இடமறியாது வளரும் பயிரினத்திற்குக் 'களை'யென்றே பெயரிட்டனர். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால் யாத்தல் இவ்வைந்தும் உழவரின் செயல் முறைகளாகும். களையைக் களைந்து, நலிவு வராமல் பயிரைக்காத்தல் எங்ஙனம் உழவனின் கடனோ, அது போன்று நாட்டிலுள்ள கொடியவர்களைத் தொலைத் துத் தக்கோரைக் காத்தல் அரசனின் கடனாகும். அவனே செங்கோலனாவான்.

> கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
> களைகட் டதனொடு நேர்

என்பது குறள். சிலப்பதிகாரத்தில் ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன், 'கள்வனைக் கோறல் கடுங்கோலன்று, வெள்வேல் கொற்றம்' என்று கண்ணகிக்குப் பதில் இறுப்பதும் ஈண்டு நினைவுகூரற்பாலது.

## தினையும் பனையும்

புல்லினமாகிய தினை, பனை, இரண்டையும் வள்ளுவர் சிறுமை, பெருமை என்ற அளவுகளைக் காட்டப் பயன் படுத்துவர். இனம் ஒன்றேயாயினும் இரண்டிற்குமுள்ள உரு, பயன், தன்மை முதலிய வேறுபாடுகளை யாவரும் அறிவர். பயன் உணரும் மக்கள் ஒருவர் தமக்குச் செய்த சிறு நன்மையையும் மிகப் பெரிதா யெண்ணுவர் என்றும், பழிநாணும் குடிப்பிறந்தார் தமக்குச் சிறு குற்றம் வருமா யினும் அதனை மிகப் பெரிதா யெண்ணி வருந்துவர் என்றும் வள்ளுவர் கூறுகின்றார்.

**தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பயன்தெரி வார்**

**தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பழிநாணு வார்**

சொல்லானும், நடையானும், முறையானும் ஓராற்றான் ஒத்தியலும் செய்ந்நன்றியறிவார், குற்றங் கடிவார் மன ஓட்டத்தை உணர்த்தும் இவ்விரண்டு திருக் குறளும் முறையே, கூழிற்குப் பாடிய ஔவைப் பிராட்டி யையும், ஆவின் கடைமணி உகுநீர் கண்டு, தன் அரும் பெறற் புதல்வனை ஆழியின் மடித்த சோழர் பிரானையும் நினைவூட்டுகின்றன.

புணர்ச்சி விருப்புற்ற தலைமகள் ஒருத்தி, தோழி யிடம் தன் நிலைமையை நேரடியாகக் கூற வெட்கி அதனை மறைத்துப் பொதுப்படக் கூறுவாள் போன்று "மகளிர்க்குக் காமம் பனையளவினும் மிகவுண்டாமாயினும் தம் காதலரோடு தினையளவும் ஊடுதல் செய்யாமை வேண்டப்படும்" என்று கூறுகின்றாள். அக்குறள் வரு மாறு:—

**தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்**
**காமம் நிறைய வரின்**

இனி, காம மயக்கத்தால் தினையளவும் தன் பிழையைச் சிந்தியாது பிறனுடைய இல்லின்கண் புகும் ஒருவன் எத்துணைப் பெருமை யுடையவனுயினும் அஃதெல்லா மில்லாகும் என்கிருர் ஆசிரியர்.

**எனைத்துணையர் ஆயினும் என்னும் தினைத்துணையும்**
**தேரான் பிறனில் புகல்.**

அவர் இந்திரன்போல எல்லாப் பெருமையையும் இழந்து சிறுமை எய்துவர் என்று விளக்கிப் போந்தார் பரிமேலழகர். வள்ளுவர் ஆண்மைகளு ளெல்லாம் பெரிய ஆண்மை 'பிறன்மனை நோக்காதது' எனச் சுட்டி ஒழுக்கமுடையாரின் உயர்வையும் விளக்கினர். மேற்குறித்த நான்கு குறளிலும் தினை, பனை என்பன சிறுமை, பெருமை யளவுகளைக் காட்டும் கருவிகளாகப் பயன்படுகின்றன.

## கரும்பும் மூங்கிலும்

புல்லினமாகிய கரும்பை வள்ளுவர் கயவர்க்கு உவமை காட்டுகின்ருர். மெலியார் சென்று தம் குறையைச் சொல்லிய அளவிலே மேலானேர் இரங்கி உதவுவர்; ஆனல் கயவரோ வலிமையுடையவர் நையும் படி துன்புறுத்திய பின்னர்த்தான் உதவுவர்.

**சொல்லப் பயன்படுவர் சான்ருேர் கரும்புபோல்**
**கொல்லப் பயன்படும் கீழ்.**

சான்ருேர் உயர்வையும், கயவரின் இழிவையும் இதன் மூலம் நாம் அறியலாம். கரும்பு, நுனிப்புறம் சுவை குறைந்து, வர வர அடிப்புறம் சுவை மிக்கிருப்பது. மேற்புறம் தின்ற அளவிலேயே சுவை தராது, கொஞ்சம் கொஞ்சமாக அடிவரை வருத்திப் பிழிந்தாலே சுவைப்பட்டு நிற்கும் கரும்பு. கீழாயினுர்க்குப் பொருத்தமான உவமை.

பெண்ணின் தோளுக்குப் புல்லினத்தைச் சேர்ந்த மூங்கிலை ஒப்புக் கூறுவது கவிஞர் வழக்கு. வள்ளுவர்,

வேய்த்தோள் என்றும், காம்பு ஏர் தோள் என்றும், அமை ஆர் தோள் என்றும் சுட்டுவர். வேய்த்தோள் எனவரும் குறள் வருமாறு:—

> முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
> வேலுண்கண் வேய்த்தோள் அவட்கு.

ஒன்றே.முக்காலடியில் வள்ளுவர் காட்டும் கவிதை நயத்திற்கும் சொல்லாட்சி வன்மைக்கும் உவமைத் தேர்வுக்கும் சுருங்கச் சொல்லின் இக்குறளொன்று காட்டப் போதும். இக்குறளில் முறி என்னும் முதற் சொல்லுக்கு, சிறிது சிறிதாக முற்றிவரும் தளிர் என்பது பொருள், இவ்வொரு சிறு சொற்கொண்டு பெண்ணின் இளமை வனப்பையும், வளர்ந்து வளர வேண்டிய நிலை யையும், மின்னுகின்ற வண்ணத்தையும், துவள்கின்ற மென்மையையும், கண்டாரைக் கவரும் பொலிவையு மெல்லாம் தோற்றுவிக்கின்றார் ஆசிரியர். நான் இத் திருக்குறளின் நலம் புனைந்துரைத்தலினும் அவரவர் சிந்தனைக்கு விட்டுவிடுதல் சிறந்ததென எண்ணி அமை கின்றேன். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதமன்றோ!

## கொடியும் கொம்பும்

ஒரு கொடி நன்கு வளரவேண்டுமாயின் அதற்குப் பற்றுக் கொம்பு ஒன்று இன்றியமையாதது. ஆதலின் காமமாகிய இன்பக்கொடி படர ஊடல் என்ற கொழு கொம்பு இன்றியமையாதது.

அங்ஙனமாய ஊடல் ஒருவர்பால் தோன்ற மற்றவர் அதனை நீக்கிக் கூடுதலே, இன்பம் சிறந்து பெருகு வதற்கு உற்ற வழியாகும். அஃதின்றிப் புலந்தாரின் ஊடல் தீர்த்துக் கூடாதொழிதலோவெனின் அஃது இல்லறம் பிழைத்த கொடுமையாகும்.

> ஊடி யவரை உணராமை வாடிய
> வள்ளி முதலரிந் தற்று.

முன்னமேயே நீர்பெருது வாடிய கொடியை அடியிலே வெட்டியதை ஒக்கும் என்பது கருத்து. ஆம்! அது அத்துணைத் துன்பமும் அழிவும் தரவல்லது. ஊடுவோரும் கூடுதற்குப் போதிய அளவில் ஊடல் தவிர்தல் வேண்டும். ஆசிரியர் அதனாலேயே 'காமத்திற்குப் புலவி உணவிற்கு உப்புப்போல' என்ருர். மிகினும், குறையினும் ஊடலும் நோய் செய்யும். எனவே அதன் வரம் பறிந்து மேற் கொள்ளுதலும் தவிர்தலும் வேண்டும்.

இருபக்கமும் கூர்மையுள்ள வாள் போன்ற புலவியின் வலிமையறியாது இருவரும் வரம்புமீறி ஊடி நிற்பாராயின், அது பெருந் துன்பத்திற்கு இடனாய் முடியும். ஊடல் மட்டு மென்ன, எச் செயலாயினும் அச் செயலின் எல்லை யறிந்து செயலாற்ற வேண்டும். இன்றேல் ஒரு மரக்கிளையின் நுனிவரையும் ஏறியவர், ஊக்க மிகுதியால் இன்னும் மேலேறத் தொடங்கின் எங்ஙனம் அவ்வூக்கமே அவரின் உயிருக்கு இறுதியாகுமோ அது போல முடியும்.

> நுனிக்கொம்பர் ஏறினர் அஃதிறந்து ஊக்கின்
> உயிர்க்கிறுதி ஆகி விடும்.

## மரமும் மக்களும்

புலவர்கள், ஆறறிவுடைய மக்கள் தம் நிலையினின்று இழிந்து தாழும் இடங்களி லெல்லாம், ஓரறிவுடைய மரத்தை அவர்க்கு உவமை கூறுதல் பொது மரபு. ஔவையார் கல்லாதவனது இழிவைக் கூறவந்த இடத்து,

> கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
> அவையல்ல நல்ல மரங்கள்—சபைநடுவே
> நீட்டோலை வாசியா நின்ருன் குறிப்பறிய
> மாட்டா தவன்நன் மரம்

எனக் கூறுதல் காண்க வள்ளுவர் இரக்கம் இல்லாத வனேயும், ஊக்கம் இல்லாதவனேயும், மக்கட்பண்பு இல்லாதவனேயும் மரம் எனப் பழிப்பர்.

மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்துகண் ஓடா தவர்.

கண் மக்கட்கு உண்டு, மரத்திற்கும் உண்டு. மரக்கண் கணு என்று சொல்லப்படும். மக்கட் கண் கருணைக்கு வாயிலாய் விளங்கி, இரங்கத்தக்காரிடத்து ஓடி அருள் செய்யவல்லது. மரக் கண்ணோ நம் கண்ணுக்குரிய எத் தகைய தன்மையையும் காட்ட முடியாதது. எனவே, கருணை காட்டி ஓடவல்ல கண்ணிருந்தும் அவ்வோட்ட மில்லாத மக்களின் கண், பெயரளவில் கண்ணெனப்படும் மரக்கண்ணுக்கே ஒப்பாகும். அவர் கண் மரக்கண்ணாயின் அவர் மரமாவர் என்பது குறட் குறிப்பு.

உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கைஅஃ தில்லார்
மரம்மக்க ளாதலே வேறு.

ஊக்கமுடையவரே மக்கள் எனும் தகுதிக்கு உரியர். ஊக்கமில்லாதவர்க்கும் மரத்திற்கும் வடிவு வேற்றுமையே வேற்றுமையாம். வேறு பண்பு வேற்றுமை யின்று. மேலும் மரமாவது காய், பழம் முதலியன தந்தும் கோவில், வீடு, தேர், கப்பல் முதலியவற்றிற்கு உறுப் பாய் அமைந்தும் உதவவல்லது. ஆனால் ஊக்கமில்லாத வனோ, தனக்கோ பிறர்க்கோ பயன் சிறிதுமின்றியே இருப்பவனாவான் எனவே ஊக்கமில்லாதவனை மரத் திற்கும் கீழாகப் பயன் நோக்கிக் கொள்ளலும் கருத்தாம்.

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்.

தான் அழியாமல் நின்றே, தனக்கு எதிர்வந்த எப்பொருளையும் அழிக்கும் வல்லமையுடையது அரம். அது போலப் பிறர் கொள்கையை எல்லாம் மறுத்துத்

தன் கொள்கையைப் பிறர் மறுக்க இயலாது நிலைநாட்ட வல்ல அறிவுக் கூர்மையுடையவரேனும் நன் மக்கட்குரிய பண்புகள் இல்லாவிட்டால் கேவலம் ஓரறிவுடைய மரத்திற்கே அவர் ஒப்பாவர். மக்கட்பண்பு இல்லாத அறிவுடையவனை மகன் எனல் பொருந்தாது. அவன் மரமென இழிக்கப்படுவான்.

மேற்கூறிய மூன்று அருமைத் திருக்குறளால் இரக்கமற்றவனும், ஊக்கமற்றவனும், பண்பற்றவனும் மகன் என்ற சொல்லுக்கு உரியவனல்லன் என்பது பெறும். அன்னுரெல்லாம் ஓரறிவுடைய மரப் பிறப்பிற்கு உரியர். ஆதலால் கண்ணோட்டமும், ஊக்கமும், பண்பும் உடையவனே மனிதன் என்பது திருக்குறள் துணிபு.

## மரமும் வாழ்வும்

இதுவரை, பொதுவாக மரம் என்று சுட்டப் பட்டவை போக, வற்றல் மரம், முள் மரம், பயன் மரம், நச்சு மரம், மருந்து மரம் என்று சிறப்பாகச் சில மரங்களை வள்ளுவர் விதந்து, பண்புப் பெயர் கொண்டு காட்டுகின்றார்.

வற்றி வாடி உலர்ந்து சுள்ளியாயிருக்கிற ஒரு மரம் தளிர்த்துப் பசுமை பெற்று வளர்தல் என்பது உலகில் நடவாச் செய்தி. தன் இயற்கையால் தளிர்க்க இயலா அவ்வற்றல் மரம் தான் நிற்கும் நிலம் வளமுடைய தாயின் ஒருகால் தளிர்க்கவாவது கூடும். ஆனல் அந் நிலமும் பாறை நிலமாயின் அம்மரத்திற்கு என்றும் உய்தியில்லை.

> அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
> வற்றல் மரந்தளிர்த் தற்று.

இக்குறளின் உவமைக் குறிப்பு என்னை ? அன்பில்லாத இல்லறத்தானுக்கு வாழ்க்கையில் எஞ்ஞான்றும் தவச்

சிறிதும் இன்பமில்லை. மேலும் 'அன்பின் வழியது உயிர் நிலை; அஃதிலார்க்கு என்பு தோல் போர்த்த உடம்பு' என்று ஆசிரியர் அன்பில்லாத மனிதனை, உயிர்நில்லாத உடம்பை மட்டும் உடையன் என்று கடிவர். எனவே அன்பில்லா உயிர் வாழ்வதென்பது பெயரளவில் உயிர் வாழ்வதாகுமேயன்றி, உண்மை உயிர் வாழ்வாக மாட்டாது.

இனி, காலமறிதல் என்றே ஓர் அதிகாரம் வைத்தருளிய ஆசிரியர், பகைத்திறந் தெரிதலகத்து, ஓர் அரசன் களையப்பட வேண்டுவதாய தன் பகையை அது மெலிதாய காலத்தே அழித்தல் வேண்டுமென்றும், அஃதின்றிக் காலந்தாழ்ப்பனேல் பகை, வன்மைபெற்றுத் தன்னையே திரும்ப அழிக்கும் உரன் பெற்றுவிடுமென்றும் காட்ட, முள் மரத்தைப் பிறிது மொழிதல் அணியாக எடுத்தாள்கின்றார்.

இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து.

முள் மரம், இளஞ் செடியாய் வளரும் பொழுதே எடுத்தெறிதல் மிக எளிது. மரம் பெரிதான பிறகு அதனை வெட்டுதல் எளிதன்று; வெட்டுவோர்க்குப் பெருந் துன்பத்தைத் தரும். சிறுபொறி என்று அசட்டை செய்யின் பெரு நெருப்பாக மாறியபின் அதனை அணைத்தல் இயலாது. எனவே களைய வேண்டியவற்றை, முளையிலேயே கிள்ளி எறிதல்வேண்டும். சிறு செயலால் பெரு நன்மைபெறும் வாய்ப்புக்கு இடனுண்டு.

## மரமும் செல்வமும்

**வா**ழ்க்கையை உண்மை அன்பு வாழ்க்கையாக நடத்தி, உலக நடையினை அறிந்து அதற்குத் தக காரியங்களைச் செய்யும் நயமுடைய ஒருவனிடத்தே செல்வம்சேருமாயின் அஃது ஊருக்கு நடுவிலே பழுத்துக்

குலுங்கி நிற்கின்ற பயன்மரம் போல்வது; இதற்கு மாருக யாருக்கும் எள்ளளவும் கொடாத காரணத்தால் ஒருவராலும் விரும்பப்படாத இவறன்மை உடையவனிடத்திலே இருக்கின்ற செல்வம் ஊர்நடுவே நச்சுமரம் பழுத்திருப்பதைப் போல்வது என்று, ஆசிரியர் பயன்மரம், நச்சுமரம் இரண்டையும் எதிர் எதிராக நிறுத்தி நன்றும் தீதும் நன்கு காட்டுவர்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்ருல் செல்வம்
நயனுடை யான்கண் படின்.

நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

ஒப்புரவறிந்து ஒழுகும் நயனுடைச் செல்வனுக்கும், நச்சப்படாதவனுய நன்றியில் செல்வனுக்கும் உள்ள வேற்றுமை பெரிது. நிறத்தால் ஒன்றுபோல் புறத்துத் தோன்றி, பண்பால் அகத்து வேறுபடும் ஆவின்பாலும் பனங்கள்ளும் போல்வது.

காட்டகத்தே யிருந்தாலும், கோடற்கரிய இடங்களில் இருந்தாலும், மறைந்து இருந்தாலும், வருந்திச் சென்ருலல்லது பெறுதல் இயலாத நிலேயிலிருந்தாலும், பயன்தரும் மரத்தினேத் தேடி அனேவரும் சென்று பயன் துய்ப்பர். நிழல் முதலாக இலே, பூ, காய், கனி, கோடு எனப் பல வகையானும் மக்கள் பயன்பெறுவர். மரம் பழுத்தால் வெளவாலே வாவென்றுகூவி இரந்தழைப்பார் யாரும் வேண்டா. அங்ஙன் எங்கு இருப்பினும் எல்லா வுயிர்க்கும் பயன்படும் மரம் ஒன்று, ஊரினுள்ளே உருவத்தால் பரந்து, அகன்று, பழுத்து நிற்குமாளுல், ஊரார் அனேவரும் எளிதின் பயன்பெற்று உவந்து மகிழ்வர். ஆனுல் நச்சுமரம் காட்டில் இருந்தால் என் ? நாட்டில் இருந்தால் என் ? கோடற்கரிதாய் விளங்கினும் என் ? கோடற்கெளிதாய் விளங்கினும் என் ? ஊர்ப்

புறத்தே ஒதுங்கின் என் ? ஊர் நடுவே இருப்பின் என் ? வளமாய்ப் பழுத்துக் குலுங்கில் என் ? வற்றிச் சாம்பி வீழில் என் ? ஒருயிர்க்கும் உதவா அந்நச்சு மரத்தைப் பற்றி எண்ணுவாரும் இரார்.

ஆனால், ஊர் நடுவே அந்நச்சுமரம் பழுத்துக் கண் கவர நிற்குமாயின் ஒருகால் அறிந்தோ அறியாமலோ சிறுபெருந் தீயவிளைவுகள் அதனால் ஏற்படுதல் கூடும். நன்மை தாராதாயினும் தீமை செய்யாதென்று உறுதி கூறுதல் இயலாது. நல்லார்கட்பட்ட வறுமையினும் தீயோர்கட்பட்ட திரு துன்பம் தரும் என்பது பொய்யா மொழி.

ஈண்டு, ஒப்புரவறிதல் அதிகாரத்திலே செல்வர்களை மூன்று வகையாகப் பிரித்து அவர் செல்வப் பயனையும் மூன்றாகப் பிரித்து அவற்றின் சிறப்புக்களை உவமை மூன்றால் விளக்கிக் காட்டும் வள்ளுவரின் நுட்பம், நமக்கு மிகப்பெரிய உலகியல்புகளைத் தெள்ளிதின் அறிவுறுத்து கின்றது. இங்ஙனம் அஃகியகன்ற அவர் குறளால் நாம் பேரறிவு பெறுகின்றோம்.

பேரறிவாளனிடத்துள்ள செல்வம் ஊருணி நீர் நிறைந்தாற் போல்வது; நயனுடையானிடத்துள்ள செல்வம் பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தனையது; பெருந் தகையான்கட்பட்ட செல்வம் மருந்தாகித் தப்பா மரத்தை யொத்தது என்பது ஆசிரியர் உவமைக் குறிப்பு.

ஊருணி, எக்காலத்தும் யார்க்கும் இவ்வள வென்னாது தவிராது பயன்தந்து வான் மழைபொழியத் தான் பாழ்படாமல் நிற்பது. பயன்மரம், உள்ளூர்ப் பழுத்த காரணத்தால் பருவகாலத்தில் எல்லார்க்கும் தான் எவ்வளவு பயன்தரமுடியுமோ அவ்வளவும் தந்து நீண்ட நாளிருந்து இனப்பெருக்கம் செய்து பின்னும் பின்னும் உதவுவது. அனைவர்க்கும் எளிதில் கிடைக்கக்கூடிய

இடத்திலிருக்கும் மருந்து மரமோ, தன்னைத் தேடி வந்தார்க்குத் தன்னையே தந்து அவரவர் பிணி போக்கி உதவி, தனது குறையைக் கருதாது பிறரது துன்பம் துடைத்துத் தான் சிறிது சிறிதாக நலிவது.

அருமையான இம்மூன்று உவமைகள் மூலம் செல்வப் பயனை மிக நுண்ணிதின் பிரித்து, விளக்கி, வரம்புகட்டிக் கவிச்சுவைபடக் காட்டிய சிறப்பொன்றே, நயனுடைப் பெருந்தகைப் பேரறிவினராகிய தெய்வப் புலவரின் மாட்சி தெரிக்கவல்லது. அம்மருந்துக் குறள் வருமாறு :-

> மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
> பெருந்தகை யான்கண் படின்.

இக்காலத்து ஆங்காங்குக் காணப்பட்டு வரும் தண்ணீர்ப் பந்தர், அறக்கூழ்ச்சாலை, அறமருத்துவமனை முதலிய ஒப்புரவெல்லாம் வள்ளுவரின் மேற்சுட்டிய மூன்று குறளையும் நமக்கு நினைவூட்டுகின்றன. ' செல்வத்துப் பயனே ஈதல் ' என்ற நக்கீரனாரின் நற்கொள்கை கடைப்பிடிப்பாருக்கு, அவரவர் தகுதி நோக்கித் தனித் தனிப் பெயர் சூட்டித் தகவு செய்யும் அருமைப்பாடு ஆசிரியர் வள்ளுவரின் தனியழகு.

## மரமும் பாவையும்

மரத்தினாற் செய்த பாவையை வள்ளுவர் இரண்டு குறளிலே கையாள்கின்றார்.

> நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
> நாணால் உயிர்மருட்டி யற்று.

> இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
> மரப்பாவை சென்றுவந் தற்று.

இக்குறள்களின் மூலம் முதற்கண் 'பாவைக் கூத்து' என இக்காலத்து அருகிக் காணப்படும் கலை, மிக நல்ல முறை

யில் வள்ளுவர் காலத்தில் வளர்ச்சிபெற்று உச்சநிலையில் (தற்காலத்தில் சினிமாக் காட்சிக் கலையிருப்பது போல) இருந்திருத்தல் வேண்டுமென்பது தெரியவருகிறது.

நாணமில்லாதவர்கள் உயிருடையவர்கள் போல இங்குமங்கும் போய் வருகின்ற நிலைமை, கேவலம் சூத்திரக் கயிற்றால் ஆட்டப்படுகின்ற மரப்பாவை உயிருடையது போல இங்குமங்கும் போய்வருவதை ஒத்தது என்கிறார். மானமழிந்த பின் வாழாமை இனிது, உயிரினும் மானம் சிறந்தது என்று அறிந்து அதனைத் தம் பண்பாக்கி ஒழுகிவந்தவர் பண்டைத் தமிழர். நாணில்லார், உயிரில்லா மரப்பாவை யனையர் என்பது அவர்தம் கொள்கை.

இனி, இரவு, இரவச்சம் என இரு அதிகாரங்களால் பிச்சையெடுப்பதை இழித்துக் கூறும்புலவர்—இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்துகெடுக உலகியற்றியான்! எனப் பிரமனுக்குச் சாபமிட்ட புலவர்—வறுமையுற்று இரப்பார் இல்லையாயின் பெரிய ஞாலத்துள்ளார் வரவு செலவுகள் உயிரில்லாத மரப்பாவை சூத்திரக் கயிற்றால் சென்று வந்தாற்போலும் என்று சொல்வது புதுமையாகவும், மருட்சியைத் தரத்தக்கதாயும் அமைந்திருக்கிறது. இதற்குப் பரிமேலழகர் 'உலகிற்கு இரப்பார் வேண்டுமென்பது கூறப்பட்டது' என்று எழுதியுள்ள விரிவுரை இன்றைய சூழ்நிலைக்குச் சற்றும் பொருத்தமான தாயில்லை.

மக்கள் ஒருவர்க்கொருவர் சேர்ந்து அன்புகொண்டு வாழ்வதற்குக் காரணம் ஒவ்வொருவரின் அடிப்படைத் தேவைகளே யாகும் என்பது ஆழ்ந்து சிந்திப்போர்க்குத் தெளிவாகும் ஒரு கருத்து. ஒருவர்க்கொருவர் தேவையற்றதோர் உலகம் என்றும் எங்கும் இருக்க இயலாது. மக்கள் மக்களாகக் கூடிவாழ்கின்றவரை இவ்வுலகில்

எந்த வகையாலோ ஒரு பொருளை இரப்பாரும் ஈவாரும் இருந்தே தீர்வர். இவ்வடிப்படை உண்மையையே வள்ளுவர் இப்படிக் கற்பிக்கிறார் என்று கொள்வதே சால்புடையது. ஒருவர்க் கொருவர் தேவையில்லை யென்னும் படியான தனியுலகம் ஒன்றுக்கும் பற்றாத கற்பனை யுலகமே யாகும். பௌராணிகர்கள் சுவர்க்கம் என்று பேசுகிறார்களே அது போல்வது. அத்தகைய கற்பனை யுலகு வள்ளுவர்க்கு உடன்பாடன்று. ஆதலின் 'மரப் பாவை சென்று வந்தற்று' என்று நகையாடுகின்றார்.

பரிமேலழகர் உரைத்தாங்கு, இரப்பார் இவ்வுலகத் துக்கு இன்றியமையாதவர்கள் என்பது ஆசிரியர் கருத் தன்று; இரப்பார் ஈவாரின்றி இவ்வுலகு இயங்கல் இயலாது என்பதே வள்ளுவர் கருத்தாம். இரத்தல் என்பதற்குப் 'பொருள் இரத்தல்' என்றுமட்டும் பொருள் கொள்ளாது அறிவு, இன்பம், கல்வி, உடல்உதவி, கலை யுணர்வு, மருத்துவம் முதலிய இன்னோரன்ன நலங்களை இரத்தல் என விரிந்த பொருள் கொள்ளின் வள்ளுவரின் வாய்மொழி நன்கு விளங்கும். எந்நாளிலும் அறிவிலும் குணத்திலும் பொதுவுடைமையையுடைய ஓர் உலகம் இருக்கமுடியாதன்றோ! அவ்வளவிற்கு ஈவாரும் இரப் பாரும் இருந்தே தீர்வர்.

உள்ளும் புறமும் எல்லா வகையாலும் ஈதல் இரத்த லற்ற ஓர் உலகம் தோன்றுமானால் அது மரப்பாவை சென்று வரும் உயிரும் உணர்ச்சியுமற்ற இயந்திர உலக மாகவே யிருத்தலும் கூடும். எனவே, கூடிவாழும் மக்கட்கு உதவிசெய்து கொள்ளும் உலக அறமே வள்ளுவர் தெளிந்து வரையறுத்தார் என்க.

## அரும்பும் மலரும்

ஒரு பூவின் பலபடியான வளர்ச்சி நிலைகளைக் குறிக்க முகை, மொக்கு, அரும்பு, போது, மலர், பூ எனத் தனித்

தனிச் சொற்கள் தமிழ்மொழியில் உண்டு. முகை என்பது பூவின் முதற்பருவமாகும். ஓரளவு சிறிது வெளித்தோன்றித் தெரிகின்ற பருவம் மொக்கு. நிறம் பெற்று நீண்டு நன்ருகத் தன்னைக் காட்டிக் கொண்டிருக்கும் பருவம் அரும்பு. நன்கு வளர்ந்து இன்னும் சிறிது நேரத்தில் மலரவிருக்கின்ற பேரரும்புக்குப் போது என்று பெயர். மலர்ந்தவுடனே மலரென்றும், பின் வாடும்வரைக்கும் அதற்குப் பூ வென்றும் பெயர்.

ஒரு தலைவன் களவுக்காலத்தே தலைவியைப் பிரிய எண்ணினுன். அதனை அவனது குறிப்பினுல் தலைவி உணர்கிருள். தனது நாணத்தால் தான் உணர்ந்ததைத் தலைவனுக்குச் சொல்லமுடியாது தவிக்கிருள். சொல்லவோ மெல்லவோ இயலாத தலைவியின் இரண்டுங்கெட்ட நிலையைத் தலைவன் தெளிவாக உணர்கிருன். உணர்ந்து தோழியிடம், தலைவிக்கு ஏதோ ஓர் உள்ளக் கருத்து இருக்கிறது. அதை அவள் வெளிச்சொல்ல நாணுகிருள் என்று தான் கண்டுகொண்டதை நயமாக 'பேதை நகை மொக்குள் உள்ளது ஒன்று உண்டு, என்று தெரிவிக்கிருன். இந்நிலையை விளக்க முகை மொக்கையும் அதன் உள்ளடங்கியிருக்கும் நறுமணத்தையும் உவமை காட்டுகிருன். 'முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல்' என்பது அப்பகுதி. தலைவி இடையீடற்ற இன்பத்தை வேண்டுகின்ருளாதலின், தலைவனின் பிரிவை அவள் விரும்பவில்லை. அவளின் நகைமொக்குளாய புன்சிரிப்பின் உள்ளீடான கருத்து அதுதான்.

உலகில் நகை பிறக்கும் சூழ்நிலையும் அவ்வவற்றின் குறிப்பும் பயனும் பல்வேறு வகையன. ஈண்டுத் தலைவியின் சிரிப்பு நன்மையையே விளைக்கும் தன்மையது என்பதை முகைமொக்குள் உள்ள நாற்றம்போல் என்ற உவமை புலப்படுத்துகிறது. நாற்றம், நறுமணம். முகை

மொக்கும், நகை மொக்கும் ஓராற்ருன் வடிவாலும் ஒப்புமையுடையன. தலைவியின் புன்முறுவல் கண்ட தலைவனுக்கு முகை மொக்கு நினைவுக்கு வருதல் பெரிதும் இயல்பானதே. எனவேதான்,

> முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
> நகைமொக்குள் உள்ளதொன்று உண்டு

என்கிருன். வாய்விட்டு வெளிப்படையாய்ச் சொல்ல வியலாக் கூட்ட இன்பத்தை விரும்பும் தலைவியின் உள்ளக் கிடக்கையை, மறைந்திருக்கும் நறுமணத் திற்கு ஒப்பாக்கி, 'ஒன்று' எனச் சுட்டிக் குறிப்பறிவுறுத் தும் புலமை மிக்க தலைவனின் திறம் நனி நயம் மிக்கது.

தலைவியின் நாணத்தையும் உள்ளக் கருத்தையும் அவளது பேசா நிலையில் வைத்துக் காட்டிய புலவர், அவள் நிலை மாறுபாட்டை அவளையே வாய்திறந்து பேச வைத்துப் பிறிதோரிடத்தில் காட்டுகின்ருர். கடமை யுணர்வால் உந்தப்பட்ட தலைவன் சின்னுளில் பிரியா விடை பெற்றுத் தலைவியை விட்டுப் பிரிகிருன். இப் பொழுது தோழியும் தலைவியும் மட்டுமே இருக்கின்றனர். இரவில் உறங்கும் பொழுது கனவில் தலைவனைக் கண்டு கூடி மகிழ்ந்து இருந்த காரணத்தால், காலையில் தலைவி படுக்கைவிட்டு எழுந்ததும் அவனது பிரிவை நினையாத வளாய் இருக்கிருள். நேரம் செல்லச் செல்ல, பிரிவுத் துன்பம் அவளை வாட்டத் தொடங்குகிறது. மாலை நேர மும் ஒரு வழியாக வரத் தொடங்குகிறது. மாலைக் காட்சி கள் அனைத்தும், தலைவனில்லாக் காரணத்தால் அவளை வருத்தி அலைக்கழிக்கின்றன. தோழி இதைக் கண்ணுற் றுத் தலைவியிடம் "நீ காலையிலெல்லாம் மகிழ்வுடனிருந் தனையே! இப்போழ்து மாலையிலே இங்ஙனம் வருந்தக் காரணம் யாது எனக் கேட்கிருள். அதற்குத் தலைவி தன் காமநோயின் படிப்படி வளர்ச்சியை,

காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்

எனக் கட்டுரைக்கின்ருள்.

அரும்பு, போது, மலர் என்று பூவின் மூன்று நிலைகளை இக்குறள் காட்டுகிறது. காமநோயின் இயல்பான படிப்படி வளர்ச்சியைக் காட்ட இதனினும் பொருத்தமான உயர்ந்த உவமை கிடைத்தல் அருமை. உவமைப் பொருத்தம் ஒருபாலிருக்க, தமிழ் மொழியின் சொல்லாற்றலும், பொருள் வேறுபாடு கண்டு பொருத்தி ஆளும் ஆசிரியரின் புலமை ஒட்பமும், குன்றின்மேலிட்ட விளக்கென இதனுல் ஒளிவிடக் காண்கிரேம்,

மேலே, இக்குறளின் கருத்தையும் உவமையையும் பன்மாணும் ஆழ்ந்து சிந்தித்தாற் புறத்துத் தோன்றும் உவமைப் பொருத்தத்தோடு அகத்துத் தோன்றும் உளநூல் பொருத்தமும் மலர் மணமென நுண்ணிதின் விளங்கி நிற்றல் காணலாம். காமம் பெருகுதற்குச் சூழ்நிலையே தலையாய காரணம். புறக் காட்சிகள் ஒருவரின் அகவுணர்வினை மிகுவிக்கவோ குறைவிக்கவோ செய்யும் வன்மை யுடையன. சிறப்பாக, காம எண்ணம் பெருகச் சூழ்நிலையே பெரிதும் துணை நிற்பது. அழகுப் பொருள்களைக் கண்ணுல் காண, நறுமணத்தை மூக்கால் நுகர, சுவைப் பாடல்களைச் செவியால் கேட்கக் காம உணர்வு முறுகி எழும் தன்மையது. காலை நேரத்தில் பூக்களெல்லாம் விரியாது அரும்பாய் நிற்றலாலேயே காம உணர்வும் அரும்பாய் நிற்கிறது. மாலைக் காலத்து, அரும்பு மலர்ந்து அழகுபட விரிந்து வண்ணம் காட்டி, நறுமணத்தை நாற்றிசையும் பரப்புவதாலேயே, காமநோயும் கணந்தோறும் வளர்ந்து பெருகி தாழ்துணை துறந்தோர் தனித்துயர் எய்தவும், காதலர்ப் புணர்ந்தோர் களி மகிழ்வெய்தவும் இடம் தந்து நிற்கக் காண்கின்ரேம்.

எனவே, இவ்வருமைத் திருக்குறள், தமிழ்மரபாலும் உவமைப் பொருத்தத்தாலும், உளநூல் இயற்கையாலும் சொற்பொருள் மணம் பரப்பி வள்ளுவர் மீதுள்ள நம் காதலை மிகுவிக்கின்றது.

இனி, வேறோரிடத்துத் தலைமகன் ஒருவன் காமத்தை மலரைக்காட்டிலும் மெல்லிதாகச் சொல்லிக் காமத்தின் நயமுணர்த்துகிறான். தலைவியின் ஊடலைத் தணிக்க முயல்கின்ற தலைவனின் வாய்மொழி அது. "உலகத்துப் பொருள்கள் எல்லாவற்றினும் மெல்லிது மலர். காமவின்பமோ அம்மலரினும் மெல்லிது" என்கிறான் அத் தலைவன். ஏனெனில் குறிப்பும், வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும் ஒரு காலத்தின் கண்ணே ஒத்து நுகர்தற்குரியார் இருவர் அதற்கேற்ற காலமும், இடமும், துணைப் பொருள்களும் பெற்றுக் கூடி நுகர்தலே சரியான காமவின்பமாகும். அவற்றுள் யாதானு மொன்றாற் சிறிது வேறுபடினும் காமவின்பம் சிறவாது. இப்பொழுது தலைவன் கூடற்குறிப்பினனாய் இருக்க, தலைவியோ ஊடிநிற்கும் நிலையினளாயிருக்கிறாள். குறிப்பு ஒவ்வாமையின் காமவின்பம் சிறக்காது. எனவே தலைவன்

> மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
> செவ்வி தலைப்படு வார்

என்று கூறி இன்பத்தின் நுண்ணிய மென்தன்மையை உணர்த்தினால் தலைவி தன் ஊடல் தீர்வாள் என்று எண்ணுகிறான்.

அங்ஙனம் தலைவி ஊடி நிற்பதற்குரிய காரணந்தான் யாது? தலைவன் வளையமாகத் தொடுக்கப் பெற்ற ஒரு பூமாலையை அணிந்து வந்தான். தலைவி முன்னமேயே தலைவனோடு ஊடவேண்டும் என்ற திட்டத்தோடு இருக்கிறாள். எனவே அவனைச் சந்தித்ததும் அவன் அணிந்திருந்த மாலையைக் காரணமாகக்கொண்டு ஊடல் செய்

கிருள். தன்னுல் காதலிக்கப்படுகின்ற வேருெருத்தியைக் குறிக்கொண்டு தான் இப்பூவணியைப் புதுவதாக அணிந்துவந்திருக்கிருன் என்று அவன்மேல் பொய்க் குற்றம் சுமத்திக் கோபமுறுகிருள். இதனைத் தலைவன் தோழிக்குக் கூறுவதாக அமைந்த பாடல் வருமாறு:—

கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியை
காட்டிய சூடினீர் என்று.

இனி, மலர், பூ என்ற இருசொற்களும் மேற்குறித்த மூன்று இடங்கள் போக இன்னும் எட்டு இடங்களிலே சுட்டப்படுகின்றன. அவற்றுள் மூன்று குறளில் 'மல ரன்ன கண்ணுள்' 'பூவன்ன கண்ணுள்' என்று உவமை மாத்திரையாய் அவை கையாளப்படும்.

அடுத்துப் பிரிந்து சென்ற தலைவனை நினைந்து அழுது துன்புறுகின்ற தலைவியை நோக்கி 'முன்னர் உன் கண்களைக் கண்டு மலர்கள் ஒளியிழந்து நாணி யிருந்தன; ஆனுல் இன்று நீ தலைவனை நினைந்து அழுத லால் அம்மலர்கட்கு உன் கண்கள் நாணின' என்று தோழி கூறுவதாக ஒரு குறளும்; தன் ஒருவனுலேயே காணப்பெற்ற தலைவியின் கண்களுக்குப் பலராலும் காணப்படும் பூக்கள் ஒவ்வா தென்று தலைவன் தன் நெஞ்சுக்குத் தானே அறிவுறுத்துவதாக ஒரு குறளும் காணக்கிடக்கின்றன. முதற் குறளில் தலைவியின் கண்ணிலும் நறுமலர்கள் சிறந்தனவாகவும், இரண்டாங் குறளில் பூவிலும் சிறந்ததாகத் தலைவியின் கண்ணை யும் எதிர் எதிராகக் காலமும், இடமும் நோக்கி ஆசிரியர் கவினுறக் காட்டுகின்ருர். அக் குறள்கள் வருமாறு:—

சிறுமை நமக்கொழியச் சேட்சென்ருர் உள்ளி
நறுமலர் நாணின கண்.

மலர்காணின் மையாத்தி நெஞ்சே, இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று.

இனி, திருக்குறளின் முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்துப் பகுதியின் மூன்ருங் குறள்

> மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார்
> நிலமிசை நீடுவாழ் வார்

என்பது. இதற்குப் பரிமேலழகர் 'அன்பால் நினைவாரது நெஞ்சக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளை இடைவிடாது நினைப்பவர் எல்லா வுலகிற்கும் மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார்' எனப் பதசாரம் எழுதிப் போந்தார். ஈண்டு மலர் என்பது மக்களின் நெஞ்சிற்கு உவமிக்கப்பட்டு, பின் வடிவு ஒற்றுமையால் தாமரைப்பூ எனச் சிறப்புப் பொருள் தந்து நிற்கின்றது. 'பூ வெனப்படுவது பொறிவாழ் பூவே' என்பது நம் முன்னோர் கருத்து.

இக் கருத்திற்கு அரண்கோலும் முறையில்,

> வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
> உள்ளத் தனையது உயர்வு

என்று வள்ளுவர் ஊக்கமுடைமை அதிகாரத்திலே தண்ணீர் உயர உயர, அத் தண்ணீரிலுள்ள பூக்களின் தாள்கள் நீள்வதைப்போல, ஊக்கம் உயர உயர மக்களும் உயர்வடைவர் என்று அமைத்திருக்கின்ருர். ஈண்டு, பொதுவாக நீரில் வளர்கின்ற எல்லாப் பூக்களை யும் மலர் என்பது குறிக்குமாயினும், அவற்றுள் சிறந்த தாமரையைக் குறிக்கிறது என்று கூறுதல் அமை வுடையதே. பயனும், பருமையும், மணமும், அழகும், வாழ்வும், வண்ணமும் முதலிய எல்லாத் தன்மையையும் நோக்கியே தாமரைக்குத் தலைமை கொடுத்தனர் போலும். 'குளத்திற் கணியென்ப தாமரை' என்பது நான்மணிக்கடிகைத் தொடர்.

ஆனல், இன்றைய தமிழ்நாட்டில். பெரும்பாலான பெண்கள் தலைமை கொடுத்துத் தலையில் அணிவது

'கனகாம்பரம்', 'டிசம்பர்' போன்ற பூக்களேயாகும். இவைபோன்ற நாருமலர்கள் (மண மற்ற பூக்கள்) வள்ளுவர் காலத்தும் பரிமேலழகர் காலத்தும் தமிழ் நாட்டில் பறிப்பாரும், சூடுவாரும், புகழ்வாருமின்றி இருந்தன என்பது ஒரு குறளின் மூலம் நாமறியக் கிடக்கின்றது. அக்குறள் தாம் கற்ற நூலைப் பிறர் அறி யும் வண்ணம் விரித்துரைக்க மாட்டாதவர், கொத்தின் கண்ணே மலர்ந்து வைத்தும் நாருத மணமற்ற பூவை யொப்பர் என்ற கருத்தை விளக்க எழுந்ததாகும். அக்குறள் வருமாறு:-

> இணருழ்த்தும் நாறு மலரனையர் கற்றது
> உணர விரித்துரையா தார்

'செவ்வி பெற மலர்ந்து வைத்தும் நாற்றமில்லாத பூ' சூடப்படாதவாறுபோல, நூலைக்கற்று வைத்தும் சொல்ல மாட்டாதவர் நன்கு மதிக்கப்படார் என்றமையின் இது தொழிலுவம மாயிற்று' எனப் பரிமேலழகர் இதற்கு விரி வுரை தருவர். ஆனால் நாகரிகத்தின் உச்சியிலே ஊசலாடுவதாகத் தம்மை எண்ணிக் கொண்டிருக்கும் மகளிர் பலர், இன்று நாருமலரையே தேடி வாங்கி அணிகின்றனர். இது காலத்தின் கோலமேயாகும். கற்றார் சொல்வன்மையுடையராய் இருத்தல் இன்றி யமையாதது என்பது ஆசிரியர் கருத்து. இன்றைய விஞ்ஞான அறிவுலகம் கற்ற செலச் சொல்லும் சொல் வல்லாரையே பெரிதும் விரும்புகிறது. தமிழ்நாடு, கல்லாச்சொல்வல்லாரையும், கற்றதுணர விரித்துரை யாப் பட்டத்தாரையும் இன்று பெருக்கி, நிலை தாழ்ந்து நிற்கின்றது. கற்றார் சொல்வன்மை பெற்றுக் கசடற மொழிவராயின், உமிக்குத்திக் கை வருந்துவதனைய கல்லார் சொற்பொழிவுக் கேள்வி கைவிடப்படும். நாடு மணம்பெற நற்கருத்துக்களும் பரவும்.

## தாமரையும் குவளையும்

தாமரை, குவளை, அனிச்சம் என்ற இம்மூன்று மலர்களும் வள்ளுவரால் பெயர் சுட்டப்படும் பெருமை வாய்ந்தன. இலக்குமி. திருமால் இருவரையும் குறிக்க வேண்டியவிடத்து ஆசிரியர் திருவைத் 'தாமரையாள்' என்றும், திருமாலைத் 'தாமரைக்கண்ணன்' என்றும் கணவனையும் மனைவியையும் தாமரையைப் பொது வாக்கிக் குறிப்பிடுவர்.

மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்

சோம்பலைப் போக்கி இடைவிடாது மெய்ம்முயற்சி யுடையானிடத்தே தாமரையில் வீற்றிருப்பவளாய இலக்குமி தங்கியிருப்பள். நேர்மாறாகச் சோம்பேறியா யிருப்பவன் இடத்தும் ஒருத்தி சென்று தங்குவாள். அவள் பெயர் மாமுகடி (கரு நிறமுடைய மூத்தவள்). முயற்சியுடையான் இடத்தே சீதேவியும், சோம்ப லுடையான் இடத்தே மூதேவியும் தங்குவர் என்பதன் மூலம் அவ்விரு தன்மையினாலும் வரும் உயர்வும், தாழ்வும் காட்டி, மடியின்றி ஆள்வினையுடையராய் மக்களிருத்தல் வேண்டும் என்று ஆசிரியர் வன்புறை செய்வர்.

தலைவியின் கூட்ட இன்பத்தில் பெரிதும் மயங்கிய தலைவனை நோக்கி, அவன் பாங்கன், நிரதிசயவின்ப மாகிய பேரின்பத்திற்குரிய நீ, இச்சிற்றின்பத்தை நாடி இங்ஙன மிருத்தல் தகாதுகாண் என இடித்துரைத்தான். தலைவன் மறுமொழியாக இரு வேறு இன்பங்களையும் ஒப்புநோக்கி,

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு

என எதிர் வினவுகிறான். உலகைத் துறந்து தவயோகங் களான் வருந்தி செந்தாமரைக் கண்ணனுடைய

திருமாலுலகை அடைந்து பெறும் இன்பத்தினும் தாம் விரும்பும் மகளிரின் மெல்லிய தோளின்கண் துயின்று ஐம்புல நுகர்ச்சியும் எளிதிற் பெறும் இன்பம் பெரிது என்பது கருத்து. கண்காணு வைகுந்த இன்பத்தினும், காணக்கிடக்கும் இவ்வைய மடந்தையின் தோளின்பம் சிறந்தது என்பது அத்தலைவனின் உணர்ச்சித் துணிபு.

இனி, நலம் புனைந்துரைத்தல் அதிகாரத்திலே குவளை மலர் சுட்டப்படுகிறது. குவளை மலர் வானை நோக்கிச் செம்மாந்து மலர்ந்திருப்பதைக் கண்ட ஒரு தலைவனுக்குத் தன் தலைவியின் கண் அழகு நினைவிற்கு வருகிறது 'தலைவியின் கண்ணழகு எங்கே! இக்குவளை யின் அழகு எங்கே!' என்று அவன் சிந்தனை ஓடுகிறது. 'என் காதலியின் கண்ணழகை இக் குவளைமலர் கண் பெற்றுப் பார்க்கக்கூடுமாயின் நிலைமை என்னுகும்' என்று கற்பனையை இன்னும் கொஞ்சம் நீட்டுகிருன். குவளைமலர் நாணத்தால் வெட்கி முகங்கவிழ்ந்து ஐயோ ! பாவம்! நிலத்தையன்ரே பார்க்கும் என்று முடிவு கட்டு கிருன்.

> காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
> மாணிழை கண்ஒவ்வேம் என்று

காணக்கண்ணும், பெண்மைக்குரிய நாணவுணர்ச்சியும் இருந்தால் குவளை மலர் வானைநோக்கி மலராது. எனவே பண்பானேயன்றித் தொழிலாலும் தலைவியின் கண்ணுக் குக் குவளை மலர் ஒவ்வாதென்பது கருத்தாம்.

### அனிச்சமும் மென்மையும்

இவ்வதிகாரத்திலேயே மூன்று குறளில் அனிச்சப்பூ மெல்லக் காட்சியளிக்கிறது. மூன்று இடங்களிலும் அனிச்சம் மென்மைத்தன்மைக்கே எடுத்துக்காட்டப் பெறுகிறது.

எல்லாப் பூவினும் அனிச்சமே நீ மென்மை யுடையை, ஆனால் எம்மால் விரும்பப்படும் தலைவி நின்னினும் மெல்லிய இயற்கையுடையள்;

நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்

எனவே 'யானே மென்மையுடையேன் என்னும் தருக்கினை நீ யொழிவாயாக' என்று தலைவியை உற்றறிந்த தலைவன், அவளின் ஊற்றினிமையை முதற்கண் பாராட்டுகின்றான்.

அடுத்து அவளின் இடையின் மென்மையைக் களி துளும்பக் காட்டுகிறான். தலைவி தன் மென்மையைக் கருதாது அனிச்சப்பூவைக் காம்பு களையாது தலையிற் சூட்டிக்கொண் டிருக்கிறாள். அதைக் கண்ணுறுகிறான் தலைவன். கண்டு மருட்கை யடைகிறான். இப் பூவின் பாரத்தைத் தாங்காது, ஐயோ! அவளின் இடைமுறிந்து விடுமோ என்று ஏங்குகிறான்.

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை

என்று அலறுகிறான். அம்மலரின் காம்பின் கனம் தாங் காது இடை முறியும்; முறிந்தால் அதற்குச் செத்தார்க் குரிய நெய்தற் பறையன்றோ அடிபடும்.

இறுதியாக அவளது பாதங்களின் மென்மையையும்

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்

எனச் சுட்டுகிறான். ஈண்டு நெருஞ்சிப் பழம் என்றது நெருஞ்சி முள்ளை.

இவ்வாறாக, நலம்புனைந்துரைத்தல் அதிகாரத்தின் தலைக்குறளாக (முதற்குறள்) அவளின் உடல் மென்மை யையும், இடைக் குறளாக (ஐந்தாம் குறள்) அவள் இடை

மென்மையையும், அடிக்குறளாக (பத்தாம் குறள்) அவள் அடி மென்மையையும் அனிச்சப் பூக்கொண்டு காட்டு கின்ற முதற் பாவலரின் புலமையை அறியுந்தோறும், அவரைப் பற்றிய நமது முன்னேய அறியாமை விளங்கித் தோன்றுகிறது. இவ்வெல்லாம் ஓர்ந்தே சங்கச் சான்ருேர் வள்ளுவரைத் தெய்வப் புலவர் என்றனர் போலும்.

இத்தெய்வப் புலவர் அனிச்சப்பூவின் இயற்கை மென்மையை அளந்துகாட்டும் மற்ருேர் இடமும் உளது. விருந்தோம்பல் அதிகாரத்திலே

> மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து

எனவாங்கு உணர்த்துவர். இக்குறளால் அனிச்ச மலர், கையில் எடுத்து மூக்கால் மோந்த அவ்வளவிலேயே வாடிவிடும் இயற்கையது என்பதை நாமறிகிருேம்.

இங்ஙன மெல்லாம் வள்ளுவரால் எடுத்தாளப்பட்ட அனிச்சப் பூ எது? இந்நாளில் யாண்டேனும் இஃதுண்டோ? குறளிலும் பிற தமிழ் நூல்களிலும் வரும் அமைப்பு, தன்மை முதலிய குறிப்பைக்கொண்டு ஏடு தேடுவதுபோல் இதனையும் தேடிக்காண வேண்டும். பெருவரவிற்ருய் இலக்கியங்களில் காணப்படும் இப் பூ முற்றும் அழிந்தொழிந்திராது. தேடின் குறிஞ்சிப் பூப்போல் எங்கேனும் அரிதிற் காணப்படும் என்பது என் நம்பிக்கை.

## காயும் கனியும்

இனியவை கூறல், புலவி என்னும் இரு அதிகாரங் களில் காயும் கனியும் தொடர்ந்து உவமையாக வந்து வெவ்வேறு பொருள்களைத் தருகின்றன. இனிய சொற்

களைக் கனியென்றும் இன்னச் சொற்களைக் காயென்றும் ஆசிரியர் சுட்டுகின்ருர்.

> இனிய உளவாக இன்னத கூறல்
> கனியிருப்பக் காய்கவர்ந் தற்று

“அறம் பயக்கும் இனிய சொற்களும் தனக்குளவாயிருக்க அவற்றைக் கூருது பாவம் பயக்கும் இன்னச் சொற்களை ஒருவன் கூறுதல், இனிய கனிகளும் தன் கைக்கண் உளவாயிருக்க அவற்றை நுகராது இன்னத காய்களை நுகர்ந்ததனே டொக்கும். இனிய கனிகளென்றது ஒளவையுண்ட நெல்லிக்கனிபோல் அமிழ்தாவனவற்றை.இன்னத காய்களென்றது காஞ்சிரங்காய் போல் நஞ்சாவனவற்றை. கடுஞ்சொற் சொல்லுதல் முடிவில் தனக்கே இன்னதென்பதாம்” எனப் பரிமேலழகர் இக்குறளுக்குப் பொருள் விரிப்பர்.

> துனியும் புலவியும் இல்லாயின் காமம்
> கனியும் கருக்காயும் அற்று

என்பது அடுத்த புலவிக் குறள். ஈண்டுக் கனியென்றது மிக முற்றி முதிர்ந்த அழுகிய பழம் என்றும், கருக்காய் என்றது இன்னும் காய்ப்பருவத்தை யடையாது துவர்க்கின்ற பிஞ்சையும் குறிக்கிறது. முதிர்ந்த கலாமாகிய துனியும், இளைய கலாமாகிய புலவியும் இல்லையாயின் காமம் செவ்வி முதிர்ந்த கனியும், இளங்காயும் போலும் என்கிருர். துனியில்லாத வாழ்க்கை அழுகிய பழத்தையும், புலவியில்லாத வாழ்க்கை பிஞ்சையும் போல நுகரத் தகுதியற்றது; எனவே காமவின்பம் சிறப்புற வேண்டுமானல் துனியும் புலவியும் இன்றியமையாது வேண்டப்படும் என்பர்.

இனி, மற்ருேர் குறளில் கனி மட்டும் குறிக்கப்படும். அதுவும் பொதுவாக எங்கும் காணப்படும் கனியன்று. காழில் கனியாம். அஃதாவது விதை அல்லது கொட்டை

போன்ற பரல் எதுவுமில்லாத கனியாகும். அக்குறள் வருமாறு:—

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்ருரே
காமத்துக் காழில் கனி

தாம் காதலித்தாரால் தம்மைக் காதலிக்கப்பட்ட மகளிர், காமநுகர்ச்சியின்கண் பரலில்லாததோர் பழத்தைப் பெற்ருேராவர். காழில் கனியென்றது, முழு இன்பத்தையும் தடையின்றி நுகர்வர் என்ற கருத்தைச் சுட்டவந்தது. உலகில் ஒருவனும் ஒருத்தியும் பல்லாற்ருனும் ஒத்து நின்று, குறிப்பு வேருகாது, சூழ்நிலை செம்மையாய் அமையக் கூடிஇன்பம் நுகர்தல் அருமையினும் அருமை. பெரும்பாலும் ஏதாவதோர் நுண்குறை இருந்தே தீரும். குறையற்ற முழு இன்பம் என்று சுட்ட, ஆசிரியர் குறையின்றி முழுவதும் நுகரப்படுவதாய அரிதான காழில் கனியை உவமித்தார். இது கைக்கிளை பெருந்திணைக்கண் சாராது. அன்பின் ஐந்திணை யென்று சிறப்பித்தோதப் பட்ட அற நெறிக்கண்ணே இன்பம் சிறந்து விளங்கும் நல் நிலை. அன்பின் ஐந்திணையுள்ளும் ஒருசிலர்க்கே வாய்க்கும் அருமை நிலை; உயர்ந்த நுண்மையான அநுபவநிலை; காமவின்பத்தின் உயர்ந்த எல்லை நிலை. நிற்க.

## வித்தும் முளையும்

பழத்தை அப்படியே முழுதும் உண்பதற்குச் சில விடங்களில் விதை தடையென்ருலும், அக்கனி போன்ற பல கனிகளை உண்டாக்குவது விதைதான் என்பதை அறிஞர் மருர். விதையின்றேல் பெரும்பாலும் இனப் பெருக்கம் இல்லை. அங்ஙனமாயின் ஆறறிவுபடைத்த மக்களினம் தோன்றுதற்கும் ஒரு வித்து உண்டன்ருே! ஆம்! அவ்வித்தின் பெயர் 'அவா' என்கிருர் வள்ளுவர்.

அவாஎன்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து

எல்லாவுயிர்கட்கும் எக்காலத்தும் கெடாது தொடர்ந்து வருகின்ற பிறப்பினை விளைவிக்கும் வித்து, அவாவென்று சொல்லுவர் நூலோர். எனவே, அவாவின்றேல் பிறப்பில்லை. அவா அறுத்தார் பிறப்பு அறுத்தாராம். இதனையே திருமூலர் 'ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள், ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்' என்று அறுதியிட்டுப் போந்தார். ஆசையை அறுக்கும் வழி யாது? என்னும் வினாவிற்கு விடை தருமாப்போல "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு" எனத் துறவதிகாரத்தில் ஆசிரியர் பற்றச் சொல்வார் போல, பற்றறுக்கும் வழி காட்டுவர். இக்கருத்தினையே வேறொரு முறையில் நீத்தார் பெருமை கூறும் இடத்தில் விளக்கி யருளுவர்.

மக்களினத்துக்கு இன்பம் நுகரும் வாயில்களான ஐந்து பொறிகளும் ஐந்து யானைகள் போல்வன. வாழ்க்கைத் தேரில் அவற்றைப் பூட்டி ஓட்டும் ஒருவன் எஞ்ஞான்றும் விழிப்போடிருந்து அவ் யானைகளை அடக்கியாளல் வேண்டும். இன்றேல் அவை தம் மனம்போன வழியெல்லாம் தேரை இழுத்துச் சென்று அல்லற்படுத்திப் படுகுழியில் தள்ளினும் தள்ளும். யானையை அடக்கி நேர்வழிச் செலுத்த உதவும் கருவி அங்குசம் என்னும் தோட்டி. ஐம்பொறிகளை அடக்க மக்கட்கு உதவும் கருவி அறிவு. எவனொருவன் அறிவென்னும் அங்குசத்தால், ஐம்பொறிகளாகிய யானைகளைத் தத்தம் புலன்களின்மேல் செல்லாது காத்து. வாழ்க்கைத் தேரை செம்மை நெறிச் செலுத்துவானோ அவன் 'வீடு' என்னும் நிலத்தை யடைவான் என்பது ஒருதலை.

உரனென்னும் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து

கரிசல் நிலத்தின் சாரத்திற்கு ஏற்ற பயிர் பருத்தியாமாறு போல, வரன் என்ற 'வீட்டு' நிலத்திற்குரிய வித்து 'ஓரைந்துங் காப்பான்' என்பதாம்.

அன்னார்க்கு இந்நிலத்தில் பிறப்பு இல்லை என்பது கருத்து. எனவே பிறவாமை வேண்டுபவர் இவ்வுலகில் அவாவறுத்து அறம்தேடுதல் அடிப்படையாகச் செய்ய வேண்டுவதாகும். அறந்தேடுதற்கு மக்கள் வாழ்வில் நல்லொழுக்கம் இன்றியமையாதது. தீயொழுக்கம் இதற்கு நேர்மாறான பலனைத் தரும். இதனை வள்ளுவர்,

> நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
> என்றும் இடும்பை தரும்

என விளக்கிப் போந்தார். 'தினை விதைத்தவன் தினையறுப்பான், வினை விதைத்தவன் வினையறுப்பான்' என்பதும் அது. தீயொழுக்கம் இம்மை மறுமையாய இருமையிலும் துன்பம் தரும் என வலியுறுத்த 'என்றும்' என ஒரு சொல் பெய்து அழுத்தம் தருவர். ஒழுகும்பொழுதும் தீயொழுக்கம் ஒருவனுக்குத் துன்பமே என்பதும் குறிப்பு.

இனி, இல்லறத்திலிருப்பான் நல்லொழுக்க நெறி நிற்பதற்குப் பற்பல செயல்முறைகளை ஆசிரியர் விரித்துரைப்பர். அவற்றுள் தலையாயது விருந்தோம்பல். விருந்தோம்பி வேளாண்மை செய்தற்கே ஒருவன் இருந்தோம்பி இல் வாழவேண்டும் என்பது அவர் முடிந்த துணிபு. அங்ஙன் இருந்தோம்பி வாழ்கின்றவன் இம்மையில் பெறும் பயன்களைத் தொகுத்துக் கூறும் ஆசிரியர் இறுதியாகத் தம் புலமை நயம் தோன்ற, விருந்தினரை முன்னே உண்பித்துப் பின் மீதமிருப்பதை உண்ணுகின்ற அவனுடைய வயலுக்கு விதையும் விதைக்க வேண்டுமோ! அது தானாகவே விளையும் என்னும் கருத்துப்பட,

**வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி**
**மிச்சில் மிசைவான் புலம்**

என வினுவழிக் கருத்து விரிப்பர்.

'வயலிற்கு வித்திடவேண்டும்' என்னும் பொழுது அது நன்ருக முற்றிவிளைந்த சோடையற்ற விதையாக இருத்தல் வேண்டும். வெளியே பார்த்தால் நல்ல வித்தைப் போல் தோன்றி உள்ளீடில்லாத பதடியை விதைப்பதால் பயனென்றுமில்லை. மக்களையும் கயவரையும் போலப் புறத்தோற்றத்திலே விதையும் பதடியும் ஒன்றுபோலத்தான் தோன்றும். ஆனல் அகத்தில், பயன் தருவதில் பெரும் வேற்றுமை உண்டு. வள்ளுவர் இப்பதடியைப் பயனில் சொல் பாராட்டுவானுக்கு ஒப்புக் கூறுகிருர். பயனுடையதாயினும், பயனற்றதாயினும் புறத்தோற்றத்தில் 'சொல்' எனவே படும்; ஆனல் அதன் உள்ளீடான பொருளிலும், விளைவான பயனிலும் பெரும் வேற்றுமையுண்டு. எனவே பயனுடைய சொற்களைப் பேசுபவன் மகன்,பயனில்சொல் பேசுபவன் பதடி என்பர்.

**பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்**
**மக்கட் பதடி யெனல்**

அறிவெனும் உள்ளீடின்மையின் மக்கட்பதடி என உவமிப்பர். இப் பதடியென்ற சொல் உலக வழக்கிலே பதர், பொக்கு என வழங்கும். பயனில் சொல் பேசுபவன் என்பதோடு நிறுத்தாது, அவன் பேதைமை விளங்கித் தோன்றப் 'பாராட்டுவான்' எனக் குறித்த ஆசிரியரின் உலகியல் நுட்பம் அறிந்து இன்புறத்தக்கது. பயனில் சொல்லுக்குத் தவச் சிறிதும் இடந்தராத குறள் யாப்பை ஆசிரியர் மேற்கொண்டதும் ஈண்டு நீள நினையத் தகுவது.

இனி, விதைகளின் பெயர் சுட்டிக் கூறப்படுபவை எள், தினை, குன்றி என்பனவாம். சிறுமையைக் குறிக்கத் தினையென்றும், பெருமையைக் குறிக்கப் பனையென்றும் அளவை முறையாகப் பல குறள்களில் தினையைக் கையாண்டமையை முன்னர்க் கண்டோம். அஃதொப்பவே எள்ளும் குன்றியும் சிறுமையளவைக் காட்டவே பயன் படுத்தப்பட்டிருக்கின்றன.

எட்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு

சாலப் பெருமையுடைய ஓர் அரசனுக்கு மிகச் சிறுமை யுடைய உட்பகையிருக்குமாயின் அதன் வழியே பல கேடுகள் உளவாதல் கூடும். எள் மிகச் சிறியது.எள்ளின் பிளவு என்பது பொதுவாகக் கண்ணால் காணக்கூடாத அத்துணை நுண்மையது. அரசனோ பெரியன். அவன் பெருமையை நோக்கக் கண்ணுக்குத் தெரியாத எள்ளின் பிளவையொத்த மிகச்சிறு உட்பகை அவற்கோர் பொருட்டன்றாம். ஆனால் அவன் பெருமையெல்லாம் அழியவரும் கேடு அவ்வுட்பகையாலே வரினும் வரலாம். எனவே எனைத்துச் சிறிதாயினும் உட்பகை எள்ளத் தகுவதன்று, உள்ளி ஒடுக்கத்தக்கதாம் என்பது முடிவு. அடுத்து, குன்றி குறிக்கப்படும் மணிக்குறள் வருமாறு:

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்

குடிப் பிறப்பால் மலைபோலுயர்ந்தாரும் தாழ்தற்கு ஏது வாயசெயல்களை ஒருகுன்றியளவாயினும் செய்வாராயின் தாழ்வர். கலப்பாலில் துளிவிடம் கலந்தாலனையது அவர் செயல். மதக்களிறும் சிறு அரவால் மாய்க்கப்படுமன்றோ. ஈண்டுக் குன்றியென்பதும் சிறுமையளவைக் குறிக்கவே பயன்படுகின்றமையை அறிகிறோம்.

பிறிதோர் குறளில் குன்றிமணியை அதன் நிறங் காரணமாக வள்ளுவர் கையாள்கின்றார். மாசுடையஇன்ப

வாழ்க்கை நடத்தும் பலர், வெளியுலகில் செம்மையுடை யார் போல உலவி வருதல் கண்கூடு. அவர்கள் செய்யும் அறக் கேடுகளும். இழிசெயல்களும் அம்பலத்திற்கு வருதல் இல்லை. வெளியுலகில் அறத்தைப் பற்றியும், உயர்ந்த தொண்டு பற்றியும் அவர்கள் பேசாத நாளோ, கூட்டமோ இராது. பகற்கொள்ளைக்காரன், ஊர்காவலன் உடைதரித்து வெளிவந்தாற்போல, உலகப் பேரவையில் 'சமாதானம் சமாதானம்' என்று அரற்றிக்கொண்டே அதே நேரத்தில் தத்தம் நாட்டில் போர்க்கருவிகளைப் பெருக்கும் இன்றைய வல்லரசுகளை ஒக்கும் இருமுக வாழ்க்கையுடையாரைக் கண்ட வள்ளுவர்க்குக் குன்றி மணியின் இருநிறத் தன்மை ஏற்ற உவமையாக வந்து வாய்க்கிறது.

> **புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி**
> **மூக்கிற் கரியார் உடைத்து**

கூடாவொழுக்க முடையாரின் போலிவேடத்தையும் வஞ்சக உள்ளத்தையும் குன்றிமணியின் செந்நிறமும் அதன் மூக்கில் காணப்படும் கருநிறமும் உவமையாய் நின்று தெற்றெனக் காட்டுகின்றன. எல்லோரும் நாடோறும் காணுகின்ற குன்றிமணியின் இரு வேறு நிறத்தை, ஆசிரியர் கூடாவொழுக்க முடையாரின் இயல்புக்கு ஒப்புக்காட்டும்போது, சொல்லவந்த பொருள் நிறம்பெற்றுப் பளிச்சென மனத்தில் பதிகிறது. குன்றனைய பெரும் பொருளைக் குன்றிகொண்டு விளக்கும் பேராசிரியரின் உவமையாற்றலோடு உவமை எளிமையும் இதனான் விளங்கும்.

இனி, இறுதியாக வள்ளுவர் விதை வளர்ந்து வெளி வரும் முளையைச் சொல்லிற்கு உவமை காட்டும் குறளோடு இப்பகுதியினை முடிப்பாம்.

வளமான நிலத்தில் இட்ட விதையானது முளைக்கும் பொழுது தன் இயல்பு கெடாது பசுமையாய் மெல்லத் தலைதூக்கி வளரும். சாரமற்ற நிலத்தில் ஊன்றிய விதையோ, பசுமையான தன் இயல்பின் நீங்கி, வெளுத் துப்போய் மிக விரைவில் நீண்டு வளர்ந்து தள்ளாடி நிற்கும். 'விளையும்பயிர் முளையிலே தெரியும்' என்றபடி அம்முளையைப் பார்த்த மாத்திரத்தே அது வளர்ந்து பயன்தருமா ? தராதா ? என்பதும், அது கிடந்து முளைத்துவரும் நிலம் வளமற்றதா? வளமானதா? என்பதும் தெரியக் கிடப்பனவாம்.

வெளிவந்த முளையை வைத்து, அது கிடந்த நிலத் தின் தன்மையை அறியுமாப்போல, ஒருவன் பேசும் வாய்ச்சொல் கொண்டு அவன் நலத்தையும் அவன் பிறந்தகுலத்தின்தன்மையையும் தெரிந்துகொள்ளலாம்.

நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்

எனவே, ஒருவனின் பேச்சு நடையே அவன் குலச் சிறப்பைக் காட்டவல்லது. அவன் கல்விச் சிறப்பு, அறிவுத் திண்மை, குலநலம், சூழ்நிலை, குடும்பச் சீர் ஆகிய அனைத்தையும் காட்டும் கருவி அவன்வாய்ச் சொல் என்க.

உ

# ஊர்வினம்

"புல்லின் நுனியின் கண்ணே தினையரிசியின் அளவுக்கும் சிறிதாக ஒட்டிக்கொண்டிருக்கும் பனிநீர், உயர்ந்த பனையின் அளவையும் தன்னுள் அடக்கிக் காட்டுமாறு போல, அளவாற் சுருங்கிநின்று விரிந்த பொருளைக் காட்டவல்ல நூல்" எனக் கபிலர் பெருமானல் சிறப்பிக்கப்பட்ட குறள் நூலிலே வள்ளுவர், ஊர்ந்து வாழ்கின்ற உயிரினங்களில் மூன்றை எடுத்தாள்கின்ருர்.

முதற்கண், அன்புடைமை அதிகாரத்து என்பில்லாத உயிர் குறிக்கப்படுகிறது எலும்பில்லாத உயிராவன, புழு, மூட்டைப்பூச்சி போல்வன. விஞ்ஞான முறையாக இன்று உயிர்ப்பிராணிகளைப் பலவகையாகப் பிரித்துப் பேசுகின்ற நிலையில், முதல் வகையாகச் சுட்டப்படுவது எலும்பில்லாதது என்பதாம்.

எலும்பில்லாதவை வெயிலின் சூடு தாங்காமல் இறந்துபடும் தன்மையன. முகட்டுப் பூச்சி (மூட்டைப் பூச்சி) மறைந்துள்ள மரச்சாமான், படுக்கை முதலிய வற்றை வெயிலில் போடுதல் நம் நாட்டினரிடையே காணப்படும் வழக்கம். கண்ணுக்குப் புலனுகாத கோடிக் கணக்கான (எலும்பற்ற) கிருமிகள், சூரியனின் வெப்பத் தால் நாள்தோறும் அழிகின்றன வென்பது அறிவியல் உண்மை. உடலுக்கு இயற்கையாக வலிவுதருவது எலும் பென்பது இதனுல் தெளிவு.

இஃதொப்ப உயிருக்கு வலிவுதருவது அன்பென்பது உளநூல் உண்மை. உடம்புக்கு எலும்பு போல,

உயிருக்கு எலும்பெனப்படுவது அன்பேயாகும். அன்பின் வழியது உயிர்நிலை. மக்கள் வாழ்க்கைக்கு அன்பு இன்றியமையாதது. அன்பற்ற நிலையினர் தம்மைத் தாமே அழித்துக் கொள்கின்றார்கள்.

பிற உயிர்களிடத்து அன்பற்றவன் அவற்றின் துன்ப நிலை யோராது கேடு சூழ்தல் இயல்பு. அங்ஙனம் கேடு செய்பவனை அறக்கடவுள் ஒறுக்கும். 'ஒருவன் மற்றொருவனுக்குக் கேடுசூழும் செயலை மறந்தும்கூட எண்ணுதல் கூடாது. அங்ஙனம் எண்ணுவானேயாயின் அவனது கேட்டை அறம்சூழும்" என்பது குறள். 'அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றம்' என்றார் விளம்பிநாகனாரும். சிலப்பதிகாரத்தின் உள்ளுறையான மூன்று பெரிய உண்மைகளில் 'அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்' என்பது முதற்கருத்தாகும். வழக்குரை காதை இறுதிக்கண் கண்ணகியின் வாய்மொழியாக வரும் "அல்லவை செய்தார்க்கு அறம் கூற்றமாமென்னும் பல்லவையோர் சொல்லும் பழுதன்றே" என்ற அடிகள் மேற்கூறப்பட்டவற்றை உட்கொண்டு எழுந்தனவாம். 'அல்லாத மாந்தர்க்கு அறம் கூற்றம்' என்றார் பிற்காலத்தாரும். அறம், அறக்கடவுள், கூற்றுவன் எனக் குறித்தாலும், அவனவன் வினை அவனவனைச் சாரும் என்பதே கருத்து. 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பது நம் நாட்டுப் பழமொழி.

இவ்வாறு அஃறிணையின் எலும்பற்ற உடல் இயல்பும் அன்பற்ற மக்களின் வாழ்வியல்பும் முடிவில் தமக்குத் தாமே அழிவாயிருப்பதை ஒத்துக்கண்ட வள்ளுவர்

**என்பில் அதனை வெயில்போலக் காயுமே**
**அன்பில் அதனை அறம்**

என உவமையும் பொருளுமாக வைத்து முடித்தார்.

எனவே அன்பில்லாது உயிர்கட்குத் துன்பம் விளைக்கும் ஒருவன், வெயிலில் செல்லும் தன் செயலாலேயே அழிந்துபடும் எலும்பில்லாத புழுப்போலத் தன் வினையாலேயே அழிவான். அன்பற்ற மக்கள் அழிவார்கள் என்று தீமை காட்டினாலும், அன்புடையராய் வாழ வேண்டும் என்பது தான் ஆசிரியர் நோக்கம்.

புழு, முகட்டுப் பூச்சி போல்வன, எலும்பற்றுப் பிறப்பது போல மக்கள் யாரும் பிறக்கும் போது அன்பற்றுப் பிறப்பதில்லை யன்றோ ? எனவே அன்பை வளர்த்து வாழ்க்கையை நல்லுயிரோடு கூடிய வாழ்க்கையாக ஆக்கிக் கோடல்வேண்டும் என்பது குறட்குறிப்பு.

இனி, எலி, பாம்பு என்னும் இரண்டையும் ஒரு குறளிலே படைமாட்சி கூறவந்தவிடத்து ஆசிரியர் எடுத்தாள்கின்றார். வீரனது ஆண்மைச் சிறப்பைக் கூறும் அழகிய பாடல் அது.

ஆண்மையற்ற வாய்ச்சொல் வீரர்கள் பலர்திரண்டு ஆரவாரித்துக் கொண்டிருக்கிற இடத்து உண்மையான வீரனொருவன் எதிர்த்து வருவானாயின் அவரனைவரும் பரிதிகண்ட பனித்துளிபோல மறைந்து ஓடுவரென்பது நாம் வாழ்க்கையில் காணும் நாட்காட்சி.

ஆயிரக்கணக்கான எலிகள் ஒன்றுகூடி ஆரவாரித்துக் கொண்டு நிற்கின்ற நேரத்து, அவ்விடத்திற்குப் பாம்பொன்று வருமானால் அந்தோ! பரிதாபம்! நிலைமை என்னாகும்! அவ்வெலிகள் பாம்பைக் கண்ணால் காண வேண்டுமென்பதில்லை; பாம்பு சீறுகின்ற ஒலி காதில் விழுவதே அவைகளின் ஓட்டத்திற்குப் போதுமானதாகும். அந்நொடியிலேயே எலிக் கூட்டம் மாயமாய் மறையும்.

**ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை**
**நாகம் உயிர்ப்பக் கெடும்**

கடல்போல ஒலித்து ஆரவாரிக்கும் எலிக் கூட்டம் பாம்பின் சீறல் ஒலி கேட்டமாத்திரமே மறைந்து ஒழிதல் போல, வெறும் ஆரவாரம்மிக்க வீரரல்லாதாரின் கூட்டம் உண்மையான வீரனொருவன் கிளர்ந்தெழுந்த துணை யானே மறைந்து ஒழியும்.

எனவே வீரரல்லாதார் பலர்திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான். அவன் முறுகி எழுந்த துணை யானே அவர்தாம் கெடுவர்.

வீரனுக்குப் பாம்பை உவமைகூறி, வீரரல்லாதார்க்கு எலியை ஒப்புக்காட்டும் இச்செய்தி பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களில் பரந்து காணப்படாததோர் அரிய ஆட்சியாகவே விளங்குகிறது.

வீரன் ஒருவனின் கூற்றுகவரும் கீழ்க்காணும் புறப் பொருள் வெண்பாமாலையடிகள் ஈண்டு நினைவு கூரத் தக்கனவாம். "உறுசுடர் வாளோடு ஒருகால் விலங்கின், சிறுசுடர்முன் பேரிருளாங் கண்டாய்". மிக்க ஒளியினை யுடைய வாளுடனே யான் ஒருகால் தடுப்பின், சிறிய விளக்கின் முன்னர் பெரிய இருள்போல எதிர்ப்படைகள் இரிந்தோடும். விளக்குச் சிறிதாயினும் கொளுத்திய வுடனேயே பெரிய இருள் ஓடும் என்பது, நாகம் மூச்சு விட்ட மாத்திரத்தே கடல் போன்ற திரட்சியையுடைய எலிக் கூட்டம் ஓடும் என்பதை ஒத்து நிற்கின்றது. 'ஆயிரம் காக்கைக்கு ஓர் கல்' என்னும் பழமொழி இதனை நன்கு விளக்கும்.

பாம்பு உயிர்த்தல் என்பது சீறுதல் என்பதாம். அதன் சீற்றநிலையை 'அழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல் பாம்பு', (நெருப்பென்னும்படி நெட்டுயிர்ப்புக் கொள்ளும் கண்டார்க்கு அச்சம் தோன்றும் கடிய வலி யினையுடைய பாம்பு) என்ற திருமுருகாற்றுப்படைப் பகுதியால் நாமறியலாம்.

வீரரல்லாதார் பலரினும் வீரன் ஒருவன் சிறந்தவன் என்பது இக்குறள் குறிக்கும் கருத்தாகக் கொள்க.

இனி, பாம்புமட்டும் இரண்டு குறளிலே தனியாக ஆளப்படுகிறது.

மக்கள் வசிக்கும் ஒரு நாடு எப்படியிருக்க வேண்டும் என்று காட்டவந்த ஆசிரியர் அந்த நாட்டிலே பல்வேறு அரசியல் கட்சிகளும், பாழ்செய்யும்உட்பகையும், கொடிய குறுநில மன்னரும் இருத்தல் ஆகாது என்று விலக்க வேண்டியவற்றைத் தொகுத்து ஒரு குறள் யாத்தார். பின்னர் நட்பியலில், உட்பகையின் கொடுமை நோக்கி, அதற்கோர் தனியதிகாரம் வகுத்து உட்பகை எங்ஙனம் பாழ்செய்யும் என விரித்துரைத்தார். பற்பல உவமைகள் மூலம் உட்பகையின் பல்வேறு நிலைபற்றிக் கூறி இறுதியாக அதன் கொடுமையையும், அதனைத் தொலைத்துவிட வேண்டிய இன்றியமையாமையையும், தொலையா வழி வரும் கேட்டையும் ஒருங்கு மொழிவாராகி உட்பகைக்கு உவமையாகப் பாம்பை எடுத்தாள்கின்றார்.

அகத்தில் உடம்பாடு இல்லாதவருடன் கூடி வாழும் வாழ்க்கை, ஒரு சிறு குடிசையினுள்ளே பாம்போடு உடன் வாழ்தலைப் போன்றது என அச்சமும் அருவருப்பும் உண்டாமாறு

> உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
> பாம்போடு உடனுறைந் தற்று

என்றார். பாம்பு என்று சொன்ன மாத்திரத்தே அச்ச உணர்வு எழுதல் மக்கட்கியல்பு. பாம்போடு உடனுறைதல் என்பதோ எண்ணமுடியாத ஒரு நிலை. அதன்மேல், ஒரு சிறுகுடிசையினுள்ளே பாம்போடு உடன் உறைதல் என்பது அவ் அச்சவுணர்வை மேலும் பெருகச்செய்து, அந்நச்சரவைக் கொன்றாலல்லது அமைதியான வாழ்வில்லை என்ற எண்ணத்தை ஊட்டவல்லது. இக்

குறளுக்குப் பரிமேலழகர் ''இடச் சிறுமையானும் பயிற்சியானும் பாம்பாற் கோட்படல் ஒருதலையாம். ஆகவே அவ்வுவமையால் அவனுயிர்க்கு இறுதி வருதல் ஒருதலையென்பது பெற்றும். இதனாற் கண்ணோடாதவரைக் கடிகவென்பது கூறப்பட்டது'' என விளக்கவுரை எழுதிப் போந்தார்.

தகைமை கருதும் தலையாரை வேந்தன்
நிலைமையால் நேர்செய் திருத்தல்—மலைமிசைக்
காம்பனுக்கு மென்தோளாய்! அஃதன்றே ஓரறையுள்
பாம்போ டுடனுறையும் ஆறு

என்பது அரசியல்பு பற்றிக் கூறும் பழமொழிப் பாடலாகும். 'குடங்கருள் பாம்போடுட னுறைந்தற்று' என்ற குறளடி, 'ஓரறையுள் பாம்போடுட னுறையும் ஆறு' என்ற பழமொழியின் அடிப்படை யென்பதும், வள்ளுவர் குறளின் சில அடிகள் இதுபோலப் பண்டைத் தமிழகத்தில் எல்லாரும் வழங்கும் பழமொழிகளாக உலவி வந்திருக்கின்றன என்பதும் இதனால் நாமறியும் செய்திகளாகும்.

அரவம் பற்றிய அடுத்த குறள் இன்பப் பாலில் அலரறிவுறுத்தல் அதிகாரத்துக் காணக்கிடக்கிறது.

ஒரு தலைவன் களவொழுக்கத்தால் பெருகித் தோன்றும் இன்பம் கருதி வரைவு நீட்டித்தான். இதனைத் தலைவி உணர்ந்தாள். எனவே விரைவில் வரைந்து கோடல் வேண்டும் என்ற தன் எண்ணத்தைத் தலைவனுக்குச் சொல்லவேண்டிய நிலைமை அவளுக்கு ஏற்பட்டது. தலைவனிடம் நேரில் சொல்லலா மென்றாலோ, உடன் பிறந்த நாணம் தடையாயிருக்கிறது. எனவே ஒரு சூழ்ச்சியின் மூலம் தலைவனுக்கு அக்குறிப்பை உணர்த்த எண்ணினாள். மறு நாள் வழக்கம்போல அவளைக் காணத் தலைவன் வந்து வேலியோரமாக

மறைந்து நின்றான். அவன் அங்கே நிற்பதைத் தலைவி அறிந்தாள். எனினும் அவன் இருப்பை அறியாதாள் போலத் தோழியை நோக்கி "சந்திரனைப் பாம்பு பிடிப்பதோ என்றோ ஒரு நாள்தான்; ஆனால் அந் நிகழ்ச்சியோ உலகில் உள்ளாரெல்லாம் காணுமாறு விளங்கித் தோன்றுகிறது; அதுபோலத் தலைவனோடு நாம் தலைப்பட்டதோ ஒரு நாள்தான். ஆனால் அதனாலெழுந்த அலரோ ஊர் நிறைந்திருக்கிறது. இதற்கு நாம் என் செய்வோம்' என்று தலைவன் காதில் கேட்குமாறு கூறினாள். மறைவிலிருந்து இதனைக் கேட்கும் தலைவன், தலைவியின் குறிப்பை யறிந்து வரைவு நீட்டிக்காது விரைந்து மணந்து கொள்ளுவான் என்பது குறிப்பு. அவ் அருமைக் குறள் வருமாறு:—

**கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்**
**திங்களைப் பாம்புகொண் டற்று**

இப்பாடலில் இரண்டு இடத்து வரும் 'மன்'னும் 'உம்'மும் அசைகளாம். எனவே 'கண்டது ஒரு நாள், அலர் திங்களைப் பாம்பு கொண்டற்று' என்பது தான் தலைவியின் வாய்மொழி. குறள் என்றால் குறுமை (அதாவது குட்டை) என்பது பொருள், ஆனால் மேற் பாட்டோ குறுங் குறள் போலும். ஏழுசீர்ப்பாட்டிலே இரண்டுசீர் அசை நிலையாக நிற்க, எஞ்சிய ஐந்துசீர் கொண்டே பெருங்கருத் தொன்றை நயமிக்க உவமை காட்டி நுண்மையாய் விளக்கும் ஆசிரியரின் கவிவன்மை அளவிடற்பாலதன்று.

'திங்களைப் பாம்பு கொள்ளும்' என்ற கற்பனைக் கருத்து வள்ளுவர் காலத்தே நிலவி வந்துள்ளது என் பதை இதன் மூலம் நாம் அறிகிறோம். சிறுபாணாற்றுப் படையில் இக்கருத்து அழகுபட்ட உவமமாக அணி செய்து நிற்கின்றது. "முள்ளையுடைய தண்டினைக்

கொண்ட வெள்ளைத்தாமரையினது அரும்பவிழ்ந்த புதுப் பூ வொன்றில், தேனை நுகர்கின்ற நீல நிறத்தினையும் சிவந்த கண்களையுமுடைய வண்டுக் கூட்டம் மொய்த் திருப்பது; திங்களைச் சேர்கின்ற கரும் பாம்பின் தோற்றம் போல் காண்கிறது" என்ற பொருளுடைய,

"முள்அரை தாமரை முகிழ்விரி நாள்போது
கொங்கு கவர் நீலம் செங்கண் சேவல்
மதிசேர் அரவின் மானத் தோன்றும்"

என்ற அடிகள் நயம் மிக்கனவாகும். 'பையர விழுங்கப் பட்ட பசுங்கதிர் மதியம்' என்பதும், 'நாகத்தால் விழுங்கப்பட்ட நகைமதிக் கடவுள்' என்பதும் திருத்தக்க தேவரின் செஞ்சொற் றொடர்களாம்.

கண்டதோ ஒரு நாள். ஆனால் அதுபற்றி யெழுந்த அலராகிய பழிச் சொல்லோ உலக மெங்கும் பரந்து எங்கு பார்த்தாலும் இதே பேச்சாயிருக்கிறது; எனவே விரைவில் திருமணம் செய்து கொள்ளல் வேண்டும் எனச் சுற்றி வளைத்துப்பேசும் அறிவுமிக்க, நாணம் நிறைந்த பாவையின் பா நயம் உய்த்துணரத்தக்கது.

இவ்வாறாக வள்ளுவர், என்பில்லாதது, எலி, பாம்பு என்ற மூன்று ஊர்வனற்றை நான்கு குறளிலே கையாளு கின்றார்.

௫

# நீர்வாழினம்

'அறிவுக் கடலினின்று முகிழ்த்த அமுதசுரபி' என ஆன்ருேர் பலரால் ஏத்தெடுக்கப்பெற்ற, நவில்தொறும் நயம் கொழிக்கும் நன்னூல் யாத்த வள்ளுவப் பெருமகன் நீர்வாழ்வனவாய உயிரினங்களையும் உற்று நோக்கித் தம் நூலகத்தே ஆங்காங்கு எடுத்தாண்டு இருக்கிருர். அவர் சுட்டும் நீர்வாழ் உயிர்கள் மூன்ரும். அவை முறையே ஆமை, முதலை, மீன் என்பன.

ஆமை நீரின் மேல்மட்டத்திற்கு மிதந்து வருங்கால், தன் கெட்டியான ஓட்டுக்கு வெளியே தன் தலையையும் கால்களையும் நீட்டிக்கொண்டு வருதலும், வேண்டும் போது அங்ஙனம் வெளித்தோன்றித் தெரிவனவாய ஐந்து பகுதிகளையும் உள்ளடக்கி ஓட்டுக்குள் பாதுகாப்பாக ஒடுங்கி இருத்தலும் இயல்பு. இதனைப் பலகாலும் பார்த்திருந்த காரணத்தால் வள்ளுவர் மனிதர்க்கு மெய்யடக்கம் வேண்டற்பாலது என்று கூறவந்த இடத்து உவமையாக ஆமையை எடுத்துக்காட்டி,

> ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
> எழுமையும் ஏமாப் புடைத்து

எனக் குறள் யாத்தார்.

ஆமைபோல ஒரு பிறப்பின்கண் ஐம்பொறிகளையும் அடக்கவல்லனுயின் அவ் வன்மை அவனுக்கு எழு பிறப்பின் கண்ணும் அரணுதலையுடைத்து. ஆமை ஐந்து உறுப்பினையும் இடர் வாராவண்ணம் அடக்குமாறுபோல மனிதனும் ஐம்பொறிகளையும் பாவம் சேராவண்ணம்

அடக்குதல் வேண்டும். ஆமை அங்ஙனம் அடக்கிக் கொண்டபிறகு அதன் ஓடு சிறந்த பாதுகாவலாய் அதற்கு அரண் செய்து நிற்குமாறுபோல, ஐம்பொறி களையும் அடக்கிய மனிதனுக்கு அவ்வொழுக்கமே அரணாய் நின்று காக்கும். அவ்வாற்றலுக்கு, 'ஐந்த வித்தா னாற்றல் அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி' என்ற குறளே சாலும் கரி.

ஆமை சுட்டப்படும் பாட்டில் எண்ணுப் பெயர்களாக ஒருமை, ஐந்து. எழுமை என்பன ஆசிரியரால் கையாளப் படுகின்றன. ஐந்து என்பது ஆமைக்கும் மனிதனுக்கும் பொதுவாய் நின்று ஆமையின் உறுப்பு ஐந்தனையும் மனிதனின் பொறி ஐந்தனையும் நயம்படச் சுட்டி நிற்கிறது.

ஒரு பிறப்பின்கண் செய்யும் வினை எழு பிறப்பின் கண்ணும் தொடரும் என்பது வள்ளுவர் கருத்தாக இதனுள் காண்கிறோம்.

ஒருமை என்று சொல்லிய மாத்திரத்தானே எழுமை என்பதும் வள்ளுவர் நினைவில் தோன்றும் போலும். இப்பாட்டின் நான்கு சீர்களை இருக்குமாறே அமைத்துக் கல்வி யதிகாரத்தில்

**ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப் புடைத்து**

எனக் குறள் யாத்தார். பின்னே பேதைமையைப் பற்றிப் பேசுகின்ற பகுதியில்' 'ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும் தான்புக் கழுந்தும் அளறு' என ஒருமை யோடு எழுமையையும் மீண்டும் எடுத்தாள்வர்.

எழுமை, என வருமிடங்களி லெல்லாம் பரிமேலழகர் 'வினைப்பயன் தொடரும் ஏழு பிறப்பு' என்று பொருள் எழுதுவர். ஆசிரியர் வள்ளுவர் 'எழுமை' என்ற

சொல்லைப் போல 'எழுபிறப்பு' என்ற வேறொரு சொல்லையும் கையாண்டுள்ளார். அங்ஙனம் வருமிடங்களில் பரிமேலழகர் 'எழுவகைப் பிறப்பு' என்று எழுதி அவை பறப்பன, நடப்பன, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம், மானுடம், தேவர்' என விரிவுரையும் தந்து, இவ்வெழு வகைப் பிறவியுள்ளும், ஒவ்வொரு இனமாயும் இத்தனை இத்தனை முறை பிறக்கவேண்டும் என்று மேற்கோள் காட்டவும் செய்வர்.

அம்மேற்கோள் செய்யுள்

> ஊர்வ பதினொன்றும் ஒன்பது மானுடம்
> நீர்பறவை நாற்காலோர் பப்பத்து—சீரிய
> பந்தமாம் தேவர் பதினா லயன்படைத்த
> அந்தமில்சீர்த் தாவரநா லைந்து

என்பது. இம் மேற்கோள் கணக்குப்படி இவ்வெழுவகைப் பிறப்புக்குள்ளே எண்பத்து நான்கு தடவை பிறக்க நேரிடும் என்றாகிறது. இம் மேற்கோள் செய்யுள் தானும் எந்நூலைச் சார்ந்தது என இன்று அறியுமாறில்லை.

இனி, இந்த இருபதாம் நூற்றாண்டில் பரிமேலழகர் உரைக்குத் தெளிபொருள் வரையப் போந்த, கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் இம் மேற்கோள் செய்யுளுக்கு விரிவுரை எழுதிய இடத்து இதன் பொருள்: "ஊர்ந்து செல்லும் பிராணிகளின் பிறப்பின் வகை பதினொன்று, மனிதப்பிறப்பின் வகை ஒன்பது, நீரில் வாழும் பிராணிகள், பறவைகள், மிருகங்களாகிய இவைகளின் பிறப்பின் வகை தனித்தனிப் பத்துப் பத்து, சிறப்புப் பொருந்திய முறைமையினையுடைய தேவப் பிறப்பின் வகை பதினான்கு, பிரமனாற் படைக்கப்பட்ட முடிவில்லாத சீரினையுடைய நிலைத்திணையின் பிறப்பின் வகை இருபது என்பது. இங்கு மொத்தமாகும் எண்பத்து நான்கினையும் எண்பத்து நான்கு இலட்சமெனக் கொள்க. என்னை?

நானிலநீர் பைமுட்டை நால்வகை யோனிசுரர்
மானிடநீர் வாழ்பறவை மாகிருமி-ஞானமிலா
மண்பட்ட தாவரமென் றேழாய் வரும்பவநா
றெண்பத்தி னன்கா யிரம்

என்று கூறப்படுதலின் என்க'' என விளக்கவுரை தந்தனர்.

ஆசிரியர் வள்ளுவர் 'எழுமை', 'எழுபிறப்பு' இவ்விரு தொடர்களையும் ஒரே விடத்து நினைந்து ஒன்ருக்கி,

'எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு'

என ஒருகுறள் யாப்புறுத்தார். இக்குறளின் விரிவுரையில் பரிமேலழகர் 'எழுமை யென்பது வினைப்பயன் தொடரும் ஏழு பிறப்பினை. அது வளையாபதியுள் கண்டது' என எழுதிப்போந்தார். வளையாபதி நூலும் இன்று நமக்குக் கிடைக்குமாறில்லை. கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் இக்குறளின் விளக்கவுரையில் 'எழுமை எழுபிறப்பு என்றற்கு ஏழேழு தலைமுறை யெனினுமாம்' எனத் தன் கருத்தையும் சுட்டிப்போந்தார். இன்று நம் நாட்டில் மக்களிடையே அன்ருட வாழ்க்கையில் "ஏழேழு பிறவி" என வழங்கும் தொடரும் ஈண்டு சிந்தையில் வைக்கத் தக்கதாம்.

மேற் கூறியவற்றை யெல்லாம் ஒருங்கு கூட்டி ஆழ்ந்து சிந்தித்தால் 'எழுமை' 'எழுபிறப்பு' என்பன சிறப்பாகத் தொகை சுட்டவந்தன அல்ல, ஒன்றுக்கு மேற்பட்ட 'பல' என்ற பொருள் தருவதாக அமைந் திருக்கலாம் என்ற முடிவிற்கு வரலாம். 'பல்லார் பகை கொளலிற் பத்தடுத்த தீமைத்தே' என்ற விடத்தும், 'அடுக்கிய கோடியுண்டாயினுமில்' என்ற விடத்தும், 'பத்து', 'கோடி' என்பன, தம் எண்ணைக்குறிப் பின் சுட்டாது 'பல' என்ற பொருள் பயந்து நிற்கக்

காண்கிறோம். ஆசிரியர் மேலும் 'எழுபது கோடியுறும்', 'பத்தடுத்த கோடியுறும்' எனப் பன்மைக் குறிப்பில் கையாளும் எண்கள் குறளகத்துப் பலவுள.

ஆமைபோல உள்ளடங்கியிருக்கும் இத் தொகைக் குறிப்பின் பொருள் ஆராய்தற்குரியது. சிறப்பாகச் சமய சாத்திரத் தேர்ச்சி பெற்ற சமயக் கணக்கரின் தலையாய கடனும். இதற்கொரு விடை கண்டால், ஆசிரியர் வள்ளுவர் எச் சமயத்தைச் சார்ந்தவர் என்று கூட ஒரு முடிவிற்கு வருதல் இயலும். நிற்க.

இனி இடனறிதல் அதிகாரத்து,

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற

என்று முதலையை ஆசிரியர் கையாள்வர். முதலை ஆழமுடைய நீரின்கண் பிறவற்றையெல்லாம் தான் வெல்லும்; அப் புனலின் நீங்கின் பிறவெல்லாம் அதனை வெல்லா நிற்கும். இதனால் எல்லாரும் தத்தம் இடத்து வலியர் என்பது பெறப்பட்டது. எனவே அரசர் போர்க்கு எழுங்கால் பகைவர் நிற்றலாற்ரு இடனறிந்து செல்ல வேண்டும். செல்லின் வெற்றி பெறலாம். அஃதன்றித் தான் நிற்றலாற்ருவிடத்துச் செல்வராயின் பகைவரால் வெல்லப்படுதல் கூடும். எனவே, பகைவரை அவர் நிற்றலாற்ரு இடனறிந்து சென்று வெல்க என்பது கருத்து. ருஷ்ய நாட்டுப் பனிப் பரப்பில் சென்ற எத்துணையோ வீரம் மிக்க பிற நாட்டார் தோற்றுத்திரும்பியது, இடனறிதல் இன்மையால் என்பது தெளிவான சரித்திரச் சான்ரும்.

முதலை யொன்று நிலத்தின்கண் வருமாயின் எளிய நாய்கூட அதனைக் கடித்து இழுத்துத் துன்புறுத்தும். ஆனல் நிலத்தில் மிக்க வலிமையுடைய யானைகூட நீரில் முதலைக்கு ஆற்ருது அல்லற்படும். நீரின்கண் முதலைக்கு

யானையைவிட வலிமை அதிகம் 'களிறட்டு வீழ்க்கும் ஈர்ப்புடைக் கராம்' என்பது புறநானூறு. 'உரவுக் களிறு கரக்கும் இடங்கர்' என்பது மலைபடு கடாம். "வலிய யானைகளை விழுங்கும் முதலைகள்" என்பது அதற்கு நச்சினார்க்கினியர் தரும் உரை. எனவே அரசர்க்கு இடனறிதல் மிகவும் இன்றியமையாததாம்.

அடுத்து. மீன் என்ற சொல் இரண்டு குறளிலும், மீன் என்ற பொருளுடைய 'கயல்' என்ற சொல் ஒரு குறளிலும் காணக்கிடக்கின்றன. மீன் என்பதற்கு, நீர்வாழ் மீன் என்பது ஒரு பொருள்; விண்மீன் (நட்சத் திரம்) என்பது மற்றொரு பொருள். இவ்விரு பொருள் களிலும் ஆசிரியர் அச் சொல்லைக் கையாள்வர். எனவே, நீர்வாழ் மீன் எனப் பொருள்பட நிற்கும் குறள் ஒன்றுதானாகும்.

சூதாடுதலை எவ்வாற்றானும், எக்காரணங்கொண்டும் பயிலுதல் கூடாது என அழுந்தப் பேசவருகின்ற ஆசிரியர் சூது அதிகாரத்து முதற் குறளாக,

> வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
> தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று

என உவமை காட்டி உண்மையை வலியுறுத்தினார். தான் வெல்லும் ஆற்றலுடையனாயினும் சூதாடலை விரும்பா தொழிக என முதற்கண் எடுத்தோதினார். வென்று பொருள் பெறுவாரும் உளரே என இடைமறிப் பார்க்கு, அவ் வென்ற பொருள் தானும் இரையால் மறைந்த தூண்டிலிரும்பினை இரையெனக் கருதி மீன் விழுங்கினாற் போலும் அவ்வளவிற்றாம் என அதன் பொய்மை நிலையை வெளிப்படக் காட்டினார். 'வென்றிடி னும்' என்ற தொடரிலுள்ள 'உம்மை', வெற்றி யாருக் கும் உறுதியில்லை என்பதைக் காட்டுவதாகும்.

உவமையை விரித்து நோக்குவோமாயின் சூதாட்டம் தூண்டில் என்பதும், அத் தூண்டில் முள்ளை மறைத்திருக்கும் நாங்கூழ்ப் புழுப்போன்ற இறைச்சியிரை, சூதில் வெற்றி பெற்ற செல்வம் என்பதும், அதன் உள்ளீட்டை அறியாமல் இரையென எண்ணி ஏமாறும் மீன், பின்னுல் துன்பம் வருமென் றறியாது இலாபம் கிடைத்தது என அதில் சிக்கிக்கொள்ளும் சூதாடியையும் குறித்து நிற்கிறது என அறியலாம். சூதாடுபவன் முதற்கண் பெற்ற வெற்றியால் அடைந்த பொருள் சூதாட்டத்தை விட்டு அவன் நீங்காமைக்கு இட்ட தளையென்பது, இரையைக் கவ்விய மீன் தூண்டிலில் அகப்பட்டுக்கொள்ளும் என்பதனுல் தெளிவாகிறது. எனவே இறுதியில் துன்பம் வந்தே தீரும் என்பது ஒருதலை. ஆக, எக்காரணங்கொண்டும் சூதாடல் தவறு என்பது ஆசிரியர் குறிப்பு.

இஃதொரு புறமிருக்க, இக்குறளால் பண்டைத் தமிழகத்தில் சூதாடுதல் இருந்து வந்திருக்கிறது என்பதையும், தூண்டில் கொண்டு மீன் பிடித்தல் பெருவழக்காய் இருந்திருத்தல் வேண்டும் என்பதையும் நாமறிகிரும்.

பொன் என்பது உலோகங்களின் பொதுப் பெயர். ஈண்டு இக்குறளில் பொன்என்பது தூண்டில் இரும்பைச் சுட்டுகிறது. ஆயின், பொன் என்ற மாத்திரத்தே தங்கம் என்பதுதான் எல்லோர் நினைவிலும் எழும். இரையால் மறைக்கப்பட்டு அதன் தீய கருந்தன்மை வெளிக்குத் தெரியாதவாறு தூண்டில் இரும்பு இருப்பது போலச் சொல்லளவில் அதன் தீயதன்மை வெளிக்குத் தெரியாதவாறு பொன் என்ற பரியாயச் சொல்லால் அதனைச்சுட்டி மறைத்திருப்பது மிக்க நயம்தரும் நுட்பமாகும்.

வியங்கோள் வினையிலே தொடங்கி ஆசிரியர் ஆணை யாக விளங்கும் அருமைக் குறள்கள்பல திருக்குறளகத்து உண்டு. அவற்றுள் இஃதொன்று. இனி,

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்கு
உயலுண்மை சாற்றுவேன் மன்

என்ற இன்பக் குறளில் கயல் கண்ணுக்கு உவமையாக ஆளப்படுகிறது. தலைவனைவிட்டுப் பிரிந்து ஆற்றி யிருக்கும் ஒரு தலைவியின் கூற்றாக இஃது அமைந்திருக் கிறது. தலைவனின் பிரிவு காரணமாக அவளது கண்கள் உறங்காது வருந்துகின்றன. அங்ஙனம் உறங்காது வருந்துகின்ற கண்களை அவள் இரந்து கேட்டுக்கொண் டால் ஒருக்கால் அவை அவளின் நிலைக்கு இரங்கி உறக்கம் கொண்டாலும் கொள்ளலாம். அங்ஙனம் உறக்கம் கொண்டால் கனவில் காதலரை அவள் காணு தல் கூடும். அப்படிக் கனவிடைக் காதலனைக் கண்டால் தான் எப்படிப் பிரிந்து ஆற்றியிருக்கிறாள் என்ற செய்தி களையெல்லாம் நேரே அவள் சொல்லுவாள். இதுவே இக்குறளின் கருத்து.

தனது கண்களையே கண்ணின் வேறாகப் படர்க்கை யிடத்து வைத்துப் பேசுதல் அவளின் வருத்தத்தை நன்கு தெளிவாக்குகிறது. கண்களை மூடி உறங்கினால் கனவிடைக் காதலன் வருவான் என்ற உறுதி அவளுக்கி ருக்கிறது. ஆண்டு அவன் வருகை அவளது ஆற்றா மைக்கு மாற்றாக அமையும் என எண்ணுகிறாள். ஆனால் கயற்கண்கள் துஞ்சவேண்டுமே என்ற அவளது கவலை, பாட்டின் இறுதிச் சீரான ஒழியிசைக் கண்வந்த 'மன்' என்பதால் பெறப்படுகிறது. எனவே கண்களும் துஞ்சா, சாற்றலும் கூடாதென்பது கருத்து.

கயலைக் கண்ணுக்கு உவமை கூறுதல் செய்யுள் வழக்கில் மட்டுமின்றி உலக வழக்கிலும் பெருவரவிற்றாய்

வழங்குதலே கயற்கண்ணி, அங்கயற்கண்ணி (மீனாட்சி) என்ற பெயர்கள் நமக்குத் தெற்றெனக் காட்டுகின்றன. வடிவத்தாலும், துள்ளிப் பிறழும் இயல்பாலும், நீரில் தோய்ந்திருத்தலாலும், நிறஒளியாலும் கயல் கண்ணுக்கு உவமையாம். மதுரை அம்மன் பெயர் 'அங்கயற்கண்ணி' என்பதை அறியாதாரில்லை.

இங்ஙனமாக, வள்ளுவர் நீர்வாழ் உயிரினங்களைத் தம் நூலகத்து நான்கு குறளில் எடுத்தாண்டுள்ளார்.

௪

# விலங்கினம்

'எல்லாப் பொருளும் இதன்பால் உள, இதன் பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்' என மதுரைத் தமிழ் நாகனுரால் மாண்புறச் சிறப்பிக்கப்பட்ட தமிழ் மறையாம் திருக்குறள் நூலிலே, ஆங்காங்கு சுட்டப்படும் விலங்கினங்கள் பலவாகும். உவமையாக அமைத்தும், அவ்வவ் விலங்கின் தன்மை பற்றியும், அக்காலத்து அவை பயன்பட்ட முறை தழுவியும் சிங்கம், புலி, யானை, குதிரை, காளை, பசு, ஆடு, கவரிமான், பெண்மான், முயல், நரி ஆகிய விலங்குகளைப் பல்வேறு முறைகளில் ஆசிரியர் எடுத்தாள்வர்.

மிருகங்களைக் குறிக்கும் பொதுச் சொல்லான 'விலங்கு' என்பதும், 'மா' என்பதும், ஆண்பாற் பொதுச் சொல்லான 'ஏறு' என்பதும், பெண்பாற் பொதுச் சொல்லான 'பிணை' என்பதும் ஆசிரியரால் ஆளப்படு கின்றன. ஆனுல் இவற்றுள் விலங்கு என்ற சொல் மட்டுமே மிருகப்பொதுவைக் குறித்து நிற்கிறது. ஏனைய வெல்லாம் இடத்திற்குத் தகுந்தாற்போல் வெவ்வேறு தனி விலங்கைச் சுட்டும்.

விலங்கு என்ற சொல் கல்லாமை அதிகாரத்திலே, கற்ருர்க்கும் கல்லார்க்கும் வேறுபாடு காட்ட வந்த இடத்து, கற்ருர் மக்கள் என்ருல், கல்லாதார் விலங் கனையர் என்னும் பொருள்பட ஆளப்படுகிறது.

ஆசிரியர் தொல்காப்பியனுர் உயர்திணை என்பதற்கு இலக்கணங் கூறவந்தவிடத்து, 'மக்களெல்லாரும் உயர்

திணை' என்னுது, தோற்றத்தால் மக்கள் போலிருப்பார் எல்லாரும் உயர்திணையல்லர், பிறரால் 'மகன்' அல்லது 'மகள்' எனச் சுட்டப்படுவோரே உயர்ந்த ஒழுக்கமுடையவர் ஆவார் என்னும் பொருள்பட 'உயர்திணை என்மனுர் மக்கட் சுட்டே' என நுண்பொருள் நூற்பா யாத்தார்.

எனவே மனித உருவத்தோடிருந்தும் உயர்திணையின் பாற்படாமல் அஃறிணையோடு சேர்த்தெண்ணப்படுவாரும் இவ்வையகத்தில் உண்டு என்பது தொல்காப்பியஞரின் கருத்தாதல் தெளியப்படும். அங்ஙனம் உருவால் மனிதவடிவோடிருந்தும் இயல்பால் விலங்கு நீர்மையராயிருப்போர் யாவர் என்னும் விஞவிற்கு விடையளிப்பார் போல வள்ளுவர், கல்லாதார் மக்கள் தோற்றத்தோடிருந்தும் அவர் விலங்கனையரே,

> **விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
> **கற்ருரோடு ஏனை யவர்**

என விளக்கம் தருகின்ருர்.

மிருகங்களைக் குறிக்கும் பொதுச் சொல்லான விலங்கு என்பதைக் கையாளும் மேற்குறளால் மக்களாய்ப் பிறந்தார்க்குக் கல்விஇன்றியமையாதது என்பதை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே வலியுறுத்தி இடித்துக்காட்டும் வள்ளுவப் பெருந்தகை பிறந்த தமிழகத்து, இற்றைக்கு எத்துணையர் கல்வியறிவு உடையவராய் இருக்கிருரென்று எண்ணிப் பார்க்கவும் நம் மனம் நாணுகிறது. ஆசிரியர் உவமைப்படி விலங்கனையராயிருக்கின்றவர் மக்கள் ஆதல் எந்நாளோ! இவ்வொரு குறளின் பொருளுணர்ந்து செயற்பட்டு ஒழுகிஞல் தமிழ்நாடு தன் பெயருக்கேற்ப இனிமை நாடாகும் என்பது ஒருதலை.

## சிங்கமும் புலியும்

விலங்கினத்தின் ஆண்பாற் பொதுச் சொல்லான 'ஏறு' இரண்டிடங்களிலே சுட்டப்படும். புகழை விரும்பி நடக்கும் மனைவி யில்லார்க்குத், தம்மைஇகழ்ந்துரைக்கும் பகைவர்முன் ஏறுபோல நடக்கும் பெருமித நடையில்லை என்னும் பொருளுடைய

புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை

என்பது, ஒரு குறள். ஏனையது பொருட்பாலின் முதற் குறளாய

படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு

என்பது. ஓர் அரசர்க்கு அமைய வேண்டுவனவாகத் தொகுத்தோதப்பட்ட இவ்வாறனையும் முற்றும் உடைய வனே அரசர்க்குள் அரசனுவான்.

ஏறு என்பது யானையேறு, அரியேறு, ஆவேறு, மாவேறு, வெள்ளேறு என வெவ்வேறிடத்து வழங்கப் பட்டுவரும் பொதுச் சொல்லா மெனினும், இவ்விரு குறளிலும் ஏறு என்பதற்குச் சிங்கம் என்றே பொருள் கொள்ளக் கிடக்கிறது. முதற்குறளில் பரிமேலழகர் ஏறு என்பதற்குச் சிங்கம் எனப் பொருள் எழுதி, 'பெருமித முடையானுக்குச் சிங்கவேறு நடையானுவமம்' என விளக்கமும் தருவர்.

சிங்கம் விலங்குகளுக்கெல்லாம் அரசன் என்பது மரபு. 'மிருகேந்திரன்' என்ற சொல்லும் அது பற்றி எழுந்த தென்க. ஏனை மன்னரோடு ஒப்புநோக்கி அவர் தம்முள் சிறப்பு மிக்குடையாரையே 'அரசருள் ஏறு' என்ற தொடர் குறிப்பின் சுட்டுகிறது. எனவே, 'படைகுடி' என்ற இரண்டாவது குறளகத்தும் ஏறு என்

பதற்கு விலங்கினங்களுள் சிறப்பு மிக்குடைய சிங்கம் எனப் பொருள் கொள்ளல் நேரிது. உவமைக்கும் ஏற்ற மளிப்பதாகும்.

எனவே விலங்கினத்து ஆண்பாற் பொதுச் சொல் லான ஏறு இவ்விரு பாக்களிலும் சிங்கம் எனப் பொருள் பட்டு நிற்கிறது.

இனி, புலி சுட்டப்படும் இடங்களும் இரண்டாம். ஒரு பசு, பயிர் செழித்து வளர்ந்துள்ள அயலானது வயலில் மேய அவாவுற்றது. ஆனுல் பயிருக்கோ காவல் உண்டு. என் செய்வது? இறுதியில் சூழ்ந்து, தேர்ந்து, புலித்தோல் ஒன்றைத் தன்மீது போர்த்துக்கொண்டு அச்சமின்றி வயலுள் இறங்கிற்று. காவற்காரன் இப் புலியைக் கண்டான். விரட்ட எண்ணினுன். அச்சம் ஒருபால் தடை செய்ய, 'புலி புல் தின்னுது' என்ற உண்மை ஒருபால் ஈர்க்க, யாதொன்றும் செய்ய இயலாத வனுய், செய்யத் தேவையற்றவனுய் வாளா விட்டுவிட் டான். புலித்தோல் போர்த்த பசு யாதொரு இடையூறு மின்றி வயிருரப் பயிரைத் தின்று கொழுத்து வரலா யிற்று.

இஃதொப்ப, மனத்தை நேர்வழி நிறுத்த இயலாத பேடிகள்—ஆசைகளை அடக்க முடியாத அற்பர்கள்—பிறரை வஞ்சித்து அவர்க்கு உரியவற்றைத் துய்க்க விரும்பும் கள்வர்கள்—மெய்யான துறவிகள் என்று பிறர் எண்ணும்படியாகப் பொய்த் தவவேடம் தாங்கி நாட்டில் உலவுவர். அவரின் புறத் தவவேடங் கண்ட மக்கள் மைபொதி விளக்கெனக் காட்சிதரும் அவரின் அகத் துண்மையை யோராது, போற்றிப் புகழ்தலும் செய்வர். இத்தகைய கூடாவொழுக்கமுடைய வஞ்சகரின் தந்திரத்தை,

வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று

என உவமைகாட்டி ஆசிரியர் வெளிப்படுத்தினர்.

'புலித்தோலைப் போர்த்திய பசு' என்பது இல் பொருள் உவமையெனினும், கூடாவொழுக்க முடையாரின் இழி தகைமையை இதனினும் காட்டுமாறு எங்ஙன்? இவ்வுவமை, இன்று 'பசுத்தோல் போர்த்த புலி' எனத் தொழில் நயம் கருதி மாற்றப்பட்டு நாள் வழக்கில் பயிலக் காண்கிறோம். இரண்டின் அடிப்படைக் கருத்தும் ஒன்றே. எனவே ஒருவரின் புறவேடம் நோக்கி ஆரவார நீர்மை கண்டு மயங்காது, அன்னாரின் செயல்களை உற்று நோக்கி உள்ளத் தூய்மை அறிந்து உணர வேண்டும் என்பது குறட்குறிப்பு.

இஃதொரு புறமிருக்க, இக் குறளின் மூலம் புலியின் தோலை ஆடையாகப் பயன்படுத்தும் முறை பண்டைக் காலத்து இருந்திருக்கிறது என்பதை நாம் நுண்ணிதின் அறியலாம். ஏனைய விலங்குகளின் தோலை எத்தனையோ வகையாகப் பயன்படுத்தும் இந் நூற்றாண்டிலும் புலி, மான் இவற்றின் தோலை அதன் மேற்புறம் கெட்டுப் போகா வண்ணம் பாடம் செய்து இருக்கையாகப் பயன் படுத்துவது கண்கூடு. சிவபெருமானுக்குரிய ஆடைகளுள் புலித்தோலும் ஒன்றென்னும் செய்தியும் ஈண்டு நினைவுகொள்ளற் பாற்று. 'பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து' என்றார் பெரியாரும்.

இன்று உலகில் நாம் காணும் விலங்குகளுள் பெரிய உடலோடு கூடியது யானை. ஆற்றப்பெரிய அவ்வுடலோடு நீண்ட, கூர்மையான ஈட்டிகளைப்போன்ற உறுதியான இரண்டு கொம்புகளும் அதனை அணி செய்கின்றன. இவ்வளவு சிறப்புப் பெற்றிருந்தும் புலியை எதிர்ப்படின் யானை அஞ்சுகிறது. இதன் காரணம் என்?

புலியைக் காட்டிலும் பேருடம்பும், கருவிச் சிறப்பும் பெற்றிருந்தும். புலியைப்போல மன ஊக்கத்தோடு ஓடிப் பாயும் தன்மையில்லாக் காரணத்தால் யானை புலிக்கு அஞ்சுகிறது.

**பரியது, கூர்ங்கோட்டது ஆயினும் யானை**
**வெரூஉம் புலிதாக் குறின்**

இதனை எடுத்துக்காட்டி வள்ளுவர் அரசர்க்கு மெய்வலி, கருவிச் சிறப்பு, ஆகிய இவற்றினும் ஊக்கமுடைமை இன்றியமையாதது—அடிப்படையானது என அழுந்த மொழிவர்.

தோற்றப் பொலிவோடு ஆரவாரம் செய்யும் சிலர், தேவை நேர்ந்துழி மன ஊக்கமின்றி ஓடி மறைவதையும், வற்றலாயிருப்பினும் மன ஊக்கம் ஒன்றனையே தன் வலிமையாகக் கொண்டு சிலர் போராடி வெற்றி பெறுவதையும் நாள் வாழ்க்கையில் நாம் காண்கிறோமன்றோ! 'உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை', 'உள்ளம் உடைமை உடைமை' என்று இக் கருத்தினைப் பிறண்டும் ஆசிரியர் தெளிவாக வற்புறுத்துவர். எனவே மன ஊக்கமில்லாது, பிற சிறப்புக்கள் எத்துணை இருப்பினும் பயனில்லை என்பது தெளிவு. நிற்க.

## யானை

ஆசிரியர் வள்ளுவரால் விலங்குகளுளெல்லாம் மிக அதிகமான இடங்களில் சுட்டப்படும் பெருமை பெற்றது யானையே யாகும். களிறு என நான்கிடத்தும், யானை என நான்கிடத்தும் ஆக எட்டுக் குறள்களில் வள்ளுவர் இதனை எடுத்தாள்வர். மேலே புலிபற்றிய ஒரு குறளால் யானையினது ஊக்கமற்ற சிறுமையைப் புலப்படுத்திய ஆசிரியர், ஏனைய ஏழு குறளிலும் அதன் பெருமையை நிலைநாட்டிப் பல கருத்துக்களை நமக்கு விளக்குவர்.

> பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
> வெரூஉம் புலிதாக் குறின்

என்று முன்னர் நாம் கண்டது ஊக்கமுடைமை அதிகாரத்தின் ஒன்பதாங் குறளாகும். அவ்வதிகாரத்தின் ஏழாங் குறள்,

> சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பிற்
> பட்டுப்பா டூன்றும் களிறு

என்பது.

யானையானது கட்டுக்கட்டாக அம்புகள் தன்மீது பாய்ந்து புண்பட்ட இடத்தும் தளராது தன் பெருமையை நிலைநிறுத்தும். அதுபோல ஊக்கமுடையார் தாம் கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்தவிடத்துத் தளராது தம் பெருமையை நிலைநிறுத்துவர் என்பது இதன் கருத்தாம். இப் பாட்டில் இடர் வந்துற்றபோது யானை அசையாது நின்று தன் பெருமையை நிலைநாட்டும் என்று சுட்டப் படும் கருத்தும், ஊக்கமின்மையால் யானை புலிக்கு அஞ்சும் என்ற ஒன்பதாங்குறள் கருத்தும் பெரிதும் முரண்பாடுடையனவாகத் தோற்றமளிக்கின்றன. ஒன்றில் 'யானை ஊக்கமுடையது' என்றும், அடுத்ததில் 'யானை ஊக்கமில்லாதது' என்றும் குறிப்பது மாறுபாடாகத்தான் காணப்படுகிறது.

ஆனல் நுனித்து நோக்கி ஆராய்வோமாயின், இரண்டிற்குமுள்ள வேறுபாடு நன்கு தெளிவாகும். இரண்டையும் ஒருசேரப் பார்ப்போமாயின், யானை இயற்கையிலேயே பெருவலிமை பெற்றிருந்தும் பிறவற்றின் மேற்செல்லும் எழுச்சியான ஊக்கம் அதற்கு இயல்பாக இல்லை யென்பதும், ஆயின் எதிர்க்க நேர்ந்து சினம்கொண்டு போருக்கெழுமானல் பயிற்றுவிக்கப்பட்ட யானை தன் ஊக்கத்தில் சிறிதும் குன்ருது நின்று பொரும் என்பதும் விளங்கும். மக்களிலும்

அமைதிக் குணமுடைய, சமாதானத்தை விரும்பும் சிலர் இயல்பாகப் போருக்கு அஞ்சி ஒதுங்கியிருப்பினும், இன்றியமையாக் காலத்துப் போரில் கலக்கவேண்டி நேரிடின் அங்கு அவர்கள் ஒருநாளும் அஞ்சிப் பின்வாங்கார் என்ற நிலை காணக்கிடக்கிறதல்லவா? அத்தன்மைத்தே யானையினது இயல்பும் எனக் கொள்க.

புலியைப்போல அச்சமின்றி விரைந்து பாய்ந்து பிறவற்றின்மேல் வலியச் சென்றுவிழுந்து அடிக்கும் குணம் யானைக்கு இல்லையென்பதே கருத்தாகக்கொண்டால் இவ் இரு குறள்களுள்ளும் முரண்பாடில்லை யென்பது தெளிவு. ஆனால் யானையின் இரு வேறு தன்மைகளை இவை நுண்மையாய்க் காட்டுகின்றன எனல் ஏற்புடைத்து.

ஈண்டு, புலிக்கும் யானைக்கும் உள்ள வேறுபாடுகளை யும் மனத்திற்கொள்ளல் நலம். புலி புலால் உண்ணும் இயற்கை உடையதா யிருப்பதால் பிற விலங்குகளின் மீது பாய்ந்து அடித்து மேற்செல்ல வேண்டிய இன்றிய மையாமை அதற்கு இயல்பின் அமைந்திருக்கிறது.யானை தழையுண்ணும் விலங்காதலின் இவ்வின்றியமையாமை அதற்கில்லை. புலி, நன்மை செய்தார், தீமை செய்தார் என்ற பாகுபாடின்றி எதிர்ப்பட்ட அனைவரையும் கொல் லும். 'வேங்கை வரிப்புலி நோய் தீர்த்த விடதாரியும் ஆங்கதனுக்கு ஆகாரமாவார்.' யானை, அங்ஙனமின்றித் தனக்குத் தீமை செய்தாரையே அறிந்து தீமைசெய்யும் இயல்பினது. 'யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்' என்ற நாலடியார் அடிகள், அவன் செய்த நன்மைக்கு நாய்போல் நன்றி பாராட்டாது 'எழுநூறு நன்றிசெய்து ஒன்று தீதாயின் எழுநூறும் தீதாய் விடும்' என்றபடி அவன் செய்த தீமையை மனத்தில் மறவாமல் வைத்துக்கொண்டு திருப்பித் தீமைசெய்யும் இயல்பினது என்பதை விளக்கும். எனவேதான், அரண்

மனைகளிலும் கோவில்களிலும் புலாலுண்ணும் இயற்கையும், பிறர்குத் தீமை செய்யும் இயல்பினதுமாகிய புலியை வளர்த்தலின்றி, தழையுண்ணும் இயற்கையும், தீமை செய்தாருக்கன்றி இயல்பாகத் தான்சென்று தீமைசெய்யாததுமாகிய யானையைப் பெருமையாக வளர்க்கிருர்கள் என்பது போதரும்.

புறப்பொருள் வெண்பாமாலையின் கரந்தைப் படலச் செய்யுளொன்றில், சிங்கம், புலி, யானை இவற்றின் சிறப்புக் குணங்களைத் தொகுத்து ஐயனரிதனர்,

'புலிக்கணமும் சியமும் போர்க்களிறும் போல்வார்
வலிச்சினமும் மானமும் தேசும்'

என நிரல்பட அழகுற அமைத்தார். இதனுல் புலிக்கு வலிமிக்க சீற்றமும், சிங்கத்திற்கு மானமும், யானைக்குப் பெருமையுமே சிறப்புக் குணங்களென அறியலாம்.

இன்னும், 'யானை புலிக்கு அஞ்சும்' என்று சொல்லியபோதும்கூட, யானைக்கும் புலிக்கும் காட்டில் அடிக்கடி போர் ஏற்படும் என்பதும், அக்கால், யானை தன் நீண்ட கொம்புகள் சிவப்பேறும்படி புலியைக் குத்திக் கிழிக்கும் என்பதும் சங்க இலக்கியங்களில் பரந்து காணப்படும் செய்திகளாகும்.

'கொல்முரண் இரும்புலி அரும்புழைத் தாக்கிச்
செம்மறுக் கொண்ட வெண்கோட்டு யானை'

என்ற நற்றிணை யடிகளும்

'மறங்கொள் இரும்புலித் தொல்முரண் தொலைத்த
முறஞ்செவி வாரணம்'

என்ற கலித்தொகை யடிகளும் இதனைத் தெளிவுறுத்தும்.

எனவே, ஊக்கமுடைமை அதிகாரத்து யானைக்குறள் இரண்டும் யானையின் வெவ்வேறு இரண்டு பண்புகளைக் காட்டுகின்றனவேயன்றி ஒன்றற்கொன்று முரண்பட்டன அல்லவாம். ஆய்ந்து கொள்க.

இனி, படைச்செருக்குக் கூறவந்த அதிகாரத்தில் ஆசிரியர் இரண்டு குறளில் யானையை எடுத்தாள்கிருர்.

போர்க்களத்திலே மாற்றரசன் படையோடு சண்டையிட்ட ஒரு பெருவீரன், அவ் எதிர்ப்படைகள் புறங் கொடுத்து ஓடுவதைக் கண்டான். புறமுதுகிட்டு ஓடுவோரைத் துரத்திச்சென்று அடுதல் மிக எளிதாயினும், அது சிறந்த வீரர்க்கு அழகுமன்று, ஆண்மையுமன்று. எனவே அப்படைகள் மேற்செல்ல அவன் நாணினுன். ஆயின் எதிர்வந்த மன்னன் போர்க்களத்தே நிற்பதைக் கண்ணுற்ருன். அரசனேடு எதிர்த்து வெல்லுதல் என்பது தனிப்பட்ட வீரன் ஒருவனுக்கு இயலாத காரியம் என்பதை அறிவானெனினும், அம்மாற்றரசனேடு பொருது வீர சுவர்க்கமடைதலே தன் வீரத்திற்குப் பெருமை என்றெண்ணிப் பொருதான்.

இப்படிப்பட்ட உயர்ந்த வீரமுடைய படையே செருக்குடையது என்ற கருத்தினை, ஆசிரியர் அவ்வீரன் வாய்மொழியாக,

> **கான முயல்எய்த அம்பினில் யானை**
> **பிழைத்தவேல் ஏந்தல் இனிது**

எனக் கட்டுரைக்கின்ருர். காட்டில் ஒரு முயலைப் பிழையாமல் எய்த அம்பை ஏந்தலினும், நல்ல பொட்டலிலே நின்ற யானையை எறிந்து (பிழைத்த) குறிதவறிப் போன வேலை ஏந்துதல் இனிது. இதனுல் வீரனுடைய எண்ணம் உயர்ந்து விளங்க வேண்டுமேயன்றித் தாழ்ந்து செல்லல் கூடாது என்பது கருத்து. அடைவது எளிதல்லவெனினும், நமது இலட்சியம் உயர்ந்து நிற்கவேண்டும் என்பதை இது வலியுறுத்தி நிற்றல் காண்க. 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்க' என்பது அவர் ஆணை.

இதனையே வேருெரு கோணத்தில் வைத்து கோப்பெருஞ்சோழன் ' செய்குவங் கொல்லோ ' எனத் தொடங்

கும் புறப்பாட்டில் 'யானை வேட்டுவன் யானையும் பெறுமே குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே' என்று எடுத்துக்காட்டி, உயர்ந்தவ ரென்பதற்கு அடையாளம் அவர் உயர்ந்த விருப்பமுடையவரா யிருப்பது தானே யன்றி, பிறவன்று என வலியுறுத்திச் செல்லலும் ஈண்டைக்கு ஓர்க.

அடுத்த குறள், எல்லார்க்கும் மிகத் தெரிந்ததான

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்

என்ற வியப்பும் வீரமும் விளைக்கும் சிறுகதைக் குறளாகும். தன் கைவேலைத் தன் மேல்வந்த களிற்றினது உயிரைக் கொண்டு போகுமாறு விடுத்து, பின்னே எதிர் வரும் வேறொரு களிற்றுக்கு வேல் வேண்டித் தேடும் வீரனொருவன் தன் மார்பில் தைத்து நிற்கின்ற வேலைக் கண்டு பறித்து மகிழும் என்ற பொருள் பொதிந்த இக் குறளுக்கு விரிவுரை எழுதப்போந்த பரிமேலழகர் 'இதனுள் களிற்றை யல்லது எறியா னென்பதும், சின மிகுதியால் வேல் இடை போந்தது அறிந்தில னென் பதும், பின்னும் போர் மேல் விருப்பினன் என்பதும் பெறப்பட்டன. 'நாழிலாட்டு' என்று எழுதிய பகுதிகள் அவரது நுண்மையைக் காட்டுவனவாம்.

சங்ககாலத்தில் யானையைக் கொன்று மீளத்திரும்பி வருதலே வீரத்தின் மேல்எல்லையாகக் கொள்ளப் பட்டிருக்கிறது. 'ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக் களிறு எறிந்து பெயர்தல், காளைக்குக் கடனே' என்பது பொன் முடியாரின் புறப்பாட்டு. நூழிலாட்டு என்பது தும்பைத் திணையுள் பேசப்படும் ஒரு துறையாகும். போர்க்களத் தைப் பொருந்திய சேனைகெடத் தன் மார்பைத் திறந்த வேலைப் பறித்து எறிந்த செயல்பற்றிப் பேசுவது அது. 'களங் கழுமிய படையிரிய உளங்கிழித்த வேல் பறித்

தோச்சின்று' என்பது அதன் கொளு. இவ்வாறுகப் படைச்செருக்குப் பற்றிய இவ்விரு குறளாலும் யானை யின் பெருமையும் பெருமிதமும் மேலும் விளக்கமாதல் காண்க.

இனி, வினைசெயல்வகையைக் கூறவந்த ஆசிரியர், ஒருவினையைச் செய்கின்ற காலத்தே அவ்வினை அதனோ டொத்த பலவினைகளைச் செய்ய ஏதுவாம்படி சூழ நினைத்து அதனைச் செய்க என்றார். காட்டகத்தே யானை களைப் பிடிக்க விரும்புவார், முதற்கண் முயன்று பிடித்த ஒரு யானையைப் பழக்கிய பிறகு, அதனைக் கொண்டு பல யானைகளைப் பிடித்தல் வழக்கு.

**வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்**
**யானையால் யானையாத் தற்று.**

ஒரு யானையாலே அன்னது பிறிதுமோர் யானையை எளிதில் பிடிப்பதைப் போல, முதற்கண் முயன்று செய் கின்ற வினையாலே அன்னது பிறிதுமோர் வினையை எளிதில் முடித்துக் கொள்க. தொடங்கிய வினையானே பிறிதும் ஓர் வினையை முடித்தற்கு ஏதுவாயிருக்கும்படி அதனை எண்ணிச் செய்க என்பது குறிப்பு.

சதுரங்கம் விளையாடுவோர் தம்முடைய காய்களை நகர்த்தும்பொழுது அஃது இரண்டு செயல்கட்கு ஒருங்கு பயன்படுமாறு நகர்த்துவர், அவ்வாட்டத்தில் தேர்ந்தோர் மாற்றாரின் ஒரு காயை வெட்டி எடுத்துக்கொண்டு முன் னேறித் தம் காயை அதன் இருப்பிடத்தில் வைத்து, அடுத்த வாய்ப்பில் பின்னுமொரு காயை வீழ்த்தும் படியான நிலையில் தம் முதலாட்டத்தை ஆடுவர். அவரது எண்ணிச் செய்த முதல் வினையால், உடனடியாக எதிரி யின் காய் ஒன்றனை எடுத்துக்கொள்வதோடு பின்னும் அடுத்து வரும் ஆட்டத்தில் மற்றுமொரு காயை வெட்டு வதற்கும் அவ்வாட்டமே உதவும்படி அமைகிறதன்றோ!

அதுபோல வினை செய்க என்பது ஆசிரியர் காட்டும் வழி யாம். ஒரு யானையைப் பிடிப்பது போன்ற அரியவினை யொன்றைச் செய்து முடித்தால், பின்னர் அவ்வினை யானே தொடர்ந்த பிறவினைகளும் எளிதில் முடியும் என் பது கருத்து.

இக்குறளால் அக்காலத்தில் ஒரு யானையைப் பிடித்த பிறகு, வேறு யானைகளை எளிதில் பிடித்திருக்கின்றனர், பழக்கியிருக்கின்றனர் என்ற செய்தியை நாம் அறி கிறோம். பெருங்குழி ஒன்று வெட்டி, அதனில் யானை வீழுமாறு செய்து அதனை அகப்படுத்துவது பண்டை யோர் கையாண்ட முறை.

இதனை,

நீடுகுழி யகப்பட்ட
பீடுடைய வெறும்முன்பிற்
கோடுமுற்றிய கொல்களிறு
நிலைகலங்கிக் குழிகொன்று
கிளைபுகலத் தலைக்கூடி

எனவரும் புறப்பாடல் அடிகளாலும், கரிகாற்பெருவளத் தான் சிறையினின்று தப்பி வெளிவந்ததற்கு உவமை யாகக் காட்டப்பட்ட,

பிறர்பிணி யகத்திருந்து பீடுகாழ் முற்றி
அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு

என வரும் பட்டினப்பாலை அடிகளாலும் நாம் உணரலாம்

இதனைப் போலவே பண்டைக் காலத்திலிருந்த யானை பற்றிய வேறோர் அருஞ்செய்தியைப் 'பொருள் செயல் வகை' அதிகாரத்தில் ஆசிரியர் எடுத்தாள் கின்றார்.

குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று
உண்டாகச் செய்வான் வினை

என்பது அதனை உணர்த்தும் குறள்.

கையிலே நிறையப் பொருளுடையான் ஒருவன் ஒரு காரியத்தைச் செய்தல் மிக எளிது, அஃது ஒருவன் மலை மேலே நின்று, பயமும் வருத்தமும் இல்லாமல் கீழே நிலத்தில் யானையும் யானையும் செய்கின்ற சண்டையைத் தான் இனிதிருந்து கண்டு மகிழ்வது போல எளிதாம். கையில் பொருளுடையான் ஒரு வினையை மேற்கொண்டால் அஃது எத்தகைய கடின முடையதா யிருந்தாலும் தான் அச்சமும் வருத்தமும் இன்றி இனிதிருந்து அவ் வினை வல்லாரை ஏவி அதனைச்செவ்விதின் முடிக்கும் என்பதாம்.

இதனுல், பண்டைக் காலத்து, யானைக்கும் யானைக்கும் போர்நடத்தி அதனை மக்கள் காண்டல் உண்டென் பதை நாம் உணரலாம். பண்டை நாள் மன்னர்களின் வீரப் பொழுதுபோக்கில் யானைப்போர் காண்டலும் ஒன்று. புறப்பொருள் வெண்பா மாலையில் 'யானை வென்றி' என்ற துறைப்பாட்டில்

> கஞ்சுகம் வாய்த்த கவளம்தன் கைக்கொண்ட
> குஞ்சரம் கொன்ற கொலைவேழம்

என வரூஉம் அடிகள் இதனை வலியுறுத்தும். இந்நூற் ருண்டில் தமிழ்ப் புலவர் கூடிய நான்காம் தமிழ்ச் சங்க மிருந்த மாட மதுரையில், நாயக்க மன்னர்கள் யானைப் போர் காணுதற்கென்று அமைத்த பெருவெளியும், மாடமும் இன்றும் அமெரிக்கன் கல்லூரிக்கு அண்மையில் இருக்கின்றன. யானைத்திடல் என்னும் பொருளுடைய 'கரிமேடு' என்னும் பகுதியொன்றும் இன்றும் அப்பெரு வள நகரில் காணக்கிடக்கிறது. இவற்ருலெல்லாம் மன்னர்கள் மலைபோன்ற உயர்ந்த இடத்து இனிதிருந்து 'யானைப்போர்' காணும் வழக்குண்மையை நாமறிகிருேம்.

இனி, அரசர்கள் மாற்ருரொடு போர் வேண்டுங் காலத்து முதற்கண் சிந்திக்கத் தக்கனவற்றுள் இடனறி

தல் தலையாயதாம். தமக்கு ஏலாத நிலத்துச் செல்வ ராயின் பொருள், கருவி, காலம், வினை, படைமிகுதி முதலியவற்ருல் பயனின்றித் தாம் மிகவும் எளிமை யடைந்து அழிவர். பாகர்க் கடங்காததும் வேல் கைக் கொண்ட பெருவீரர்களைத் தன்கொம்பில் குத்தித் தூக்கிக் கொன்றது மான மிகப் பெரிய சினவெங் களியானை களைக் கூட, அவற்றின் கால்கள் அழுந்தும்படியான சேற்று நிலத்தில் அவை அகப்பட்டுக் கொண்டபோது கேவலம் நரியும் கொன்றுவிடும் என்ருர் ஆசிரியர். அக்குறள் வருமாறு:

காலாழ் களரில் நரியடும் கண்ணஞ்சா
வேலாள் முகத்த களிறு

கண்ணஞ்சாமையும், வேல் வீரர்களைக் குத்திக் தூக்கியமையும், களிற்றின் இயல்பான பெருமையையும் ஒன்றுக்கும் பற்ருத மிகச் சிறு விலங்காகிய தந்திரம் நிறைந்த நரியும் அடும் என்றதனுல், இடமாற்றத்தால் அக்களிற்றுக் கேற்பட்ட சிறுமையின் இழிவையும் இக் குறள் நன்கு பெருக்கிக் காட்டும்.

களிறு குறிப்பிடப்படும் எஞ்சிய எட்டாம் குறள் இன்பப்பாலின் முதல் அதிகாரத்தின்கண் உளது. தலைவி, தன் கொங்கையைத் துகிலால் மறைத்துச் சோலையூடு நின்றதைக் கண்ணுற்ற தலைவன், நல்ல வேளை நகில் இரண்டையும் துகிலால் இவள் மூடி நின் ருள். இன்றேல் அவை எதிர்ந் தாரைக் கொன்றேவிடும் என்று கூறி அத்துகில், மதக்களிற்றின் மேல் இட்ட முக படாத்தை யொக்கும் என உவமை நலம் பொலிய, அவ் வணங்கின் தனங்களால் தனக்குண்டாய வருத்தத்தைக் கூறுகிருன். அக்குறள்

கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில்

என்பது.

இதுகாறும் கண்ட யானைபற்றிய எட்டுக்குறளாலும், யானை புலிக்கு அஞ்சுமென்பதும், ஆயினும் மிக்க பெருமிதமும் வலிமையுமுடைய தென்பதும், பண்டைக் காலத்து வீரர்கள் களிற்றைக் கொன்று மீள்வதே வீரத்தின் எல்லையாகக்கொண்டிருந்தனர் என்பதும், அங்ஙனம் அடுங்கால் வேல் கொண்டு எறிதல் வழக்கம் என்பதும், முதற்கண் யானையைப் பிடித்தல் அருஞ்செயலென்பதும், யானைப் போரை மன்னரும் மக்களும் கண்டு பொழுது போக்கல் பண்டைத் தமிழக வழக்கம் என்பதும், யானையே யாயினும் இடமில்லா இடமாகிய அளற்று நிலத்து அகப்பட்டுக் கொள்ளின் தன் வலி யழியும் என்பதும், மங்கையர் கொங்கைக்கு மதக்களிற்றின் கோடு உவமையாய் வழங்குதலுண்டென்பதும் நாமறியக் கிடப்பனவாம்.

## குதிரையும் காளையும்

நட்பு என்னும் பெரும்பொருள் பற்றிப் பேச வந்த வள்ளுவர் ஓரதிகாரத்தினுள் அதன் கூறுகள் அடங்காமையின், நட்பு, நட்பாராய்தல், பழமை, தீநட்பு, கூடா நட்பு என்று ஐந்ததிகாரமாக விரித்து அதனை முற்றுவித்தார். அவற்றுள் தீக்குணத்தாரொடு உளதாய நட்பு நன்மை தாராது தீமை தருமாகலின் அது விடற்பாலது என்பதைத் 'தீநட்பு' அதிகாரத்தில் விளக்கிப் போந்தார். துன்பம் வருமுன்னெல்லாம் துணையாவார் போன்று பிரியாது நட்பினர் போல் இருந்து, துன்பம் வந்தபோது திடீரெனக் கைவிட்டு ஓடும் தன்மையுடையாரின் நட்பைக் காட்டிலும் தனிமையாய் அவரின் நட்பின்றி யிருத்தலே சிறந்தது எனக்கூற வந்த ஆசிரியர்

அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரில் தனிமை தலை

எனப் போர்க்களத்தே கைவிட்டோடும் கல்லாத

குதிரையை அவருக்கு உவமை கூறினர். சண்டை வராத முன்னெல்லாம் தாங்குவது போன்று இருந்து அமர் வந்த விடத்துக் களத்திடை வீழ்த்திவிட்டுப் போகும் கல்வி யில்லாத குதிரை போல்வாரது நட்பைக்காட்டிலும் தனிமை சிறப்புடையது என்பது கருத்து.

மா என்பது விலங்குகட்கெல்லாம் பொதுச் சொல்லா யினும், ஈண்டுக் குதிரையைக் குறிக்கும். கல்வி யில்லாத குதிரை என்பது, அதற்குரிய போர் முறையாகிய ஐந்து கதியும், பதினெட்டுச் சாரியையும், பொருமுரண் ஆற்ற லும் அறியாமை. அறிந்திருப்பின் ஆற்றறுத்தல் செய் யாது என்பதாம். இக்குதிரையனைய பண்புடையாருடன் நட்பாய் இருப்பதால் வருங் கேடு ஒருவர்க்குத் தனிமை யாய் இருப்பதால் வாரா தொழியலாம். எனவே ஆபத் தில் கைவிடும் அற்பரிடம் நட்புக் கொள்ளாதிருத்தல் வேண்டும். இதனை அடியொற்றித்தான் 'மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கியதுபோல' என்ற பழமொழி, நட்டாற்றில் கைவிடுவானை நோக்கி எழுந்தது போலும்.

உலையா முயற்சியுடையானுக்குக் காளையின் உயர் குணத்தை ஆசிரியர் இடுக்கண் அழியாமை அதிகாரத்து உவமை கூறுவர்.

**மடுத்தவா யெல்லாம் பகடன்னன் உற்ற**
**இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து**

தடைநேர்ந்த இடங்கள் எல்லாவற்றினும் வண்டியை முயன்று இழுத்துச் செல்லும் காளைபோல, ஒருசெயலை எடுத்துக் கொண்டு அதனைக் கடை போகச் செய்ய வல்லானை வந்துற்ற துன்பம், தானே துன்பத்தை யடைந்து புறங்காட்டி ஓடுமேயன்றி அவனை ஒன்றும் செய்ய இயலாது. காளை, பார வண்டியை இழுத்துச் செல்ல நேருங் காலத்து மணல், சேறு, மேடு முதலிய இடங்கள் வந்துழி வண்டிச் சக்கரத்தோடு சேர்த்

தலைத்து மூச்சுப் பிடித்து இழுத்தலும், தலையைத் தாழ்த்தித் திமிளில் பலத்தைச் செலுத்தி முயன்று இழுத்தலும், முயன்று மண்டியிட்டுத் தன் வலிமையெலாம் கொண்டு இழுத்தலும் இயல்பாதல் போல, ஒரு செயலை மேற்கொண்ட ஒருவன் தான் எடுத்ததனை எவ்வாற்றானும் தன்மெய் வருத்தம் பாராது, அரிதின் முயன்றும் முடித்தல் வேண்டும். அத்தகைய மனப்பண்பு உடையானுக்கு ஆகாத காரியம் ஒன்றில்லை. வந்த இடையூறு தானே விலகிப்போக நேருமே யன்றி எடுத்த வினைக்கு ஓர் இடையூறு வருதல் இல்லையாம். எனவே இடுக்கண் கண்டு அழியாதவனுக்கு எருது உவமையாக ஆசிரியரால் ஆளப்படுகிறது.

'மதுரைக் காஞ்சி'யின் இறுதிச் செய்யுள் ஒன்றில், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை 'பைங்கண் இளம்பகட்டின் மேலானை' எனச் சுட்டும் தொடரும், பகடு என்பதற்குப் பெருமை என்று பொருள் கண்டுள்ள புறநானூற்று உரையாசிரியர் கருத்தும், பகட்டின் பெருமையை நமக்கு உணர்த்தவல்லனவாம்.

## பசுவும் ஆடும்

பசுவை வள்ளுவர் மூன்றிடங்களிலே எடுத்தாள்வர். புலி பற்றிய பகுதியில் 'பெற்றம்' என்ற பொதுச் சொல் பசுவெனப் பொருள் பட்டு நின்றமையை முன்னர்க் கண்டோம்.

பசு பற்றிய இரண்டாவது குறள் வருமாறு:—

**ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
**காவலன் காவான் எனின்**

இக் குறளுக்குப் பரிமேலழகர் 'காத்தற்குரிய அரசன் உயிர்களைக் காவானாயின், அறனற்ற அவன் நாட்டுப் பசுக்களும் பால் குன்றும், அந்தணரும் நூல்களை மறந்து

விடுவர்' என உரை எழுதினர். மேலும் அதற்கு விளக்கம் தருவாராகி 'ஆபயன், ஆவாற்கொள்ளும் பயன். அறு தொழிலாவன:—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என இவை. பசுக்கள் பால் குன்றியவழி அவி இன்மையானும் அது கொடுத்தற் குரியார் மந்திரங் கற்பமென ஓதாமையானும் வேள்வி நடவாதாம்; ஆகவே பெயல் 'ஒல்லாதென்பதாயிற்று' என எழுதிப் போந்தார்.

இக் குறளுக்குப் பரிமேலழகரை மறுத்து வெளி வந்துள்ள புத்துரைகள் பலவாகும். அவையும் சிந்திக்கத் தக்கனவே. புத்துரை காணவேண்டிய நிலைமை 'அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின், ஒன்றன் உயிர் செகுத் துண்ணாமை நன்று' என்று வேள்வியையே அறக் கண்டித்த அருளுள்ளம் வாய்ந்த வள்ளுவர், காவலன் காவானெனின் வேள்விக்கு இன்றியமையா தனவாகப் பரிமேலழகரால் காட்டப்பெறும் பசுவின் பாலையும், மந்திரம் ஓதுதலையும் பற்றிப் பேசுவாரா, என்ற சிந்தனை யினின்று முகிழ்த்த தாகும். மேலும் ஆவாற்கொள்ளும் பயன் எனப் பொருள் கொள்ள வேண்டுமெனின் ஆப்பயன் என்று பாடமிருத்தல் வேண்டும்; எனவே ஆசிரியர் கருத்து வேறுதல் வேண்டும் என்பதாம்.

ஆகவே, புத்துரைகாரர்கள் ஆ பயன் என்பதற்கு ஆகும் பயன் என்றுகொண்டு, மக்களின் முயற்சியால்—தொழிலால் ஆகும் பயன் என்று விரித்து 'உழந்தும் உழவே தலை' என்பது வள்ளுவர் வாக்காதலின் தொழில் களிலெல்லாம் அடிப்படைத் தொழிலாகிய உழவுத் தொழிலை இது சுட்டுகிறது என்றும் கொண்டனர். அதனைத் தொடர்ந்து அறுதொழிலோர் என்பது அறுவைத் தொழிலாளரை - நெசவுத் தொழிலாளரைக் குறிக்கும் எனக் கொண்டனர். அறுவை என்பதற்குத் துணி என்பது பொருள் (நீளமாக நெய்து அறுப்பதனல்

அறுவை என்றும், துணிப்பதனல் துணியென்றும், துண்டாடப் படுவதால் துண்டு என்றும் பெயர் வழங்க லாயிற்று). எனவே, காவலன் காவான் எனின், நாட்டில் உழவுத்தொழிலும்,நெசவுத்தொழிலும்நசித்துப்போகும். இதனல் மக்கள் உணவுமின்றி, உடையுமின்றி வாடுவர். இதனினுங் கொடுங்கோன்மை யாதுளது ? கொடுங் கோன்மை அதிகாரத்துள் இக்குறள் இருப்பதையும் ஓர்க' என்று விரித்துப் பேசுகின்றனர்.

பரிமேலழகர் உரை சிறந்ததா?புத்துரை சிறந்ததா? என்ற ஆராய்ச்சியில் காலம் போக்காமல் ஆசிரியர் வள்ளுவரின் உண்மைக் கருத்து - உள்ளப் போக்கு யாது என்று பல்லாற்ருனும் சிந்தித்து ஒரு முடிவிற்கு வருதல் கடன்.

பசு பற்றி எஞ்சிய மூன்ருங்குறள்

ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இழிவந்தது இல்

என்பது. இரத்தலின் இழிவைக் கூறவந்த ஆசிரியர், தண்ணீர்பெருது இறக்கும் நிலைமைத் தாயதோர் ஆவினைக் கண்டு அறன்நோக்கி இதற்குத் தண்ணீர் தரல் வேண்டுமென்று இரந்து செல்லுங்காலும் அவ் யாசகச் சொற்போல அவனது நாக்கிற்கு இழிவுதரும் சொல் வேறில்லையெனக் கூறுகின்ருர்.

ஆவின்மேற் பிறந்த அருளால், அஃதிறவாது காத்தற் பொருட்டும்கூட விலையொன்றில்லா எளிய பொருளாய நீரையும் பிறர் ஒருவரிடம் இரத்தல்கூடாது. அங்ஙனம் இரத்தலால், ஈவாருக்கு ஏற்படும் பொருள் இழப்பு யாதொன்றுமில்லை; எனவே இல்லையென மறுத்துரைப்பரோ என எண்ணவே இடமில்லை. அவ் இரவால் வரும் பயனே நல்லுயிர் ஒன்று காக்கப்படுதல் ஆகும். இவ்வளவிருந்தும் இரத்தல் இழிவானது

என்பது ஆசிரியர் உட்கிடை. அறனும் முயன்று செய்வ தல்லது இரந்து செய்யற்க என்பது குறிப்பு.

இக்குறட்போக்கால், ஆ காத்தோம்பலே அக்கால மக்கள் சிறந்த அறச்செயலெனக் கருதினர் என்பதை ஓராற்ருன் நாம் அறியலாம். நிற்க,

அரசர் போர்க்கெழுங்கால் இடனறிதல் எத்துணை முக்கியமோ, அத்துணை இன்றியமையாதது காலமறித லும் ஆகும். மிக்க வலிமையுடைய மன்னனெருவன் மாற்ருனெடு உடனே போர்தொடுக்க வேண்டிய தேவை ஏற்பட்டும் வாளாவிருக்கிருன் எனின், அஃது அச்சம் காரணமாகவன்று, காலமறிந்த செயலால்தான் என்கிருர் ஆசிரியர். அக்காலந்தாழ்ப்பு உறுதியாய் வெற்றிபெற வேண்டும் என்ற எண்ணத்தால் ஏற்பட்ட தாம். ஆடுகள் சண்டை செய்யுங்கால் ஒன்றையொன்று முட்டித் தாக்குவதற்கு முன், சற்றுப் பின்வாங்கி நின்று வேகமாக ஓடிவந்து முட்டும்இயல்பின. ஆடு பின்வாங்கிச் சென்று காலந்தாழ்த்தல் சண்டைக்குப் பயந்தன்று, ஆயின் தாக்குவதற்கு வேகம்தரும் பொருட்டேயாம். இதனையறிந்த ஆசிரியர் ஆட்டின் இக்காலந்தாழ்ப்பை உவமை காட்டி ஊக்கம் உடையானின் ஒடுக்கத்தின் காரணத்தை விளக்கினுர்.

**ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்**
**தாக்கற்குப் பேரும் தகைத்து**

வலிமைமிகுந்த அரசன் பகைவர் மேற்செல்லாது காலம் கருதிக் காத்திருக்கும் இயல்பு, சண்டை செய்கின்ற ஆட்டுக்கிடாய் தன் பகைகெடப் பாய்தற் பொருட்டு பின்னே கால்வாங்கும் இயல்பை யொத்தது என்ருர்.

இக்காலம் நாட்டுப்புறங்களில் அருகிக் காணப்படும் இக்கிடாய்ச் சண்டை, வள்ளுவர் காலத்தில் பெருவர விற்ருய் இருந்திருத்தல் வேண்டும் என்பதை இக்

குறளால் இனிது அறியலாம். 'தகர் வென்றி' என்று ஒரு துறை புறப்பொருள் வெண்பா மாலையில் காணப் படுவதும் இதனை வலியுறுத்தும்.

## கவரிமானும் பிணையும்

**மா**னம் என்ற அதிகாரத்து, வள்ளுவர் கவரி மாவின் இயல்பை மானமுடையார்க்கு ஒப்புக் கூறிய அருமையான குறள்

> மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
> உயிர்நீப்பர் மானம் வரின்

என்பது. தன் மயிர்த்திரளின் ஒருமயிர் நீங்கினும் அவ மானமென எண்ணி உயிர் வாழாத கவரிமாவை ஒப்பார், அவமானம் ஒன்று உற்றபொழுது அதனைத் தாங்காது உயிர்விடும் மானமுடையார் என்றார். உயிரும் மானமும் உடன் நிற்க ஏலாத துன்ப எல்லை ஒன்றுவரின், உயர்ந்தோர், பின்னும் என்றேனும் ஒருநாள் போவதாய உயிரை நீத்து, எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை நிலைநாட்டுவர்.

உயிரினும் மானம் சிறந்தது என்பதைத் தொல் காப்பியர் மிகத் தெளிவாக 'உயிரினும் சிறந்தன்று நாணே' எனக் களவியலுள் கட்டுரைத்தனர். 'மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிதே' என்பது கீழ்க் கணக்கு. மா என்ற விலங்குப் பொதுச் சொல் ஈண்டுக் கவரியோடு அடுத்து நின்று கவரியாகிய விலங்கு எனப் பொருள்பட்டு கவரிமான் எனப்பட்டது.

இக்குறளால் காட்டில் வாழும் கவரிமா தன்னிட முள்ள நீண்டமுடியில், ஒருமுடி அற்று விழுமாயின் அதற்குத் தாளாமல் தன் உயிரையே மாய்த்துக் கொள்ளும் இயல்பினது என அறிகிறோம்.

இனி, பெண்மான் என்ற பொருளுடைய பிணை என்ற சொல் இன்பப்பாலின் இரண்டு குறளிலே காணப் படுகிறது. அவை வருமாறு :—

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம் இம்மூன்றும் உடைத்து

பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணியெவனோ ஏதில தந்து

இவ்விரண்டு இடங்களிலும் பெண்ணின் பார்வைக்குப் பெண்மானின் பார்வை உவமையாக வந்துள்ளது. இயல்பாக வெருவுதல் உடைமை, பிணையின் கண்களுக்கு உரியது. மருண்ட பார்வை என்பதும் அக்கருத்துப் பற்றியதே. 'மயிலியல் மான்நோக்கின் கிளிமழலை மென்சாயல்' என்பது பட்டினப்பாலை. இங்ஙனமெல்லாம் கூறுவது பண்டைமரபு. பிணையென்பது விலங்குகளின் பெண்பாற் பொதுச் சொல்லாயினும் ஈண்டு மானைக் குறித்து நின்றது.

இவ்வாறாக, வள்ளுவப் பெருந்தகை தம் கருத்துக்களை விளக்கும் கருவிகளாகப் பதினொரு விலங்குகளை இருபத்தொரு குறள்களில் எடுத்தாண்டுள்ளார்.

௫

# புள்ளினம்

'முப்பால் மொழிந்த முதற் பாவலரொப்பார், எப்பாவலரினுமில்' என நல்லந்துவனரால் நாட்டப் பெற்ற பெரும் புகழ்க்குரிய பேராசான் திருவள்ளுவர், பறவைகளைப் 'புள்'ளென்ற சொல்லால் கூடாவொழுக் கம், நிலையாமை என்ற இரண்டதிகாரங்களில் இரண்டு குறள்களில் சுட்டுவர். இப்புள்ளென்ற சொல்லன்றி பறவை என்ற பொதுச்சொல் திருக்குறளகத்துக் காணப் படுமாறில்லை. எனினும் 'புட் பறந்தற்றே' எனவரூஉம் தொடரில் புள்ளின் வினையான பறத்தல் ஆளப்படு கிறது. பறவை என்பது புள்ளின் இயல்பு வினையான பறத்தலிலிருந்து உண்டான காரணப்பெயர்.

வள்ளுவர்க்குக் காலத்தால் மிக முந்தியவராய தொல் காப்பியர் தமது ஒப்பற்ற இலக்கண நூலில் அகத்திணை இயலில், கருப்பொருள் பற்றிப் பேசுகின்ற பாக்களில் "தெய்வம், உணவே, மா, மரம், புள், பறை ..........." என்றும், ''எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்'' என்றும் புள் என்ற சொல்லைக் கையாளுகின்றனர். பின்னர் மர பியலில் இளமைப் பெயர்களைச் சுட்டவருகின்ற விடத்து 'பார்ப்பும், பிள்ளையும் பறப்பவற்றிளமை' என்ற பறத்தல் வினை காரணமாயேற்பட்ட பெயர்ச்சொல்லான பறப்பன என்பதையும் கையாள்வர். புள்ளென்ற பெயரோடு பறப்பவை (பறவை) என்ற பெயரும் தொல்காப்பிய ஞருக்கு உடன்பாடென்பது இதனுல் போதரும். எட்டுத் தொகை, பத்துப்பாட்டு முதலான சங்க இலக்கியங் களிலே புள்ளென்ற சொல்லும் பறவையென்ற சொல்

லும் தனித்தனியே பல இடங்களில் வேறுபாடின்றி ஆளப்படுகின்றன.

எனவே, புள்ளென்ற பெயரோடு (பறப்பவை) பறவையென்ற பெயரும் பொதுப் பெயராகப் பண்டு தொட்டே நூல்களில் வழங்கி வந்துள்ளமையை அறிகிறோம். எனினும் வாய்ப்பின்மையாலோ, அல்லது வேறெக்காரணத்தாலோ திருக்குறளில் பறவை என்ற சொல் தனித்துக் காணப்படுமாறில்லை.

திருவள்ளுவர், ஐந்து குறள்களில் ஐந்து பறவைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அவை, காக்கை, கூகை, கொக்கு, அன்னம், மயில் என்பனவாம். இவையன்றிப் பிறிதோர் குறளில் மயிற்றோகை எனப் பொருள்படும் பீலி என்ற சொல்லைக் காண்கிறோம்.

### காக்கை

மருத நிலத்துப் புள்ளாகிய காக்கை குறளில் இரண்டிடங்களிலே சுட்டப்படும். அதன் இருவேறு பண்புகளை அவற்றால் நாம் அறிகிறோம். தமிழ் நாட்டில் இன்றும் காக்கைக்குச் சோறு வைத்துவிட்ட பிறகே தாம் உண்ணும் பழக்கம் வழக்கத்தில் இருந்து வருகிறது. பிடிச்சோற்றைக் கண்ட காக்கை கரைந்து கரைந்து தன் இனத்தையெல்லாம் அழைத்து, எல்லாம் ஒன்றுகூடி அதனை உண்ணும் இயல்பினது. இக்காட்சியை நம்மைப் போலவே கண்ட வள்ளுவர், மனிதன் காக்கையைப் போன்று தன் சுற்றத்தை அழைத்து விருந்தோம்பி வாழவேண்டும் என உளங்கொண்டு, தான் கண்ட காட்சியை உவமையாக்கி,

> காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
> அன்னநீ ரார்க்கே உள

என்று அறிவுறுத்தி அருளினர்.

காக்கைக்குப் பலிச் சோறிடுதல் இன்று நேற்று தமிழரிடைத் தோன்றிய பழக்கம் அன்று. சங்க காலந் தொட்டு வழிவழியாக வருவது. இப் பழக்கத்திற்குரிய அடிப்படைக் காரணம் யாது? பலர் பலவாறு விடை யிறுப்ப.

குறுந்தொகையிலே பெண்பாற்புலவர் ஒருவர் பெயர், 'காக்கை பாடினியார் நச்செள்ளையார்' என்று காணப்படுகிறது. அவரது இயற்பெயர் செள்ளை என்பது. உயர்வு நோக்கிப் பெயரின் முன்னும் பின்னும் அடை மொழி புணர்த்தி நச்செள்ளையார் என்ருயிற்று. கீரன், அந்துவன், ஆதன் என்பன நக்கீரனுர், நல்லந்துவனுர், நல்லாதனுர் என வழங்கும் மரபு காண்க. இந்தச் செள்ளை யார் காக்கையைப் பற்றிப் பாடிய காரணத்தால் அவருக் குக் காக்கை பாடினியார் என்ற தனிச் சிறப்பு அடை மொழியும் பெயருக்கு முன்னே சேர்க்கப் பெற்றது. மடல் பாடிய மாதங்கீரனுர், பாலை பாடிய பெருங்கடுங்கோ, மருதன் இளநாகனுர் எனவரூஉம் வழக்காறு அறிக.

இங்ஙனம் காக்கை பாடினியார் என்ற சிறப்புப் பெயர்வரக் காரணமாயிருந்த பாட்டு தோழி கூற்ருகும். 'யான் பிரிந்த காலத்தில் தலைவி துயருருமல் ஆற்று வித்த உன்னைப் பாராட்டுகிறேன்' என்று தலைவியைப் பிரிந்து சென்று மீண்டுவந்த தலைவன் தோழியைப் பாராட்டினுன். அதற்கு மறு மொழியாக "உன் பாராட் டுக்குரியவள் நானன்று. நின் வரவை முன்னரே உணர்த்தும் நிமித்தமாகக் காக்கை கரைந்தது. அது காட்டி யான் ஆற்றுவித்தேன். ஆகவே பாராட்டுக்குரியது காக்கையே" எனத் தோழி விடை சொல்லுவது போன்ற குறிப்புடையதாக அப்பாடல் அமைந்திருக்கிறது.

'விருந்து வரக் கரைந்த காக்கை' என்பது அப்பாடல் தொடர். இத்தொடரால், காக்கை கரையின் விருந்து

வரும் என்ற நம்பிக்கை நம்முன்னேருக்கும் இருந்த தென்பது தெளிவு. இந் நம்பிக்கைக்குரிய அடிப்படையை உள நூல் நோக்கொடு ஆராயின் தகுந்த முடிவு பெறுவோம். காக்கை விருந்தின்றி உண்ணுது. பூ வென்றவுடனே அதன் மணமும் உடன் தோன்றுமாப் போல, காக்கை என்றவுடனே விருந்து என்ற எண்ணமும் மக்களுக்கு உடன் தோன்றி யிருத்தல் இயல்பே. அவ்வெண்ணமே காலம் செல்லச் செல்ல வளர்ந்து 'காக்கை கரையின் விருந்து வரும்' என்ற நம்பிக்கையாக மலர்ந்திருத்தல் கூடும். இல்லறத்தானுக்குரிய தலையாய பண்பான விருந்தோம்பலை நாடோறும் மனிதனுக்கு அறிவுறுத்தும் முகமாகவே, விருந்தை நினைவில் எழுப்பும் காக்கைக்கு, தாம் உண்ணு முன் பலிச்சோறிடும் வழக்கம் தொடங்கியிருக்கலாம்.

பலிச்சோற்றைக் கண்ட மாத்திரத்தே கரைந்து தன் இனத்தாரை அழைத்து உண்ணும் காக்கையைப் போன்று செல்வமுற்றவிடத்துத் தாம் நுகர்வனவெல்லாம் மறைக்காது சுற்றமும் நுகருமாறு வைக்கும் இயல்புடையார்க்கு அறம், பொருள், இன்பம் முதலிய ஆக்கம் கிடைக்கும் என்பது குறட்கருத்து. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல். சுற்றத்தினரைத் தழுவி வாழும் வாழ்க்கையே மனித வாழ்க்கை. காக்கையின் பண்பு மூலமாக இக் கருத்தை நமக்கு எடுத்துக் காட்டி நற்செயற் படுத்துவர் ஆசிரியர். இதனை அடியொற்றியே சிவஞானப் பெரியார் ஒருவரும் 'காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர் - சிவபோக சாரம் பழுத்துக் கிடக்குதையோ - சேர வாரும் செகத்தீரே' எனப் பரிந்து கரைந்து அழைக்கின்றார்.

### காக்கை கூகை

காலமறிதல் அதிகாரத்திலே வள்ளுவர் காக்கையின் வேருெரு தன்மையை எடுத்துக் கையாள்வர். அக்

குறளிலே இன்னெரு புள்ளான கூகையையும் உடன் சுட்டுகிருர். காலமும் இடமும் செவ்விதின் நோக்கிச் செயற்படுவார், இவ்வுலகத்தையே கொள்ள நினைப் பினும் அதுவும் கைகூடும் என்ற கருத்திற்கு விளக்கம் தரும் முறையில் காகத்தின் குணத்தையும் கூகையின் இயல்பையும் பயன் படுத்திக் கொள்கிருர்.

பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது

தன்னைக் காட்டிலும் வலிமையுடைய கூகையைக் காக்கை பகற்பொழுதின் கண் வெல்லும். அதுபோலப் பகைவரது இகலை வெல்லக் கருதும் அரசர்க்கு அதற்கேற்ற காலம் மிக இன்றியமையாதது.

இக் குறளின் மூலம் காக்கைக்கும் கூகைக்கும் இயல் பிலேயே பகைமை யுணர்ச்சியுண்டு, காகம் கூகையை விடப் பலங் குறைந்தது; பகற்காலத்தில் கூகை கண்ஒளி மங்கித் தோன்றும் காரணத்தால் காக்கையினுல் வெல் லப்படும் என்றினைய செய்திகள் விளங்குகின்றன.

இவ்விரு புட்களின் இத்தன்மைகளைக் கூர்ந்து உணர்ந்தமையினுலேதான், அரசர்கள் ஒருவரோடொரு வர் செய்யும் போரில் அவர்தம் படைவலிமை ஒரு புற மிருக்க, 'பொழுது' அஃதாவது காலம் மிக இன்றியமை யாது கருதப்பட வேண்டியது என எடுத்துக்காட்டி ஆசிரியர் அறிவு கொளுத்துகிருர்.

இக் கருத்தைச் சீவகசிந்தாமணி ஆசிரியர்

இடத்தொடு பொழுது நாடி எவ்வினைக்கண்ணும் அஞ்சார்
மடப்பட லின்றிச் சூழும் மதிவல்லார்க் கரிய துண்டோ
தடத்திடைக் காக்கை யொன்றே யாயிரம் கோடி கூகை
இடத்திடை அழுங்கச் சென்ருங் கின்னுயிர் செகுத்த
தன்றே

என்று தம் காப்பியத்துள் முன்னேர் மொழி பொருளைப் பொன்னே போல் போற்றுவர்.

வள்ளுவர், வலிகுறைந்த ஒரு காக்கை தன்னிலும் வலிமைமிக்க ஒரு கூகையைக் காலம் என்ற துணை கொண்டு வென்றது என்றார். திருத்தக்க தேவர் அக் 'காலம்' என்ற துணை எவ்வளவு வலிமையுடையது என்பதை விளக்குவாராகி, ஒரு காக்கை ஆயிரம் கோடி கூகைகளை வென்றது என அழுத்தம் தந்தார். வள்ளுவரின் குறளுக்கு இப் பாடல், விரிவுரையாக நின்று விளக்கம் தருவதுபோல் அமைந்திருக்கிறது. வள்ளுவர்க்குப் பின் வந்த புலவர்க்கெல்லாம் கருத்துக் கருவூலமாகக் குறள் விளங்குவதும், குறட் கருத்தை எடுத்தாளும் புலவர்கள் அதற்கோர் விளக்கவுரை தருவார் போல அமைவதும் நாம் இன்றுவரை காணும் காட்சி இதனை நன்குணர்ந்தே திருவள்ளுவ மாலையில் 'முப்பால் மதிப்புலவோர்க்கு ஆய்தொறும் ஊறும் அறிவு' என உருத்திரசன்மகண்ணர் அழகுற மொழிந்தனர்.

## கொக்கு

தனக்குரிய வெற்றிக் காலத்தைத் தேர்ந்து கொண்ட மன்னன், எங்ஙனம் வினையாற்ற வேண்டு மென்பதை வள்ளுவர் இவ்வதிகாரத்தின் இறுதியில் மற்றொரு புள்ளின் தன்மையை உவமை காட்டி விளக்குவர்.

நீர் நிலைகளில் மீனைப்பிடிக்க விருக்கும் கொக்கு அம் மீன் வருமளவும் உயிரில்லாதது போல அசைவற்றிருந்து, வந்தவழி அம்மீன் அறிந்து தப்புவதற்கு முன்னே விரைந்து குத்தி அதைக் கொன்று தன் வினையை முடிக்கும். அரசனும் வினைமேற் செல்லாது ஒடுங்கி இருக்கும் காலத்துக் கொக்கிருக்குமாறு போலத் தன் எண்ணத்தைவெளிக்காட்டாதிருந்து, மற்றைச்செல்லுங் காலம் வாய்த்த விடத்து அக் கொக்கு செய்து முடிக்குமாறு போலத் தப்பாமற் செய்து முடிக்க வேண்டும்.

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து

கொக்கின் அமைதியான இருப்பையும், விரைந்து தொழிற்பட்டுக் குத்திக் கவ்வித் தவருது வினைமுடிக்கும் ஆற்றலையும் நுண்மையாகக் கண்டு வள்ளுவர் சுட்டுகின்ற இக்கருத்தை

அடக்க முடையார் அறிவிலர் என்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டாம் - மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு

என்று சிறு நூலாகிய மூதுரையும் வேருெரு முறையிலே சித்திரிக்கும்.

சித்திரத்தில் தீட்டியது போல, ஆடாது அசையாது இருக்கும் கூம்பும் பருவக் கொக்கின் இருப்பை 'வாடி யிருக்குமாம்' என்ற தொடரால் சுட்டி 'உறுமீன் வருமளவும்' என்ற தொடரால் 'சீர்த்த இடத்து' என்பதற்குப் பொருள் விளக்கமும் செய்த மூதுரையாசிரியரின் நயம் பாராட்டிற்குரியதே. தற்காலத்து 'வாய்ப்பு' (Opportunity) என்று நாம் வழங்கும் சொல்லின் கருத்தையே வள்ளுவர் 'சீர்இடம்' எனச் சுட்டுகிருர். 'சீர்இடம் காணின்' என்பது கூடாநட்பு அதிகாரத்துக் குறள் தொடர். இங்ஙனமாய அருமைச்சொற்களை நாள்வழக்கில் கொணர்தல் மொழிவளர்ச்சிக்கு இன்றியமையாதென்க. இலக்கியப் பயிற்சி மிக்கார் எஞ்ஞான்றும் மொழிவளர்ச்சி நோக்கை மனத்துட்கொண்டு சீரிடம் கிடைத்தபோதெல்லாம் இனைய தூய செஞ்சொற்ருெடர்களை வெளிக் கொணர்தல் கடமை,

## *மயில்*

குறிஞ்சி நிலப்புள்ளாகிய மயிலைப் பெண்களின் சாயலுக்கு ஒப்பிடுவது புலவர் மரபு. அறத்துப்பால்,

பொருட்பால் பற்றிப் பேசி இன்பப்பாலைத் தொடங்கு கின்ற ஆசிரியர் அதன் முதற்குறளில் பெண்ணை மயிலுக்கு ஒப்பிடுகிறார்.

பொழில் விளையாட்டு விருப்பத்தால் இங்கொருவர் அங்கொருவராய் உடன்வந்த தோழியர் அனைவரும் நீங்கிவிட, சோலையின்கண் தலைவி தனியே நிற்கிறாள். வேட்டை மேற்செல்வதால் பல்லாற்றானும் அங்கங்கே தோழர்கள் பிரிந்து போய்விடத் தனி நின்ற தலைவன் எதிர்பாராத விதமாய்த் தலைவி நின்ற தனிச் சோலையூடு புகுகின்றான். ஆங்கு அழகே வடிவாய் நிற்கும் கன்னி யைக் காண்கின்றான். இன்னதென்றறியா ஈர்ப்புச் சக்தி யால் கவ்வப்பட்டு, மகுடியோசை கேட்ட நாகம்போல் அசைவற்று மயங்கி, அவள் அழகைத் தன் இரு கண்ணா லும் முகந்து பருகுகிறான். எழுதலாகா வடிவழகையும் தனக்குண்டாய மனவருத்தத்தையும் எண்ணி, இவள் இச் சோலைக்கண் உறைவாளோர் தெய்வப் பெண்ணோ என மயங்குகிறான். அற்றன்று, சுற்றுப்புறச் சோலை யழகையும் நிற்கும் சாயலையும் நோக்க, இஃதோர் தோகை நீண்ட மயிலாகத்தான் இருக்கவேண்டும் என்ற முடிவிற்கு மறுகணம் வருகிறான். அந் நிலையில் அவ்வுரு தன் தலையைத் திருப்பித் தன் கண்களால் எதிர் நோக்கு வதையும் தன் நெஞ்சம் ஆங்கே காந்தம் கண்ட இரும்பு போலப் போனமையையும் உடன் உணர்கிறான். அறிவோ கலங்கி விட்டது. அவ்வுரு இன்னதெனத் தெளியும் ஆற்றலை இழந்து விட்டான்.

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு

கனத்த காதணியையுடைய இவளை, இன்னதெனத் தெளிய மாட்டாது என் நெஞ்சு மயங்குகிறது என்று தலைவன் கூறுவதாக இப்பாடல் அமைந்திருக்கிறது.

## மயிற் பீலி

பெண்ணின் சாயலுக்கு மயிலை ஒப்பிடும் வள்ளுவர், அதன் தோகையின் மற்ெருரு தன்மையை வலியறிதல் என்ற அதிகாரத்திலே சுட்டுகிருர். மயிலின் தோகையை மயிற்பீலி என்னல் வழக்கு. அது மிக மென்மையுடையது. எனவே கனமற்றது. பண்டைக்காலத்தில் தமிழ் நாட்டிலிருந்து எகிப்து முதலிய நாடுகட்குக் கடல் கடந்து ஏற்றுமதியான பொருள்களில் மயில் தோகையும் ஒன்றென்பதைப் பிறநாட்டு வல்லுநரின் வரலாற்று ஆராய்ச்சியால் ஒருவாறு நாம் அறிகிருேம். மொழியாராய்ச்சித் துறையில் புகழ் பெற்ற பல அறிஞர்கள் ஈபுரு மொழியில் காணப்படும் 'துகி' என்ற சொல் நம் நாட்டுத் தோகை என்பதின் திரிபே எனக் கூறுகின்றனர். எனவே பண்டை நாளில் தமிழ் நாட்டிலிருந்து பிற நாடுகட்கு மயில்தோகை ஏற்றுமதியாயிற்று என்ற உண்மை பல சான்றுகளால் உறுதி செய்யப்பட்டுள்ள ஒரு பழங்கருத்து.

இக் கருத்துக்கு அரண்செய்யும் மற்ெருரு சான்ருக வள்ளுவர் குறள் அமைவதை நோக்கப் பெருமகிழ்வடைகிருேம். மயிற்பீலியை வண்டியில் ஏற்றிச் செல்லும் வழக்கத்தை இக் குறள்போலத் தெளிவுறுத்தும் வேறு சான்றுகள் தமிழ் இலக்கியங்களில் இல்லையென்றே நான் எண்ணுகிறேன். அவ் அருங்குறள் வருமாறு:—

> பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
> சால மிகுத்துப் பெயின்

இவ்வருமைத் திருக்குறள், எளியரென்று பலரோடு பகைகொள்வான் மிக வலியனேயாயினும், அவ் எளியர் ஒன்று சேர்ந்த விடத்துத் தன் வலி யழிவான் என்ற கருத்தைத் தோற்றுவித்து நிற்கிறது.

இக் குறளில் உவமையை மட்டும் கூறி அதனுற் போந்த பொருளாகிய கருத்தை நாமே அறியும்படி ஆசிரியர் விட்டு விட்டார். இங்ஙனம் பொருளைக் கூருது உவமத்தை மட்டும் கூறிப் பொருளை உய்த்துணரவைக் கின்ற முறையை அணி இலக்கணத்தார் ஒட்டணி அல்லது பிறிது மொழிதல் அணி, அல்லது நுவலா நுவற்சி என்பர்.

மயிற்பீலி மிக நொய்மையுடையதுஎன்பதும், அஃது ஏற்றப்படுகின்ற சகடம் அல்லது வண்டி வன்மையுடைய தென்பதும், அவ் வண்டி பொறுக்கும் அளவிற்குமேல் ஏற்றின், மிக நொய்மையுடைய பீலியாறுலும் அதன் அச்சு முறிந்துபோகும் என்பதும் இக் குறளால் நாம் அறியக் கிடப்பன. இன்றும் கூட, பாரமேற்றிச் செல்லும் வண்டிகள் பெரும்பாலும் ஏனைய வண்டிகளைவிடக் கனமாகவும் உறுதியாகவும் இருக்கின்றமையை நாம் பார்க்கிருேம். ஆளூர்தி (மோட்டார்)களில் கூட இத்தனை யளவு தான் ஏற்றலாமென்ற விதியிருப்பதையும், சாமான் ஏற்றப்படும் சரக்கூர்தி (லாரி)களில் அவ் அளவு களை அதன் பின்புறத்தில் குறித்திருப்பதையும் நாம் இன்று காண்கிருேம். வாணிகத்திற்குரிய பொருளையே பண்டம் என்ற சொல்லால் பண்டையோர் சுட்டினர் என்பது ஈண்டு நினைவு கொளற்குரித்து. 'பல் பண்டம் பகர்ந்து வீசும் தொல் கொண்டித் துவன்றிருக்கை' என்ற பட்டினப்பாலை யடிகள் காண்க. பண்டைத் தமிழ் நாட்டின் வணிக நிலைக்கு இத் திருக்குறளே சாலும் கரி.

## அன்னம்

சரித்திரச் சான்ருன குறிப்பை உள்ளடக்கிக்கொண் டிருக்கும் மேற்குறளில் மயிலின் இறகு நொய்மை யானது என்றுகாட்டும் வள்ளுவர், மென்மைக்கு எடுத் துக்காட்டாக அன்னப்புள்ளின் இறகை வேருரு

குறளில் சுட்டுகிறார். அனிச்ச மலரையும் அன்னத்தின் தூவியோடு உடன் எண்ணி, அவ்விரண்டு மென்மைப் பொருளும் நெருஞ்சிமுள் போன்று பெண்களின் மெல்லிய பாதங்களை உறுத்தும் என்று வன்மை காட்டுவர். தலைவியின் மென்மை நலத்தைப் புனைந்துரைக்கும் தலைவனின் வாய்மொழியாக இலங்கும் அக்குறட்பா வள்ளுவரின் கற்பனை வளத்திற்கும், காவிய உணர்வுக்கும் நல்ல காட்டாகும். அக்குறள்,

> **அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
> **அடிக்கு நெருஞ்சிப் பழம்**

என்பது.

இக்குறளில் எடுத்தாளப்பட்டிருக்கும் அனிச்ச மலரையோ அன்னத்தின் தூவியையோ நாம் இன்று இன்னவெனக் காணுமாறில்லை. ஆனால் பெண்கள் அனிச்சப் பூவைத் தலையில் சூடிக்கொள்ளும் வழக்கமும், மாலையாகக் கட்டி மார்பில் அணிந்து கொள்ளும் வழக்கமும் பண்டைத் தமிழகத்தில் இருந்து வந்தன என்பதைப் பல இலக்கியங்களின் வாயிலாக நாம் நன்கறிய முடிகிறது. ஐவகை மெத்தைகளில் அன்னத் தூவியால் செய்யப்படும் அமளியும் ஒன்றென்று திவாகரம், பிங்கலந்தை முதலிய நிகண்டு நூல்கள் நமக்குக் காட்டுகின்றன. மயிற்பீலியாலும் அமளிசெய்து பயன் படுத்தி வந்தனர் என்பது மேற்கண்ட நூல்கள் நமக்குக் காட்டும் மற்றோர் அருஞ்செய்தி.

இனி, அன்னத்தின் தூவி என வரும் இடங்களிலெல்லாம் பண்டை நூல்களில் 'துணைபுணர் அன்னத் தூவி' என்றே பேசப்படுகிறது. 'துணைபுணர் அன்னத் தூவி' என்பது கலித்தொகை. 'இணைபுணர் எகினத் திளமயிர்' 'துணைபுணர் அன்னத்தூவி' என்பன இளங்கோவடிகள் வாக்கு. மேற்கண்ட கலித்தொகைப் பகுதிக்கு

நச்சினுர்க் கினியர் 'துணையைப் புணர்ந்த காலத்து மெய்யுருகி உதிர்ந்த தூவிதானும் மிக மெல்லிதாயிருக்கு மென்பதை உணர்த்தற்குத் துணைபுணர் அன்ன மென்ருர்' என விரிவுரை தந்தனர். இவ்வாறு அரிதின் கிடைக்கப்பெற்ற அன்னத்தூவியைச் சேர்த்து மெல் லணை அமளி செய்ய வேண்டுமென்ருல், அக்காலத்தில் அன்னப்புள் எங்ஙனம் பெருவரவிற்ருய், நம் நாட்டில் வாழ்ந்து பெருகியிருந்திருக்க வேண்டும் என்பதை நாம் ஒருவாறு ஊகிக்கலாம்.

இஃதொப்பவே அனிச்ச மலரும் பெருவரவிற்ருய் முன்னைய தமிழ் நாட்டில் வழங்கி வந்தது என்பதை, வள்ளுவர் அதனைத் தம் நூலில் நான்கு இடங்களில் சுட்டுவதொன்றுகொண்டே நாம் அறியலாம். ஆசிரியர் வள்ளுவர் காலத்தில் எல்லாருக்கும் தெரிந்த காரணத் தால் மென்மைக்கு எடுத்துக்காட்ட உதவிய அனிச்ச மலரும் அன்னத்தின் தூவியும் இன்று நம்காலத்து இல்லை யென்பதை எண்ண வியப்பும் வருத்தமும் ஒருங்கே எழுகின்றன. திருக்குறளில், பொருளின் செறிவு ஒரு புறமிருக்க, நாம் இன்று அறியமுடியாமல் உவமையாக வரும் இன்னோரன்ன செய்திகளும் சில உள.

இனி, குறளிற் காணப்படும் காக்கை, கூகை, கொக்கு, அன்னம் ஆகிய நான்கு புட்களும் மருத நிலத் துக் குரியன. மயில் குறிஞ்சிப் புள்ளாகும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வகுக்கப்பட்ட ஐவகை நிலத்தும் நடுநாயகமாக விளங்குகின்ற மருத நிலமே நாகரிகத்தின் பிறப்பிடம். கலைகளின் விளை நிலம். இன்பத்தின் எல்லையைக்காட்டும் எழிலரங்கு. மனிதனது அடிப்படைத் தேவையான 'அன்ன விசாரத்'தைத் தீர்க் கின்ற உணவுக் களஞ்சியமுமஃதே. இதனாலன்றோ கவிச் சக்கரவர்த்தி கம்பர், கலைகளில் மிக உயர்ந்த நுண்கலை

ளாகிய ஆடலும் பாடலும் மருதநிலத்தின் அஃறிணைப் பொருள்களிற் கூட, ஊடுருவி நிற்கின்ற தன்மையைக் கண்டு,

> தண்டலை மயில்க ளாடத்
> தாமரை விளக்கம் தாங்கக்
> கொண்டல்கள் முழவின் ஏங்கக்
> குவளைகண் விழித்து நோக்கத்
> தெண்டிரை எழினி காட்டத்
> தேம்பிழி மகர யாழின்
> வண்டுகள் இனிது பாட
> மருதம்வீற் றிருக்கும் மாதோ

என அனுபவித்து உணர்த்துகின்றார்.

இம்மருத நிலத்தில் தம் வயிறு நிரம்பி வறுமை யின்றி வாழும் வளம் நிரம்பிய மக்களை மனத்திற் கொண்டு வள்ளுவரும் விருந்தோம்பும் அறத்தை, காக்கையின் இயல்பு காட்டி விளக்குகிறார்.

மக்கள் ஒரே இடத்தில் தங்கி இனிது இருந்து பெரு நகரங்களை உண்டாக்கி மன்னரைப் படைத்த மாண்புற்ற வளர்ச்சியும் இந்நிலத்துக்கே உரியது. அவ்வரசர் போற்ற வேண்டிய காலமறிதல், வினைசெய் பொழுதறி தல் என்பவற்றையும் இம் முறையிலேயே வள்ளுவர் கூகை, கொக்கு முதலிய மருதநிலப் புட்களாலேயே உணர்த்துகிறார்.

ஊடல், மருதத்தின் உரிப்பொருளாகும். இன்பத் தின் அடிப்படை ஊடல்தான். ‘காமம், புணர்தலின் ஊடல் இனிது’. காதலியோடு ஊடியும் கூடியும் இன்பம் துய்த்த தலைமகனுக்கு, ஊடிக்கூடிய காலத்து உருகி நெகிழ்ந்த மருதநில அன்னத்தின் தூவி நினைவிற்கு வருதல் இயல்பே. அந்நினைவால் ‘அன்னத்தின்

தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழம்' என்று கூறிக் காதலியின் நலனைப் பாராட்டுகிருன்.

இஃதொப்பவே கூடலும் கூடல் நிமித்தமும் தன் உரிப்பொருளாயுடைய குறிஞ்சி நிலத்தில் தலைவனும் தலைவியும் தலைப்படுகின்ற இன்பப் பாலின் முதற் குறளில் குறிஞ்சிப் புள்ளாகிய மயில் கொண்டு வள்ளுவர் சாயல் காட்டுவர்.

இவற்றுல், ஒருநிலத்து உரிப்பொருளை அந் நிலத்துக் கருப்பொருள் கொண்டே விளக்குதல் பண்டைய இலக்கிய நெறி என்று அறியலாம். இங்ஙனம் ஆசிரியன்மார் சொல்லிய செய்திகளைப் பொருத்திப் பார்த்துக் கற்க வல்லார்க்குத் தமிழ்ப் பொருள் இலக் கணம் பெருஞ்சுவை ஊட்டும் என்பது ஒருதலை.

சா

# மக்களினம்

'வையத்துள் வாழ்வாங்கு வாழ, வாழ்க்கைச்செயல் நூல் வகுத்து வழிகாட்டிய வள்ளுவப் பெருமகன், மக்களினத்துக்கண்ட வேறுபாடுகள் பலப்பல. பயிரினம் எனப் பெயரொன்றுயினும் அவ்வின வேறுபாடுகள் எத்துணையவோ அத்துணையினும் மிகுந்த வேறுபாடுகள் உடையது மக்களினம். ஓரறிவுடைய பயிர்களிடத்துக் காணப்படும் வேறுபாட்டினும், ஆறறிவுடைய மக்களிடத்து வேறுபாடுகள் மிக்கிருத்தல் இயல்பே. உலகத்து வாழும் கோடி கோடி மக்களுள்ளும் உடலமைப்பாற்கூட ஒத்தியலும் இருவரைக்காணல் அரிது. புறத்தோற்றத்தே இத்தனை வேறுபாடுகாணும் நாம், அகத்தே முற்றும் ஒத்தியலும் இருவரைக் காண்டல் அரிதரிது என்பது சொல்லாதே போதரும்.

'மக்களுருவம் பெற்றவர்' என்ற அடிப்படையில் ஓரினமாக அனைவரையும் 'மக்களினம்' எனப் பெயரிட்டழைத்தாலும் நடை, உடை, காலவேறுபாடு, இடவேறுபாடு, பழக்கவழக்கம், வாழ்க்கைமுறை, பொருள்நிலை, கல்வி, அறிவு, பண்பு, செயல் என இன்னோரன்ன பல்வேறு வகையால் பிரிவுபட்டுக் கிடக்கும் ஒரு பன்மைக் கூட்டே மக்களினம் என்பது வெள்ளிடைமலை. 'மனிதன் கூடிவாழும் உயிரி' என்றார் கிரேக்க நாட்டுப் பேரறிஞர். அங்ஙன் கூடிவாழும் இயல்புடைய மக்களுள்ளே இருக்கும் அனைத்து வேறுபாடுள்ளும் மணியகத்துக் காணும் நூல் போல் ஊடுருவிக்காணும் பொதுத்தன்மை தான் யாது ? புறத்துக் காணப்படும் யாக்கை வடிவும்,

அகத்து விளங்கித் தோன்றும் ஆருவதான பகுத்தறிவும் கூடிவாழும் தன்மையும் ஆம் என்க. இவ்வனைத்து வேற்றுமையையும், அதன் அடிப்படையாகத் திகழும் ஒற்றுமையையும், தெளிந்து உளங்கொண்டபேராசிரியர் வள்ளுவர், அவரவர் பண்பு நிலைக்கேற்றவாறு கைக் கொள்ளத்தக்க அறக் கூறுகளையும் தனித்தனி வேறு படுத்திக் கூறுவர்.

ஆசிரியர், தொழில்வகையால் உவழர், வணிகர், மருத் துவர், மழிப்பார், கொல்லர், குயவர், தச்சர், அறுதொழி லோர், கூத்தர் எனக் காட்டும் பிரிவு ஒரு புறம்; நாட்டு அரசியல்நிலை வகையால் அரசர், அமைச்சர், தூதுவர், ஒற்றர், வீரர், குடிகள் என விரிக்கும் பிரிவு மறுபுறம்; நிலச் சார்பால் வேட்டுவர், ஆயர் எனக் குறிக்கும் பிரி வினர் இன்னொருபுறம். இவ்வெல்லாம் நிற்க; அவரவர் ஒழுக்க இயல்பால் கொடிறுடைக்கும் கூன்கையரும், இன்னுசெய்தார்க்கும் இனியவே செய்வாரும், நண்பர்க்கு நஞ்சு பெய்வாரும், நஞ்சுண்டமைவாரும், புறம் பேசிப் பொய்த் தொழுகு வாரும், உள்ளத்தாற் பொய்யா தொழுகுவாரும், தன் ஊன் பெருக்கற்குப் பிறிதூன் உண்பாரும், உடம்பும் மிகையென்று பிறப்பறுப்பாரும், வரைவின் மக்கள் நயப்பாரும், கற்பென்னுந் திண்மை யுடையாரும், மடியரும், குடிசெய்வாரும், ஏற்பாரும், ஈவாரும், கள்வரும், ஒப்புரவாளரும், நச்சப்படாதாரும், நச்சினுர்க்கினியரும் என வாங்கு எண்ணற்கடங்காத வாறு சுட்டப்படும் ஏறுமாருகத் தோன்றும் பிரிவினர் பிறிதொருபுறம்.

இவ்வாறு வள்ளுவர் பற்பல முறையாலும் எடுத்துக் காட்டும் பல்வேறு நிலை மக்கள் அனைவரையும் பிரித்து வகுத்துக் காட்டுதல் ஈண்டெம் நோக்கமன்று. எனினும் வாழ்க்கை நெறியால், பொருள் நிலையால், கல்வியால், அறிவால், பண்பால் பெரிதும் வேறுபட்டு இருவேறு

எல்லைக்கண் நிற்பாராகக் காணப்படும் ஐம்பெரும் பிரிவினர்பற்றி ஓராற்ருன் சிறிது ஆராய்வோம்.

## 1. இல்லறத்தார் துறவறத்தார்

வாழ்க்கை நடாத்தும் நெறியால் இல்லறத்தார் துறவறத்தார் என இருவேறு நிலையினர் உளர். இல்லறத்தான் என்பான் எவன்? துறவறத்தான் என்பான் யாவன்? இஃதோர் பழமை சான்ற காலங்கண்ட பெருவினா. குடும்பமாயிருந்து மனைவி, மக்கள், வீடு, வாசல் முதலிய கொண்டு நாட்டுமக்களோடு சேர்ந்து வாழும் வாழ்க்கையே இல்லறம் என்றும், எல்லாவற்றையும் துறந்து, பிரிந்து, தனித்து, ஒதுங்கிவாழும் வாழ்க்கையே துறவறம் என்றும் பொதுவான ஒருகருத்து யாண்டும் நிலவி வருகிறது. இஃதோர் மயக்கநிலை.

திருமணம் செய்து கொண்டு வாழ்வதினும், மணமின்றித் துறவு நிலையெய்தி வாழ்தல் சிறந்ததென்ற திருக்குறள் நெறிக்கு மாறுபட்ட அறப்பிழையான எண்ணம் அறிஞர் எனப்படுவார்க்குங்கூட இருத்தல் வியப்பே. திருமணம் செய்து கொண்டு மகப்பெற்றுப் போதிய இன்பம் துய்த்தபின்றை, வயதான காலத்து மனைவி மக்களை விட்டுவிட்டுத் தனியே வெளியேறித் துறவு நிலையெய்துதல் நன்றென்பது பிறிதோர் பிழைபட்ட கருத்து. சங்ககாலத்துக்குப் பிற்பட்ட இடைக்கால இலக்கியங்கள் யாவும் இதனைக் காட்டுவனவாம். சமண, பௌத்த காப்பியங்கள் அனைத்திலும் இம்முடிவைக் காணலாம். இதிகாசங்களிலும் இக்கருத்தே விரிக்கப்பட்டுள்ளது. எனவே பொதுவாக, 'இல்லறத்திற்கு நேர் எதிர்மாருனது துறவறம்' என்ற பிழைபட்ட கருத்து பல நூற்ருண்டுகளாகப் பரப்பப்பட்டு வந்திருக்கின்றது. இக்கருத்துக்கள் பண்டைத் தமிழர் மரபுக்கும், இயல்புக்கும் பெரிதும் மாருனவை. திருக்குறளுக்கு

முற்றும் முரணுவனவாம். இதனை ஆழ்ந்து ஆய்ந்தறியாச் சிலர் இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா? என்ற அறமில் ஆராய்ச்சியில் ஈடுபட்டுப் பயனில் சொல் பாராட்டுவாராகி ஆசிரியர் வள்ளுவர்க்கு மாசு கற்பிப்பர். விதை பெரிதா? கனி பெரிதா? என்பது இவர் தம் ஆய்வு. விதையினுள்ளே கனியிருப்பதையும், கனியினுள்ளே விதையிருப்பதையும் உணர்வார், ஒன்றின் ஒன்று சிறந்ததன்று என்ற முடிவுக்கு வருவர். மற்றும், ஒன்றின் ஒன்று வேருனதன்று என்பதையும் உணர்வர்.

திருக்குறள் நூலின் முன்னுரை எனத்தகும் பாயிரமாகிய நான்கு அதிகாரங்களை முடித்துத் தம் அரிய நூலைத் தொடங்குகின்ற ஆசிரியர், இல்வாழ்க்கை எனத் தொடங்கி வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு, அன்புடைமை, விருந்தோம்பல் என்றினையன கூறிச்செல்லும் உண்மையினை ஓர்வார் இல்லறமே ஒருவர் வாழ்க்கையின் தொடக்க நிலை என்பதை உணர்வர். எனவே மக்களாய்ப் பிறந்தார் திருமணம் செய்துகொண்டு, மகப் பெற்று, அன்புபெருக்கி, விருந்தோம்பி, இனியன கூறி வாழ்தல் ஒருவந்தம் வேண்டற்பாலது என்பது வள்ளுவர் கருத்தாதல் பெறுதும். மணவாது தனித்து நின்று துறவு மேற்கொள்ளல் என்ற கருத்து திருக்குறளகத்து யாண்டும் இல்லை. இதற்குமாருகத் தனித்து வாழ்தல் பயனற்றது, விரும்பத்தகாதது, இரங்கத்தக்கது என்பதைக் காணலாம்,

> அற்ருர்க்கொன்று ஆற்ருதான் செல்வம் மிகநலம்
> பெற்ருள் தமியள்மூத் தற்று

என, நன்றியில் செல்வத்தின் இழிவினை விளக்கவந்த ஆசிரியர், எல்லா நலங்களும் பெற்ற ஒருத்தி மணம் செய்யாது வயதாகிப் போனதைக்காட்டி இரங்கச்செய்வர். கொடுப்பாருக்கும் இன்பமில்லை, கொழுநனுக்கும் இல்லை, அவளுக்கும் இன்பமில்லை என அதற்கு விளக்கம் தந்தார்

பரிமேலழகர். எனவே இளமைத் துறவு, மணமாகாத் துறவு, வள்ளுவர்க்கு உடன்பாடன்று. காமஞ் சான்ற உயிர்ப்பிறப்பிற்கு மணம் இன்றியமையாத தென்க, இன்பம் என்பது ஒருவனுக்கு அவனவன் மனத்தளவாய் நிறைந்து குறைந்து தோன்றுமெனினும், அவ்வின்பத்தைப் பெறும் வாயில்கள் அனைவர்க்கும் ஐந்தேயாம். அவை, மெய், வாய், கண், மூக்கு, செவி யென்ப. இவ்வைம்பொறி வாயிலாய் நுகரப்படும் இன்பவகைகள் கணக்கிறந்தன. ஆயின் ஒவ்வொரு பொறியும் ஓரோர் காலத்து இன்பம் நுகர்தல் இயல்பு. இரண்டு, மூன்று பொறிகள் ஒன்றி யின்பமடைதலும் ஒரோவழி உண்டு. ஐம்பொறிகளும் தம்முள் ஒன்றி ஒரே காலத்து இன்பம் பெறுதல் மிக அரிது. அஃது ஒரு நிலையில் தானுண்டு.

கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள

இங்ஙனம் மக்களுயிர் பெறும் இன்பத்தின் எல்லையை ஒருவன் அடைய, இல்வாழ்க்கை இன்றியமையாததென்பது அங்கைக்கனியாம். இவ்வாறு விதந்து கூறிய ஆசிரியர் மணவாத்துறவை, அறம் அன்றெனத் தள்ளுவது இயல்பே.

'பொறிவாயில் ஐந்தவித்தான்' 'ஒருமையுள் ஆமை போல் ஐந்தடக்கல்' என்பனபோன்ற இடங்களில் வரும் ஐந்தவித்தல், ஐந்தடக்கல் இனையனவற்றிற்கு இடக்க ரடக்கல் பொருள் கொண்டு மயங்கினர் பலர். நேர் பொருள் வேண்டுவார்,

ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி

என்ற குறட்பொருளைக் காண்க. ஈண்டுக் குறிக்கப்பட்ட கதையுள் ஐந்தவித்தான் கோதமன், ஐந்தவிக்காது இடர்ப்பட்டவன் இந்திரன். இருவரினும் கோதமன்

ஆற்றலுடையவன் என்பது குறட்கருத்து. அக்கோதமன் தானும் மணவாத் துறவியா என்பதை ஓர்மின்! மணந்து வாழ்க்கைத் துணைவியோடு இருந்தவனை ஆசிரியர் ஐந்தவித்தான் எனக் காட்டுவரேல், ஐந்தவித்து நிற்ற லுக்குத் திருமணம் இடையூறன்று, அதுவே நேர்வழி யென்பதன்றோ பொருள்.

மனங்கரைத்து மலங்கெடுக்கும் மணிவாசகம் அருளிய பெருமகன், வினவிடையாக இறைவனின் பெருமையை விளக்கவந்த விடத்து,

தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடி?
மலையரையன் பொற்பாவை வாள்நுதலாள் பெண்திருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடி?

என்ற இருபெரும் வினவை எழுப்பி நம்மைச் சிந்திக்க வைப்பர். பின்னர் அவற்றின் விடையாக

பெண்பால் உகந்திலனேல் பேதாய்! இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ.
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெலாம் கலங்கிடும்காண் சாழலோ

என அறிவுறுப்பர். பெண்பால் உகந்தானைப் 'பித்தன்' என்று கூறிய பெண்ணை, எதிர்த்து மறுமொழியும் பெண் 'பேதாய்' என விளித்தமை சால அழகிது. எனவே ஆணும் பெண்ணும் கூடிவாழ்தலே இயற்கை நெறி; எல்லார்க்கும் ஒத்த நெறி. இக்கூட்டு வாழ்க்கையைச் செம்மையாய் நடத்தலே அறம். 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை' என்ற குறள் நடையின் அழுத்தம் காண்க. இல்வாழ்க்கையை அறத்தாற்றின் ஆற்றும் ஒருவன் புறத்தாறு எனப்படும் ஒருவழியை வலிந்து பிடித்துக்கோடல் வேண்டுவதின்று. அத்துறவுநெறி தானாகவே இயல்பின் அன்னானை வந்தடைதல் வேண்

டும். பலகோடி இன்பங்களை உலகிடை நிரப்பி வைத்து அவற்றைத் துய்க்க ஐம்பொறிகளையும் அறிவையும் இறைவன் மக்களுக்குப் படைத்திருக்கும் நுட்பம் ஓராதார், ஐம்புலன்களையும் இயற்கைக்கு மாறான நெறியில் அடக்க முயன்று அவதிப்படுவர். இவ்விரு நிலையினரையும் நோக்கிய ஆசிரியர் "இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவனென்பான் முயல்வாருளெல்லாம் தலை" என ஒப்புக்காட்டி உயர்வு சாற்றினார். இல்லறத்தை இயற்கை நெறி நின்று இனிது நடாத்துதல் "நோற்பாரின் நோன்மை யுடைத்து" என்பது அவர்தம் முடிவு. இஃதொரு பாலிருக்க.

மனைவியை இடை விட்டுப் போகும் துறவுநிலை முன்னர்க்கண்ட மணவாத்துறவினும் அறக்கொடிதாம். எள்ளி நகையாடி இழித்தொதுக்கத் தகுவது. தமிழர்தம் பெண்மைக்கு இழுக்குத் தருவது. பெண்ணினத்தின் தன் மானத்துக்கு ஊறு செய்வது. தாய்மையின் உயர்வை வெட்டிச் சாய்ப்பது. இறைமையின் இருப்பையே எள்ளுவது.

வள்ளுவரின் 'வாழ்க்கைத்துணை' என்ற பெயர் அமைப்பொன்றே ஆணும் பெண்ணும் இல்வாழ்க்கையில் கூடிய பிறகு இறக்கும்துணையும் பிரிதல் இல்லை என்ற கோட்பாட்டைக் காட்டக் கூடியது.

'உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு'
'கருமணியிற் பாவாய்நீ'

என 'உடம்பும் உயிருமாய்', 'கருமணியும் பாவையுமாய்' என வரூஉம் உவமைகள் காட்டும் உண்மை யாது? உயிர் பிரிந்தால் பிணமன்றோ மிஞ்சும்; பாவை யின்றேல் குருடன்றோ ஆகும். இங்ஙன மெல்லாம் பல்லாற்றானும் பிரியாமை பேசிய ஆசிரியர் இடைநடுவே வாழ்க்கைத்

துணையைப் பிரிந்து போதல் அறமென்று கூறுவரோ! ஆராய்மின்!

> பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
> மக்கட் பேறல்ல பிற

என்று 'யாம்' எனத் தம் நெஞ்சைத் தொட்டுச் செம் மாந்து குழவிச் செல்வத்தின் சிறப்பைக் கூறிய ஆசிரியர், 'தம் பொருளென்ப தம்மக்கள்' என்றும் 'எழுமை எழு பிறப்பும் தீயவை தீண்டா' என்றும் விதந்து கூறிய ஆசிரியர், அவர் தம்மை விட்டு இடையிற் பிரிந்து போகச் சொல்லுவரோ? அங்ஙனம் கொள்ளுதல் அறிவுடைமையாமோ? செய்ந்நன்றி யறிதலைப் பன் மாணும் பல்வேறிடங்களில் வலியுறுத்தும் ஆசிரியர், வாழ்க்கைத்துணையையும், சிற்றிளஞ் செல்வங்களையும் விட்டு விட்டுச் செய்ந்நன்றி கொன்று தனித்துத் தாம் மட்டும் அவ் வுலகவீட்டுக்குச் செல்லல் அறம் என்பரோ? ஆழ்ந்து சிந்திப்பின் அவர்க்கது கருத்தன்று என்பது தெளிவாகும்.

பாயிரத்தினுள்ளே 'நீத்தார் பெருமை' எனவோர் அதிகாரம் வைத்தருளிய ஆசிரியர், அறத்துப்பாலில் 'துறவு' எனத் தனியதிகாரம் வகுத்துப் பேசிய ஆசிரியர் யாண்டேனும் 'மனைவி மக்களைப் பிரிதல்' என்ற கருத் துக்குத் தவச் சிறிதும் இடம் வைத்தா ரல்லர்.

> யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
> அதனின் அதனின் இலன்.

இக்குறளில் 'யாதனின் யாதனின்' என்ற அஃறிணைச் சுட்டு உயர்திணையை ஒழித்துப் பொருள், உடைமைகள் மேல் நிற்றல் காண்க. உயர்திணைச் சுட்டாய்க் கூறுதல் ஆசிரியர் அறியாததோ? அங்ஙனம் உயர்திணையாய்க் கூறின் அச்சுட்டே அஃறிணையையும் சேர்த்துப் பொருள் தரும். அஃறிணைச் சுட்டோ உயர்திணையையும் சேர்த்

துச் சுட்டும் வன்மையற்றது. 'வலியார் முன் தன்னை நினைக்க தான் தன்னின் மெலியார்மேல் செல்லுமிடத்து' என்ற குறளகத்து 'மெலியார்' எனச் சிறப்புடைய உயர் திணையின்மேற் கூறினு ராயினும் ஏனை யஃறிணையும் கொள்ளப்படும் என்று எழுதியுள்ள பரிமேலழகரின் விரிவுரை ஈண்டு நினைவு கொள்ளற்பாற்று.

> **இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை, உடைமை**
> **மயலாகும் மற்றும் பெயர்த்து**

என்ற துறவுக் குறளகத்தும் 'ஒன்றின்மை' என்ற அஃறிணைச் சுட்டைக் காண்க. அஃறிணை உயிர்ப் பொருள்,உயிரல்பொருள்களின் உடைமையே உடைமை எனப்படும். அவை இன்று ஒருவன் உடைமையா யிருக்கும். நாளை வேறொருவன் உடைமையாயிருக்கும். நாளைமறுநாள் பிறனொருவன் உடைமையாய் மாறும். மனைவி, மக்களும் அவைபோல மாறும் தகையரோ? பொருள் தொடர்பு, உடைமையளவோடு நின்றுவிடும். மனைவி மக்கள் தொடர்போ உறவுத் தொடர்பாம்-குருதித் தொடர்பாம் - உயிர்த்தொடர்பாம். இவ்வேறுபாட்டின் நுண்மையுணர்வார்க்கு, வள்ளுவர்க்கு மனைதுறந்து செல்லும் துறவறம் உடன்பாடன்று என்பதுதெளிவாம். எனவே மணவாத் துறவும், மனைமக்கள் இடைத்துறவும் வள்ளுவர்க்குக் கருத்தல்ல என்று துணிக.

மற்று, வள்ளுவர்காட்டும் இல்லறம்துறவறம் இரண்டிற்குமுள்ள தொடர்பும் வேறுபாடும் என்னை? இல்லறம் அரும்புபோல்வது, துறவறம் மலர்போல்வது. அரும்பு தன்னளவில் தன்னை வந்தடைந்தார்க்கு, மகிழ்ச்சிதந்து மணத்தைத் தன்னகத்தே கொண்டிருப்பது. மலர், விரிந்து நின்று யாவர்க்கும் மகிழ்ச்சி தந்து மணத்தைப் பரப்பிக் கொண்டிருப்பது. இல்லறத்தில் அரும்பிய அன்புடைமை துறவறத்தில் அருளுடைமையாக மலர்ந்து

நிற்கும். "அன்புடைமையாவது வாழ்க்கைத் துணையும் மக்களும் முதலிய தொடர்புடையார்கட் காதல் உடைய னுதல். அருளுடைமையாவது தொடர்பு பற்றுது இயல் பாக எல்லாவுயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை." அருளென்னும் அன்பீன் குழவி என்ற அருமைத் தொடரைஉன்னுக. அன்பின்றிஅருளில்லை. அன்பு தாய், அருள் அதன் சேய். அன்புத் தாயின்றி அருட்குழந்தை பிறத்தல் இயற்கை முரண். குழவி, தாயின்றி வளருங் கொல்? தாயை விட்டுக் குழந்தை பிரிந்து செல்லலும் இயற்கையன்று. அன்பை விட்டு அருள் பிரிதலும் ஒல்லுமோ? குழந்தை பெரிதான பிறகு தாயை ஓம்புதல் அதன் முதற்கடன் அன்றே! தாயை விட்டுப் பிரிந்து தனித்து வேறுதல் என்பதும் அறமெனப்படுமோ! ஆய் மின்! அன்பின்றி அருளில்லை; இல்லறமின்றித் துறவற மில்லை; ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து நிற்றலுமில்லை.

இல்லறத்தில் தன்னுடைமையாய்க் கண்ட பொருள் களின் பற்று நீங்கி நிற்பது துறவறம். தான் என்ற செருக்கு நீங்கி, நாம் என்ற பொதுமை வழி நிற்பது துறவறம். 'யான் எனது என்னும் செருக்கறுப்பான்' என்பதே வள்ளுவர்கண்ட துறவறத்தான் இயற்கை. மணந்து,மக்கள்பெற்றுஇல்லறத்தில் மனைவி மக்களோடு இருந்தே, தற்பற்றும், தன்பொருட் பற்றும் நீக்கி அற வாழ்வு நடாத்துதலே துறவறமாம். மனத்துறவே துற வாம். எனவே இல்லறமே முற்றிய நிலையில் துறவறமாம் என்க. முன்னையது தற்பற்றுடையது. பின்னையது தற் பற்றற்றது. இதுவே அதன் தொடர்பும் வேறுபாடும் எனக் குறிக்கொண்மின். இந்நிலைக்கு எடுத்துக் காட்டா கக் காந்தியடிகள், திரு. வி. கலியாணசுந்தரனுர் போன் ருரின் வாழ்க்கை வரலாறு கண்டு தெளிக.

மிக எளிதாகக் கூறிவிட்ட இவ் விருவகை நிலை அறங் களும் இயல்பின் வழாது செயற்படுத்தற்கு அருமை

யுடையன. சொல்லுதல் யார்க்கும் எளிய, அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்; ஆயின் அருமை யுடைத் தென்று அசாவாமை வேண்டும் என்று ஆக்கம் காட்டி அதற்குரிய வழிவகைகளை வகுத்துக் கூறுவதுதான் திருக்குறள் அறத்துப்பால் என்க. ஆசிரியரின் குறட் சொல் கொண்டே அவ்விருவகை நெறியையும் தொகுத் துக் காண்போம்.

இல்லறத்தான் அன்பை அடிப்படையாய்க்கொண்டு குடிசெய்து வாழ்தல் வேண்டும். யாவரிடத்தும் பணி வுடையனாய் இன்சொற் கூறி செல்விருந்தோம்பி வரு விருந்து எதிர்பார்த்து, பழியஞ்சிப் பகுத்துண்டு, வறி யார்க்கு ஈந்து, சுற்றம் தழுவி, ஒப்புரவு செய்து ஒல்லும் வகையால் அறவினையை ஓவாதே செய்தல் வேண்டும். மாசற்றார் கேண்மை மறவாது, புறஞ்சொல்லும் புன்மை யின் நீங்கி, நாகாத்து, பிறனியலாள் பெண்மை நய வாது, தம்மை இகழ்வார்ப் பொறுத்து, வசையொழிய வாழ்ந்து புகழ்பெருக்கவேண்டும். சுருங்கக் கூறின் அன் பின் இருக்கையாய், அறத்தின் விளை நிலமாய் வாழ்ந்தால் இல்வாழ்க்கை பயனுள்ளதாகும். அவன் வானுறையும் தெய்வமாக இவ்வையத்துப் புகழப்படுவான்.

துறவறத்தான் அருளை அடிப்படையாகக் கொண்டு உள்ளத்தாற் பொய்யாதொழுக வேண்டும். பிறிதின் நோய் தன்நோய்போற் போற்றி, யார்மாட்டும் வெகு ளியை மறந்து, மனத்தொடு வாய்மை மொழிந்து, மெய் யுணர்ந்து தவநிலையில் நிற்றல் வேண்டும். பற்றற்றான் பற்றினைப்பற்றி,பிறப்பென்னும்பேதைமைதரூஉம் அவா வறுத்து, உடம்பும் மிகையென்பதோர்ந்து, ஐந்தவித்துச் செயற்கரிய செய்து, எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு வாழ்தல் வேண்டும். நிலையாமை உணர்ந்து, யாதனின் யாதனின் நீங்கி, யான் எனதுஎன்னும் செருக்கு அறுத் துச் சிறப்பென்னும் செம்பொருள் காணும் அறிவுடைய

ளுய் வாழ்ந்தால் பிறவிப் பெருங்கடல் நீந்தி இறைவனடி சேரலாம்.

திருக்குறள் நூலின் முன்னுரையாக விளங்கும் பாயிரமும், அறத்துப்பால், பொருட்பால் இரண்டையும் இணைக்கும் பற்றுசாக இலங்கும் நடுவணதாய 'ஊழும்' நீங்க, அறத்துப்பால் 'இல்வாழ்க்கை'யில் தொடங்கி, 'அவா வறுத்த'லில் முடிகின்ற நுட்பம் ஓர்க.

## 2. செல்வர் வறியர்

பொருள்வகையால் மக்களுள் காணப்படும் எண்ணிறந்த வேறுபாட்டுள்ளும் பெரும் பிரிவாய்த் திகழ்வது செல்வர், வறியர் என்னும் இரு வேறு எதிர்நிலையாகும். இவ்விருசொற்களையும் எதிர்எதிர் நிறுத்திக் கையாளாது வள்ளுவர் உடையார், இல்லார் (Haves and Have nots) எனப் பொதுப்படப் பேசுவர். உடைமையும், இன்மையும் உலகப் பொருள்கள் அனைத்தையும் சுட்டி உள்ளடக்கி நிற்கும் தன்மையது. வள்ளுவர் பல்வேறு உடையார்களை யும், இல்லார்களையும் காட்டுவர். அன்புடையார், அறிவுடையார் ஒழுக்கமுடையார், தவமுடையார், கேள்வியுடையார், மானமுடையார், மடியுடையார், அச்சமுடையார், அழுக்காறுடையார் என்பனபோல அவாவில்லார், துப்புரவில்லார், நாணகத்தில்லார் என்றினைய சொல்லாட்சிகள் காண்க.

எனினுய், விதந்துகூருது உடையார் இல்லார்எனப் பொதுச் சுட்டாய் நிற்குமிடமெல்லாம், செல்வமுடையாரையும், செல்வமில்லாரையுமே அவை சுட்டும். வழக்கு நெறியுமஃதே. 'உடையார்முன் இல்லார்போல்' 'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்' எனவரூஉம் குறட்பொருள் அறிக. செல்வம், பொருள், திரு, வெறுக்கை என்பன ஒருபொருட் கிளவிகள். அவையும் பொதுச் சுட்டாம்.

அருட்செல்வம், செவிச்செல்வம், மெய்ப்பொருள், செம் பொருள் என்றித்திறத்தன பலவாம்.எனினும் முற்குறித் தாங்கு சிறப்பின் விதந்து கூறப்படாது தனித்துச் 'செல் வம்', 'பொருள்' எனப்படின் அவை 'பணம்' என்றே பொருள் தரும். பணமுடையாரைச் செல்வர் எனக்குறிக் கும் ஆசிரியர் பணம் இல்லாரை 'அற்றார்' எனச் சுட்டுவ தோடு 'வறியார்' எனவும் ஓரிடத்து ஆள்வர். இன்று வழக்கில் இருக்கும் 'ஏழை' என்ற சொல் அறிவற்றவன் என்ற பொருளிலே திருக்குறளகத்து ஒரே இடத்துக் காணப்படும்.

வள்ளுவர், இவ்வுலக நிலையினைத் தெள்ளத் தெளிய அறிந்து, மக்களை நற்செயல் படுத்தும் வாழ்வு நூல் யாத்தவர். எனவே இவ்வுலகில் பொருளின் இன்றியமை யாமையை மிக அழுத்தமாக உணர்ந்து 'பொருள் செயல்வகை' என்றே ஓர் அதிகாரம் வகுத்தோதினர். பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை என்பது அவரது தெளிந்த முடிவு. அதன்மேலும்,

> அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
> செல்வச் செவிலியால் உண்டு

என அவ்வுலகிற்கும் பொருட்செல்வம் அடிப்படை யானது என வன்புறை செய்வர். நாட்டைக் குறிக்க வந்தவிடத்து 'தாழ்விலாச் செல்வரும்' என முதற் குறளிலேயே செல்வத்தின் இன்றியமையாமையையும் சிறப்பையும் புலப்படுத்துவர். 'செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு', 'இருளறுக்கும் எண்ணிய தேயத்துச் சென்று', 'அறனீனும் இன்பமுமீனும்' எனப் பல்லாற் றானும் அதன் ஆற்றலை அளவறிந்து கண்ட ஆசிரியர் 'செய்க பொருளை' என வினைச்சொற்கொண்டு குறளைத் தொடங்கி ஆணையிட்டு நம்மைச் செயற்படுத்துவர். பொருள்செயல் பற்றி இவ்வளவு அழுந்தக் கூறிய

ஆசிரியர், அதனை ஈட்டும் முறைபற்றிப் பல்லிடத்தும் வரம்புசெய்து வழிகாட்டுவர்.

பொருளின் இன்றியமையாமையை அநுபவத்தால் நன்கறிந்த மக்கள், ஈட்டுவதொன்றையே தம் கருத்திற் கொண்டு, தம் நிலையினின்று இழிந்து செயற்படுவார் பலராகக் கண்ட அறநெஞ்சங் கொண்ட ஆசான் அவரவர் நெறி நின்று பல படியாக அவரை நெறி நிறுத்த முயல்வர்.

பிறர் துயரம் நோக்காது, வன்கண்மை செய்து, கொடிறுடைக்கும் கூன்கையராகி, வேல்காட்டி ஆறலைத்து, உடற்பலமும் அதிகாரத்திமிரும் கொண்டு, பிறர் பொருள் வவ்வும் காட்டில் வாழ் விலங்கனையாரை நோக்கி 'அழக் கொண்டவெல்லாம் அழப் போம்' என இடித்துக் கூறுவர். தம் அறிவு வன்மையால் வஞ்சக வழிகள் பலவும் கண்டு, புதருக்குள் மறைந்து வேடன் பறவைகளைப் பிணிக்குமாறு போலவும், புலியின் தோல் போர்த்து மாடானது பிறர் பயிரை மேய்ந்தாலனையவும், தூண்டிலிட்டு மீன் பிடிப்பார் நிகர்த்தும், வஞ்சனை பலவும் செய்து சூதறியாமக்களை ஏமாற்றிப் பொருள் சேர்க்கும் சிறுமதியாளரே இவ்வுலகில் பெருந்தொகையினராவர். இவரைக் கண்ட ஆசிரியர், அவர்கள் அறிவுத் துறை நின்றே அவர்க்கு வழிகாட்டுவாராகி பச்சை மண்ணால் செய்த பானையிலே சேமிக்கப்பட்ட நீர் எங்ஙனம் தான் நில்லாது ஓடுவதோடு பானையையும் கரைத்துக் கொண்டு போகுமோ அது போல நீங்கள் வஞ்சகத்தாற் கொண்ட பொருள்கள், தாம் நில்லாத தோடின்றி முன் கையிருப்பையும் சேர்த்து இழுத்துக் கொண்டுபோம் என அவரைச் சிந்திக்க வைத்துச் சீர் செய்வர்.

அன்பும் அறனும் மறந்து தம்நுகர்ச்சியின்பத்தையும் கூடத்துறந்து பொருள் சேர்க்கும் பித்துடையாரை

யும், ஈன்ருள் பசிகண்டு மனம் பொருராய் அறிவு கலங்கிப் பழி வழி நின்று பொருள் தேடும் சால்பிலாரையும், முயற்சியை மறந்து இரந்து பொருள் பெறும் மடியுடைக் கீழோரையும் அவரவர் நிலைக்கேற்ற வண்ணம் அறிவு கொளுத்தி ஆள்வர். எங்ஙனமாயினும் பிறர் பொருளைக் கைக்கொண்டு தம் செல்வத்தை வளர்க்க விரும்பும் பல நிலையினர்க்கும், பிறன் பொருள் வெஃகும் செயலே தம் செல்வத்தைக் குறைக்கும் படை எனக்கூறி நன்னெறி உணர்த்துவர். செல்வம் எத்துணை இன்றியமையாததோ அத்துணை இன்றியமையாதது அதனை ஈட்டும் அறநெறியும் என்பது ஆசான் கருத்து. திறனறிந்து தீதின்றி வந்த பொருளே ஒருவற்கு அறத்தையும் இன்பத்தையும் நல்கும்.

> **அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்**
> **புல்லார் புரள விடல்**

என்பது அவர் ஆணை.

'செய்க பொருளை' என்று ஊக்கி, அது தானும் 'தீதின்றிச் செய்க' என நெறிப்படுத்திய ஆசிரியர் செல்வத்தின் நிலையாமையைப் பிருண்டும் நினைவு கொளுத்துவர். 'அற்கா இயல்பிற்றுச் செல்வம்' நில்லாத இயல்பினையுடையது செல்வம் என அதன் இயல்பைத் தெளிவுறுத்தினர். 'பொருளுடைமை நில்லாது நீங்கிவிடும்' என்பது அவர் துணிபு. 'கேடில் விழுச் செல்வம் கல்வி மாடல்ல மற்றையவை' 'உள்ள முடைமை உடைமை' 'அறிவிலார் என்னுடைய ரேனுமிலர்' எனக் கல்வி, ஊக்கம், அறிவு முதலிய பிறபொருள் ஒப்புக் காட்டி இச் செல்வச் சிறுமையை உணர்த்துவர். நிலையில்லாத செல்வத்தை நிலையானது என்று எண்ணுவாரைப் புல்லறிவாளர் என இழிப்பர்.

கூத்துக்காணச் செல்வார் ஒருவர் ஒருவராகச் சென்று கூத்துத்தொடங்குவதற்கு முன்னர் கொட்டகை

நிரம்பக் கூடுவர். கூத்து முடிந்ததும் சில விஞடிகளில் அனைவரும் வெளியேறிப் போவர். அது போலப் பணம் சேரும் பொழுது பற்பல காலங்களில் பலப்பல வழியாய்ச் சிறிது சிறிதாகப் பலதுளி பெரு வெள்ளமாய் ஒன்ருகிப் பெருஞ் செல்வம் ஒருவனிடத்துச் சேரும். போகூழ் வந்த விடத்து சில நாட்களில் தொகை தொகையாய் வேக வேகமாய் அச் செல்வம் ஓடி மறையும்.

**கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்**
**போக்கும் அதுவிளிந் தற்று.**

எனவே பொருளின் நிலேயாமை ஓர்ந்து அதற்குத்தக செயலாற்றவேண்டும் என்பது ஆசிரியர் குறிப்பு. 'செல்வம் பெற்ருல் அற்குப ஆங்கே செயல்' என்பது அவர் செயல் வழி.

பொருள் தீ போன்றதோர் ஆற்றல். நெருப் புடையார் அதனைச் சோறட்டவும் பயன் படுத்தலாம். கூரை கொளுத்தவும் பயன்படுத்தலாம். அவரவர் மனத் திற்குத் தகுந்தவாறு, செயற் படுத்துவதற்குத் தகுந்த வாறு செல்வம் பயன்தரும். அறிவுடையார் எல்லாம் செல்வராதல் இல்லே; செல்வ முடையாரெல்லாம் அறி வுடையராதலுமில்லே. திருவேறு, தெள்ளியராதல் வேறு; இஃது உலகியற்கை. கல்லாதானிடத்தும், பேதையி னிடத்தும், பண்பிலானிடத்தும், நச்சப்படாதானிடத் தும் செல்வமிருத்தலே யுணர்ந்த ஆசிரியர் "பொருட் செல்வம் பூரியார் கண்ணுமுள" என்ருர்.

"பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொரு ளல்லதில்லே பொருள்" எனச் சிறப்பித் தோதிய ஆசிரியர் இங்ஙன் இழித்துரைக்கக் காரணம் யாது? பொருள் வாழ்க்கைக்கு ஓர் அருங்கருவி என உணராது பொருளே வாழ்க்கை என மக்கள் மயங்கிச் செயற்பட்டு இழிநிலே யடைவதைக் கண்ணுற்ற ஆசிரியரின் கொதி

நெஞ்சச் சொற்கள் அவை. கல்லாதானிடத்துள்ள செல்வம் நல்லார் கைப்பட்ட வறுமையினும் துன்பம் தரவல்லது என்று அதன் தீயவியல்பை உணர்த்துவர். எனவே ஈட்டும் முறைபோலவே பயன்படுத்தும் நெறியும் ஆய்ந்து அறியற்பாலது. 'இருந்தோம்பி இல் வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு' என இயல்புவிதி மொழிந்த அந்நடையிற்ருனே,

> தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
> வேளாண்மை செய்தற் பொருட்டு

என அடிப்படை காட்டுவர். உறவினரெல்லாம் வயிற்றுப் பசியால் வாட அயலாரெல்லாம் அனுபவிக்கப் பயன்படும் செல்வ முடையான் பேதை. எல்லாருக்கும் நன்மை பயக்கும் பால், ஊற்றப்படும் பாத்திரத்தால் தன் நீர்மை கெட்டுப் போதல் போல, பண்பில்லானிடத்துள்ள செல்வம் ஒருவர்க்கும் நன்மை தராது கெட்டுப் போகும். இவறன்மை யுடையானிடத்து அகப்பட்டுக் கொண்டசெல்வம் அவனுக்கு நன்மை தராதது மட்டுமின்றி உலகில் ஒருவர்க்கும் நன்மை தராது வாளா கழியும். அவனைச் 'செத்தான்' என்றே ஆசிரியர் பழிப்பர்.

> செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
> உயற்பால தன்றிக் கெடும்

> வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்
> செத்தான் செயக்கிடந்தது இல்

என்பது அவர் தீர்ப்பு.

மிக அழகு பெற்ற இளநலம் பொருந்திய பெண்ணொருத்தி, இல்வாழ்க்கை நெறிநின்று ஒருவனை மணந்து தானும் இன்பம் பெற்று, பிறனுக்கும் இன்பம் தந்து அவ் இல்லற நெறித் தூய்மையால் உலகினர்க்கும் நன்மை பயந்து வாழ்வதை விடுத்து, தான் இயற்கை

யாய்ப் பெற்ற அவ் இளநலத்தால் ஒருவற்கும் நன்மை தாராது கொன்னே கழித்து வாளாவிருந்து மூத்துப் போதல் இயற்கை முரண். செல்வ நலம் பெற்ற ஒருவன் துய்த்துத் தனக்கின்பம் பெறுதலும், வழங்கிப் பிறர்க்கு இன்பம் நல்குதலும், அவ்வாற்ருன் உலகிடை இன்பம் பெருக்குதலும், இயற்கைநெறி. அதை விடுத்துத் துய்க் காது வழங்காது அதனுல் உலகும் தானும் அடையும் அறத்தையும் இன்பத்தையும் பெருது செல்வத்தைப் பூட்டி வைத்தல் அச்செல்வத்திற்குமே நன்றி செய்யாத தன்மையாகும் அவனைவிட ஏழை உலகிடை வேருெரு வன் இல்லை.

அற்ருர்க்குஒன் று ஆற்ருதான் செல்வம் மிகநலம்
பெற்ருள் தமியள்மூத் தற்று

என அன்னுரைக்கண்டு ஆசிரியர் இரங்குவர்.

இவ்வுலகில் இலர் பலராயும், உளர் சிலராயும் இருத் தலை நன்குணர்ந்தவர் ஆசிரியர். உளரெனப்படுவா ருள்ளும் இருக்கும் நிலைவேறுபாடுகளும் சொல்லும் தரமன்று. பெரும்பான்மை கருதி பெருஞ் செல்வர் ஒருசிலராயும், செல்வர்சிலராயும், இலர், உளர் எனச் சுட்ட இயலாதார் பலராயும், இலர் மிகப் பலராயுமிருக்கும் சமுதாயத்தை நோக்கி அறங்கரைகின்ருர் ஆசிரியர் எனக் கொள்ளலாம். வாழ்வின் அடிப்படைத் தேவை யான-இன்றியமையாத் தேவையான 'வயிற்றுப் பசி தீர்த்தல்' செல்வத்தின் முதற்பயன் என்பதைப் பலவகை யாகவும் அழுந்த மொழிவர். அற்ருர் அழிபசி தீர்த்தல் யாரும் எக்காலத்தும் கடைப்பிடிக்க வேண்டிய அறம். தலையாய அறம். உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோராவர். செல்வத்தின் மிகச் சிறந்த பயன் வயிற்றுக் கில்லா வறியர்க்கு ஈதலே. பசியைப் பொறுத்துத் தவம் செய்வார் ஆற்றல் மிகப் பெரிது; ஆனுல் அதனினும்

சிறந்த ஆற்றல், பொறுத்தற் கரிய அப்பசியை ஈகை யால் மாற்றி விடுதல் என்பது ஆசிரியர் துணிபு.

**ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின் பின்.**

எல்லாரும் நாடோறும் கடைப் பிடிக்க வேண்டிய இவ்வறத்தைச் செய்யும் ஒருவனைப் பசிப்பிணி தீண்ட லரிது. ஈத்துவக்கும் இன்பமும் அவற்கு இடையருது பெருகும். இஃது எல்லாரும் செய்யக் கூடியது. எஞ்ஞான்றும் செய்ய முடிவது. தனித்தனிச் செய்ய வேண்டுவது.

அடுத்த நிலையில் ஓரளவு செல்வராயிருப்பார், பிறர் வயிற்றுப்பசி போக்கும் நாள்தோறும் செய்ய வேண்டுவ தாய அறச் செயலோடு, தம் உறவினரைத் தாங்கி வாழ்தல் வேண்டும் என வழிவகுப்பர். காக்கை உணவு உண்ணும் முறையை உவமை காட்டி அங்ஙனம் வாழ வேண்டும் என ஆற்றுப்படுத்துவர்.

**சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்**
**பெற்றத்தால் பெற்ற பயன்**

என நேர்வழி காட்டுவர். தமர்பசிப்பஏதிலார்க்கு அளிக் கும்நிலை பேதைமைத்து எனக் கொதித்து மொழிவர். வறியாரின் பசிதீர்த்து, தன் சுற்றத்தாரையும் உண் பித்து, உயர்திணை மட்டுமன்றி ஏனை அஃறிணையுயிர் களும் வாழ வழிசெய்வான் சிறந்த அறவானுவான். 'நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலையாயது பகுத் துண்டு பல்லுயிர் ஓம்புதல்' என உறுதி மொழிவர்.

இனி, பெருஞ் செல்வமுடையார் செய்ய வேண்டுவ தாக ஆசிரியர் கூறுவது 'ஒப்புரவறிந்து நடத்தல்' என்ப தாகும். முற்கூறிய அறங்களெல்லாம் தனித்தனி ஆள் நோக்கிச் செய்யவேண்டுவன. இவ் ஒப்புரவறிந்து நடத்தலோ பொதுவாகச் செய்யப்படவேண்டுவன. இவ்

வறத்தின் பயன் பல்லோர்க்கும் ஒருசேரக் கிடைப்பது. ஒப்புரவொழுகுவாரை ஆசிரியர் மழைக்கும், ஊருணிக்கும், பழமரத்துக்கும், மருந்து மரத்துக்கும் ஒப்புச் சொல்வர். அவ்வுவமைகளே பெருஞ் செல்வரின் ஒப்புரவொழுகும் பொது அறத்தைச் சுட்டி அதனுல் பயன்பெறுவார் பலராதலையும் தெற்றெனக்காட்டும். உலகத்தை நோக்கி மக்கள் சமுதாயம் என ஓரினமாக்கி அறச்செயல் ஆற்றும் அவ்வுயர்ந்தோரை ஆசிரியர் பேரறிவாளர் என்றும், நயனுடையாரென்றும், பெருந்தகையாரென்றும் சுட்டுவர். உலகினர் இவருக்குச் செய்யும் கைம்மாறு ஒன்றும் இல்லை. இதுவே பெருஞ் செல்வமுடையார் செய்ய வேண்டிய சிறந்த அறமாகும். பொருளுடைமையால் பெறும் பெரும்பயன் உலகினர்க்கு நன்மை செய்து அவரால் பாராட்டப்படும் இதனினும் வேறில்லையென்க.

எனவே செல்வராஞர் தத்தம் நிலைக்குத் தக்கபடி ஈகை, சுற்றந்தழால், ஒப்புரவு என்றினைய நெறிகளில் பொருளைப் பயன்படுத்த வேண்டும் என்று வரன்முறை செய்தருளினுர் ஆசிரியர்.

இஃதொகு புறமிருக்க, செல்வரிடத்தே சேரும் சில ஆகாக்குணங்களை ஆசிரியர் அங்கங்கே சுட்டி அன்னுரை உய்விக்கின்ருர். பொருளைப் பயன்படுத்தாது பூட்டி வைக்கும் இவறன்மையுடையாரை நோக்கி, 'ஈயாது இவறும் மருளால் மாணுப்பிறப்பு ஆம்', அப்பற்றுள்ளம் அன்னுர்க்குப் பேய்ப்பிறப்பைத்தரும் என அச்சுறுத்துவர். அவர் இந்நிலத்துக்குப் பாரம் எனப் பழிப்பர். செல்வம் உற்றவிடத்துத் தம் இயற்கைக் குணம் மாறி அகங்காரம் கொண்டு தலைதூக்கி நின்று அடாதன செய்யும் மனமுடையாரைக் கண்ட ஆசிரியர் 'எல்லார்க்கும் நன்ரும் பணிதல் அவருள்ளும் செல்வர்க்கே செல்வம் தகைத்து' என அடக்கமுடைமை போதிப்பர். தம் செல்வ

நிலை காரணமாகப் பெரியாரைப் பிழைத்தொழுகும் பேதையரை ஆசிரியர்,

> **வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும்**
> **தகைமாண்ட தக்கார் செறின்**

என வினவடிவில் அறிவுறுத்துவர். பொருள் பெற்றார் சிலர் செயல்வழி நின்று பல்லாற்றானும் பெறத்தக்கன வாய அறவின்பப் பயன் கொள்ளலின்றி, உடைமையின் ஊதியம் இழக்கும் நிலை கண்டு 'அருள் பொருளால் உண்டாம், ஈத்துவக்கும் இன்பமும் உண்டு', என வழி காட்டிச் செயற்படுத்துவர்.

'பொருள் பெற்றது வழங்குதற்கே' என்ற மிக உயர்ந்த நிலையைப் பிழைபட உணர்ந்து பின்பற்றி எவரேனும் துய்த்தலை இழித்தொதுக்கு வாருண்டோ என்று ஐயுற்ற ஆசிரியர் "கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய கோடி உண்டாயினுமில்" எனக் கொடுத்தல் போன்றே துய்த்தலும் வேண்டற்பாலது எனச் சேர்த்து இயல்பு மொழிவர். 'தென்புலத்தார்' எனத் தொடங்கும் குறளில் 'தான்' என்றாங்கு ஐம்புலத் தாறு ஓம்பல் என்ற குறிப்பும், "பகுத்து ஊட்டி" என்னாது 'பகுத்து உண்டு' என்ற சொல்லாட்சியும், 'தம்மில் இருந்து தமது பாத்துண்டற்றால்' என்ற தொடரும் 'தான் துவ்வான்' என்றினையவெல்லாம், துய்த்தல் செல் வத்தின் பயன் என்பதை விளக்கி நிற்பனவாம்.

துய்த்தலை ஆசிரியர் வற்புறுத்தவேண்டிய இன்றி யமையாமையின்று, அது மனித இயல்பு. பெரும் பாலானவர் துய்த்தல் என்பதனை நேர்வழியில் கொள் ளாது பலபடப் பிழைபட்டு அழிவர். அதனை நன்கு உளங்கொண்ட ஆசிரியர் 'வரைவின் மகளிர்', கள்ளுண் ணல், 'சூது' இனையன பேசும் அதிகாரங்களை ஒன்றாக நிரல்படவைத்து அவற்றால் வரும் கேடுகளைப் பலபட

அறிவுறுத்தி ஆள்வர். 'இருமனப் பெண்டிரும், கள்ளும், கவறும் திரு நீக்கப்பட்டார் தொடர்பு' எனப்பொருள் அழிவு காட்டித் திருத்துவர். பொருள், நிலையாமை யுடையது என்ற காரணத்தால் அதன் பெரும்பயனில் கருத்தூன்ருத சிலர் அதனைப் பேணித் தம்வயம் நிறுத் திக்கொள்ள முயலாது கண்டபடி அளவின்றி வாழக் கண்ட ஆசிரியர் 'ஆற்றின் அளவறிந்து ஈக, அது பொருள் போற்றி வழங்கும் நெறி' என ஈகைக்கும்கூடக் கட்டுப்பாடு விதிப்பார் போலப் பொருளைப் போற்ற வேண்டும் என்று அறிவுறுத்துவர். 'பொருளாட்சி போற்ருதார்க்கு இல்லை'.

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்ருக் கெடும்.

இங்ஙனமாகச் செல்வர்க்குப் பலவாறு அறிவு கொளுத்திச் செல்லும் ஆசிரியர் வறுமைபற்றிக் கூறுவன யாவை? வறுமைக்கு ஈடு வறுமையே, அதனின் துன்பம் தரவல்லது வேருென்றில்லை என 'நல்குரவு' அதி காரத்து முதற்குறளிலேயே 'இன்மையின் இன்மையே இன்னுதது' என அதன் கீழ்மையை-ஈடற்ற துன்ப நிலையை உணர்த்துவர். 'இன்மை என ஒரு பாவி' என்று வறுமையைப் பழித்து, இருமையும் கெடுக்கும் அதன் அழிநிலையைக் காட்டுவர். 'இல்லாரை எல்லாரும் எள்ளு வர்' எனப் பொதுப்படக் கூறிப் பெற்ற தாயும் வெறுக் கும் நிலையை வறுமை உண்டாக்கும் என்று அதன் கொடுமையை முடிப்பர். 'நல்கூர்ந்தார் நற்பொருள் சொல்லினும் அச் சொற்பொருள் சோர்வுபடும்' என அவர் கல்விப் பயனின்மை தெரிந்து வருந்துவர். இறுதி யாக மக்கட்கே சிறப்புரிமையான 'அறிவையும் நிச்ச நிரப்புக் கொல்லும்' என அதன் இறந்த இழிநிலையை வரையறுப்பர்.

இவ்வாறெல்லாம் வறுமையினும் கேடொன்றில்லை, யென்ற ஆசிரியர், அதற்காக இரந்தும் உயிர் வாழ்தலை வேண்டுவாரல்லர். இரத்தலினும், உடலைத்துறத்தல் நன்றென்று வற்புறுத்துவர். எனினும் 'இரத் தக்கார்க் காணின் இரக்க' என ஒருவாறு குழைந்து வாழ்வு மொழிவர். ஆனல் அதனையே கொண்டொழுகாது புறங் காண வேண்டுமென்பார் 'கண்ணன்னர் கண்ணும் இரவாமை கோடியுறும்' என அடுத்து மறுத்து அறிவு றுப்பர். ஊழ் எனக்கூறி மடிவாய்ப்பட்டு மனமுடைந்து தேய்வாரை நோக்கி 'முயற்சி திருவினையாக்கும்' என வாழ்வுரைப்பர். 'ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழா துஞற்றுபவர்' எனக்கூறி உழைப் பின் உயர்வால் ஊழையும் வெல்லலாம் எனச் செயற் படுத்துவர். மடி உதறிக் குடிசெய்வல் என எழும் ஒருவற்குத் 'தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்' என்று கூறி எவரொருவர் சோம்பலை விட்டுத் துணி வோடு செயலாற்றி வாழ முற்படுகின்றரோ அவருக்குத் தெய்வமே தோன்ருத் துணையாய் முன்னின்று ஆக்கம் தரும். எனவே செயற்படுக, செயற்படுக என ஆக்கம் கூறி வினைமேற் செல்லத் தூண்டுவர். அங்ஙனம் செயலாற்ருவிடத்துப் பழிவரும் எனப் பயமும் காட்டுவர்.

**பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து**
**ஆள்வினை யின்மை பழி.**

தம் வறுமை காரணமாய்ப் பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்ளத் திட்டமிட்டு அவரது சோர்வு பார்த்திருக்கும் களவெண்ணமுடையார்க்கு, அதனல் வரும் ஆக்கம் 'ஆவது போலக்கெடும்' எனக்கூறி நெறி நிறுத்துவர். இன்னும் தெளிவாக இன்மை ஒருவனுக்கு இழிவன்று என்று கூறி சால்பே வேண்டற்பாலது எனத் தெளி விப்பர். இரப்பான் வெகுளாமை வேண்டுமென்றும், வறுமைக்காலத்து உயர்ந்து நிற்றல் வேண்டுமென்றும்,

ஊக்கத்தைக் கைப்பொருளாகவுடையார் பொருளின்மை கருதி வருந்தார் என்றும், அழுக்காறுடையான் ஒரு காலத்தும் ஆக்கம் பெறுதல் இல்லையென்றும், அசைவிலா ஊக்கமுடையானை வழிவினவிக்கொண்டு ஆக்கம் தானே சென்று அவனையடையும் என்றும் ஆங்காங்கே அவரைச் செயற்படுத்துவர்.

இல்லையென்று கூறும் அறஞ்சாரா நல்குரவாளராய மடியுடையாரை நோக்கி 'நிலமென்னும் நல்லாள் அவரது பொய்க்கூற்றுக் கண்டு நகும்' என்பர். உலகில் பொருள் ஒருநாளும் இல்லாமற் போனதில்லை. பின் என்ன இல்லை? ஊக்கமும், உழைப்பும், முயற்சியுமே யில்லை. உலகில் வாழவேண்டுமாயின் முயற்சிவேண்டும். முயற்சிமெய்வருந்தக் கூலிதரும். உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார். இன்னணம் பல்லாற்றானும் இடித்துரைத்தும், ஏதுக் காட்டியும் மடியுடை மாந்தரைச் செயற்படுத்தி ஊக்குவிப்பர் ஆசிரியர்.

வாழ்க்கை நூலாதலின், மக்கள் வாழ்க்கைக்கு மிக இன்றியமையாததாகிய பொருள் பற்றி வாய்ப்பு வந்துழி யெல்லாம் பல்வேறு அதிகாரத்தும் பொருள் செறிந்த வாழ்வுக்குறளை அருளி, ஈவார், இரப்பார்; உடையார், இல்லார்; பெற்றார், அற்றார்; உள்ளார், இல்லார்; எனப் பல்வகையானும் செல்வர், வறியர் என்ற இந்நிலையினர் செயற் கூறுகளை விளங்க வைத்து வாழ்வாங்கு தனி மனிதனும், சமுதாயமும், நாடும் வாழ வழிகாட்டுவதே திருக்குறள் பொருட்பயன் என்க.

## 3. கற்றார் கல்லார்

உலகில் வாழும் உயிரினங்களில் மக்களினமே சிறந்தது. ஏனைய உயிர்கட்கெல்லாம் ஐயறிவளவே அமைய, எண்ணிப் பார்க்கும் ஆறுவதறிவு - பகுத்தறிவு

பெற்றிருத்தலே மக்களின் சிறப்பு. உலகம் தோன்றிய நாள்தொட்டு அறிஞரானோர் சொல்லிச் சென்ற கருத்துக் களையெல்லாம் சின்னாட்களில் கற்று, பின் தன் கால, இடச் சூழ்நிலைகட்கேற்ப அவற்றை அலசி ஆராய்ந்து நல்லது எது? தீயது எது? எனப்பகுத்துப் பகுத்துத் தேர்வுசெய்து ஒழுகும் ஆற்றலே மனிதனின் தனிச் சிறப்பு. இவ்வாறு பிறவற்றைக் கற்கும் தன்மையும், நல்லனவற்றைத் தேர்வுசெய்யும் அறிவும், அறிவின் வழி நின்று ஒழுகும் ஒழுக்கமும் இல்லாத மக்கள், மாக் களாக மரமாக இழித்துரைக்கப்படுவர். சுருங்கக் கூறின் பிற உயிர்க்கும் மக்களுயிர்க்கும் உள்ள சிறந்த வேறு பாடு கற்றறிந்தொழுகல் இன்மையும் உண்மையும் ஆம். சிறந்த ஒழுக்கமுடையாரையே தமிழிலக்கணம் உயர் திணையெனச் சுட்டும். திணையாவது ஒழுக்கம் என்னும் பொருளது. ஒழுக்கமா யிருத்தற்குத் துணை நிற்பது அறிவு. அறிவுக்குத் துணையாயிருப்பது கல்வி.

ஈண்டுக் கல்வி, அறிவு இரண்டற்குமுள்ள வேறு பாட்டை அறிந்து கொள்ளல் நலம். கல்வி வேறு; அறிவு வேறு. கல்வி, புறத்திருந்து நாம் தேடிக்கொள்வது. அறிவு அகத்திலேயே நம் உயிரோடு ஒட்டியிருப்பது. கல்வி பிறந்த பிறகு வந்தடைவது. அறிவு பிறப்போடு அமைந்து கிடப்பது. மணற்கேணியைத் தோண்ட நீர் சுரத்தல் இயற்கை. நிலத்தினடியில் நீர் எஞ்ஞான்றும் அமைந்து கிடப்பது. அந்நீரை வெளிக்கொணர வேண்டு மாயின் நாம் அதனைமூடியிருக்கும் மண்ணைத் தோண்டு தல் போதுமானது. மக்களுள்ளே இயல்பில் அமைந்து கிடக்கும் அறிவை வெளிக்கொணர, மூளையை நாமும் தோண்டுதல் வேண்டும். கல்வி என்ற சொல்லின் பொருளுமஃதே. கல்லுதல், தோண்டுதல். கல்விக் கல்லி மண்ணை நீக்கினால் அறிவெனும் நீர் உள்ளிருந்து சுரக்கும். கல்வி, நாம் செய்யும் தோண்டுவினை. அறிவு

அதனாலேற்பட்ட உள் விளைவு. ஆனால் கல்வியே அறிவை உண்டாக்கவில்லை. இயல்பில் இருக்கும் அறிவை, கல்வி வெளிக்கொணர்கிறது.

> தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
> கற்றனைத் தூறும் அறிவு

தோண்டத் தோண்ட மணற்கேணியிலுள்ள நீர் சுரந்து வெளிவரும். எனவே கல்வி வேறு, அறிவு வேறு எனத் தெளிக.

வள்ளுவர் கல்வி, அறிவு, இவ்விரண்டு சொற்களோடு ஒட்பம் எனப் புதுவதொன்றும் காட்டுவர். கூரிய அறிவு என்பது அதன் பொருளென ஒருவாற்றால் கொள்ள லாம். அறிவுக்கும் ஒட்பத்திற்கும் வேறுபாடு உண்டு.

> உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
> கூம்பலும் இல்லது அறிவு

இக்குறளால் ஒட்பம், அறிவு இரண்டும் வேறுவேறு நிலை யின என அறியலாம். ஒரோவழி வானில் தோன்றி மிக்கொளி தரும் மின்னல் போல்வது ஒட்பம். மிக்கொளி தருவதாயினும் நிலைத்து நில்லாததோடு, வேண்டுமளவு வேண்டுங் காலத்துப் பயன்படாது. ஆனால் மின்னலி லுள்ள மின்னாற்றலை எடுத்து நிலையான ஒளிதரும் மின் விளக்குச் செய்வது போல்வது அறிவு. சுருங்குதலும் விரிதலும் இன்றி நாம் வேண்டிய அளவு நிலையான ஒளி தரும்படி அதனைப் பயன்படுத்தலாம்.

> கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும்
> கொள்ளார் அறிவுடை யார்

இக்குறளகத்துக் கல்லாதான், ஒட்பம், அறிவுடையார் என மூன்று சொற்களையும் வேறு வேறு நிறுத்தி அம் மூன்றற்கும் தனித்தனிப் பொருள் எனக் காட்டினர். கல்லாதானிடத்து ஒரோவழி மின்னல் போன்று

நுண்ணறிவு தோன்றிப் பளிச்சிடினும் அறிவுடையார் ஏற்கமாட்டார் என்றதனுல், கல்வியாளனெடு அவ்வொட்பம் சேருமாயின் அறிவுடையார் ஏற்பர் என்பது தெளிவாம். விஞ்ஞானக் கல்வியால் மின்னெளி நுட்பத்தைச் செம்மை செய்து இயன்றவாறுபயன்படுத்துவது அறிவுடைமையாகும். இயற்கை மின்னுற்றல் செயற்கை விஞ்ஞானச் சேர்வால் நிலேத்த ஒளிதருமாப் போல, ஒட்பம் கல்விச் சேர்வால் செப்பமுற்று அறிவாகும் என்க. ஒட்பமும் கல்வியும் இங்ஙனம்ஒன்றுசேர்வதை வள்ளுவர் 'மதிநுட்பம் நூலோடுடையார்க்கு' எனத் தெளிவுறுத்துவர். ஆகவே கல்வி வேறு, ஒட்பம் வேறு, அறிவுவேறு எனினும் ஒன்றையொன்று தழுவி நிற்பனவாம். இயற்கையாய்த் தானுய் முறுகியெழும் கல்லாவொட்ப நுண்ணறிவும், செயற்கையாய கல்வி விணயால் வெளிவரும் கல்வி அறிவும் ஒன்றுசேர்ந்து நிற்றலே சிறப்பாம். அவரை 'மதி நலத்தின் மாண்ட அறிவினவர்' இயற்கையாகிய மதி நன்மையான் மாட்சிமைப்பட்ட செயற்கை அறிவிணயுடையார் என வள்ளுவர் விதந்தோதுவர்.

பிற உயிரினங்களினின்றும் மக்களினம் உயர்ந்து விளங்குதற்குக் காரணமாய இக்கல்வி, மக்கட்கு இன்றியமையாத தென்பது ஒருதலே. வள்ளுவர் கல்வி என ஓரதிகாரத்தில் அதன் கூறுகள் அடங்காமையின், கல்லாமை, கேள்வி எனமற்றிரண்டு அதிகாரங்கள் வகுத்து ஒருவாறு அதணே முற்றுவித்தார். ஆணேயிடும் முறையில் முதற்குறளின் முதற் சொல்லாகக் 'கற்க' என்ருர்.

குலப்பாகுபாடோ, சாதிப்பாகுபாடோ, ஆண் பெண் என்ற பால் வேறுபாடோ, சிறுவர் முதியர் என்ற வயது ஏற்றத் தாழ்வோ யாதொன்றும் இன்றி மாந்தரணேவரும் கற்க என விணேப்படுத்தினர். இன்ன குலத்தான், இன்ன சாதியான் இதணேக் கற்கவேண்டும் என்ற சுயநல சாதித் திமிராலும் வெறியாலும் காணப்படும் கல்வி ஒதுக்கம்

வள்ளுவர்க்கு உடன்பாடன்று. ' ஆணே கற்றற்குரியன், அறிவு என்பது ஆணினத்திற்கே யுண்டு. பெண்ணென்ருல் பேதை, பின்புத்தியுடையாள், கல்வி கற்றற்கு அவளுக்கு உரிமையில்லை ' எனப் பேசும் ஆணவநிலை பரிமேலழகர் காலத்து எழுந்த ஆகாச் சூழ்நிலை. ஆசிரியர் வள்ளுவர்க்குச் சற்றும் ஆண் பெண் வேறுபாடு இல்லை. ' மக்கட்பேறு ' ' தம்மக்கள் ' ' மக்களறிவுடைமை ' எனப் பொதுப்படச் சுட்டும் அவர் சொல்லாட்சி காண்க. அம் மக்கட்பேறு அதிகாரத்து 'தன் மகனைச் சான்ருேனெனக் கேட்டதாய்' என்றும் 'மகன் தந்தைக்காற்றும் உதவி ' எனவும் மகன் என வள்ளுவர் சுட்டி, மகள் எனச் சுட்டா தொழிந்தமை யென்னே ? பெண்ணை இழித்துக் கூறும் மனப்பாங்கு அவற்றில் உண்டுகாண் ! என ஐயுறுவார்க்கு ஒருசில விளம்புவல்.

கடவுள் வாழ்த்துப் பகுதியில் ஆசிரியர் வாலறிவன், மலர்மிசை யேகினன், இறைவன் என்றினைய சொல்லாட்சி செய்வதால் கடவுள் ஆணேயன்றிப், பெண்ணல்லள் எனக் கூறுவது அறிவோ ? உண்மையோ ? ஆய்மின் ! ஏதாவது ஒருபாலாகச் சுட்டினும் அது மற்றதையும் சேர்த்துச் சுட்டும் என்பதன்ருே சால்பு. அதுபோல மேற்குறித்த ஈரிடத்தும் மகன் என்ற சுட்டு, மகள் எனவும் பொருள்படும் எனக் கொள்க.

மக்கட் பேறதிகாரத்து எட்டாங் குறளில்,

**தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது**

எனப் பொதுப்பட மக்களின் சிறப்பு, கல்வியறிவு பெறுதலே யென்றும், உலகத்து மக்கள் அனைவர்க்கும் இன்பம் தருவது அஃதொன்றே யென்றும் விளக்கினர். பெற்ருேராகிய தாய் தந்தையரைத் 'தம்' எனச்சுட்டி, அவர்தம் மக்களின் அறிவுடைமை அவர்களைக்காட்டிலும்

பிறருக்கெல்லாம் இன்பம் தரவல்லது என்ருர். இக் குறளில் தம் என்பது தாயையோ, தந்தையையோ தனிப் படச் சுட்டாது, இருவரையும் சுட்டி நிற்றல் உளங் கொள்க. இங்ஙனமாக எட்டாங் குறளில் 'தம்' எனப் பொதுச் சுட்டால் பெற்ருேரைக் கிளந்த ஆசிரியர் அவரைத் தனித்தனி பிரித்துத் தாய் தந்தையென அடுத்த ஒன்பது பத்தாங் குறள்களில் ஆள்வர்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்ருேன் எனக்கேட்ட தாய்.

மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
எந்நோற்ருன் கொல்எனும் சொல்

ஆசிரியர் வள்ளுவரின் அழுத்தம் பொதுப்படப் பேசிப் பின்னர் தாய் தந்தையென விதந்துபேசும் நிலையில் உள் ளதே தவிர, மகன் அல்லது மகள் என்பதில் இல்லை. உலகினர் எல்லார்க்கும் இனிதாயிருக்கும் அவர்தம் மக்களறிவு அத்தாய் தந்தையர்கட்கு எங்ஙனம் இன்ப மளிக்கும் என்பதை விளக்குவதே ஆசிரியரின் நோக்க மன்றி, கற்றது மகனு, மகளா என்பதைக் காட்டுவது நோக்கமன்று.

மற்ருேர் உலகியலையும் ஈண்டு நினைவுகூரல் நலம். ஒரு பெண் பெற்ருேர் வீட்டில் இருப்பது அவள் வாழ் நாளின் இளம்பருவ நாட்களிலே யாகும். அஃது ஏறத் தாழப் பதினைந்தாண்டுகள் எனக் கொள்ளலாம். அதன் பிறகு 'காதல் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவினும் கைகொடுத்து', தன் வாழ்நாளின் சிறந்த நாட்களைக் கணவன் வீட்டில் கழிக்கிருள். அவள் வாழ்வு அங்கேதான் மலர்கிறது. சால்புடையளாய் அவள் இருக் கின்ருளா இல்லையா? என்று வெளிப்பட்டுத் தெரியும் பருவம் கணவன் வீட்டில் கழிக்கப்படுகிறது. சான்ருே ளாய் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதன் பெருமை

யும் சிறுமையும் பெரும்பான்மை கணவனைச் சாரும். சிறுபான்மையே பெற்றோரைச் சேரும்.

> இல்லதென் இல்லவள் மாண்பானால், உள்ளதென்
> இல்லவள் மாணக் கடை

என்ற குறள் காண்க. இல்லாள் என்ற நிலைமை வந்த பிறகு அவள் மாட்சியும், தாழ்ச்சியும் தந்தை தாயரை விட அவளைக் கொண்டானையே அடையும். ஆணின் நிலைமை அங்ஙனமன்று என்பது தெளிவு. எனவே பொதுவாக உலகினரின் இன்பநிலையைக் கூறி, விதந்து தாயின் மகிழ்ச்சியைக் கூறவேண்டிவந்தவிடத்துப் 'பெற்ற ஞான்றினும் பெரிதுவக்கும்' எனக்காட்டி எஞ்ஞான்றும் அவளையே வந்தடையும் மகனின் சால்பைப் பெரும்பான்மை கருதிச் சுட்டினாராதல் வேண்டும். அஃதன்றி மகனெனும் சுட்டு மகளொழித்து நின்றது என்பது சால்பாகாது.

> மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
> என்நோற்றான் கொல்எனும் சொல்

என்ற பத்தாங் குறளில் ஆசிரியர் பொதுப்படச் சுட்டாது மகன் எனச் சுட்டுவானேன்? தந்தையுடன் இருந்து, அவருக்குப் பின்னும் குடும்பத்தைத் தாங்கும் இயல்புடையமகனின் ஒவ்வொருசெயலும் தந்தையையே அடைவது இயல்பு. ஒருவன் ஒழுக்கசீலனாக நடந்தால், ஊரார், 'இவனைப் பெற இவன் தந்தை என்னபேறு செய்தாரோ' என்று சொல்வது இயற்கை. ஒரு பெண் சிறந்த குணமும் அழகுமுடையவளாயிருந்தால் திருமணமாவதற்கு முன்புகூட அவளைக் கண்டு பாராட்டுபவர் 'இவளை மனைவியாக அடைய எவன் பேறு செய்துள்ளானோ' எனவும், திருமணமானபின் 'இவள் கணவன் இவளையடைய என்நோற்றான்கொல்' எனவும் சொல்லுதல் இயல்பு. பெண்ணின் சிறப்பெல்லாம் கணவனுக்கே பெருமை தரும்.

புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை

எனவிதனை வள்ளுவர் தெளிவாகக் காட்டுவர். எனவே மகன் என்றுலும் மகளையும் குறிக்கும் எனக் கொள்வதோடு பெரும்பான்மை கருதி ஆசிரியர் மகன் எனச் சுட்டினுர் எனலே நேரிது; 'மகளொழித்து நின்றது' என்னல் பொருளாகாது காண்.

மகன் கடன் கூறிய இக்குறளொப்பத் தந்தையின் கடன் கூறிய 'மகற்காற்றும் நன்றி அவையத்து முந்தியிருப்பச் செயல்' என்ற இவ்வதிகாரத்து ஏழாங் குறளிலும் 'மகன்' என்ற சொல் ஆளப்படும். தந்தை மகனுக்குத்தான் நன்மை செய்யவேண்டும்; மகளுக்குச் செய்தல் கூடாது என்பதனுலா ஆசிரியர் மகன் எனச் சுட்டினுரென ஆய்தல் வேண்டும். ஆசிரியர்க்குப் பெண்ணொழித்தல் கருத்தன்று; ஆனுல் அவையத்து முந்தியிருக்கும் வாய்ப்பு யாருக்கு மிகுதி உண்டு. ஆண்மகனுக்கன்றே! பெண்ணுக்கும் அவ்வாய்ப்பு உண்டு. ஆனுல் அவ்வெல்லாம் கணவனைச் சார்ந்தே நடக்கும். எனவே மகன் எனச் சுட்டிப் போந்தார் எனலே அமைவுடைத்து. தந்தை கடமை, மகன் கடமை என விதந்தோதிய ஆசிரியர் யாண்டாவது தாய் கடமை, மகள் கடமை எனப் பேசாமையும் ஓர்க. ஆனுல் அதற்குப் பதில் இல்லாளின் கடமை எனப் பலபடப் பேசுவதையும் ஒத்து நோக்குக.

இல்வாழ்க்கை யென்பது ஒத்த தலைவனும் தலைவியும் கருத்தொருமித்து நடத்துவது. இங்ஙன் நடத்தப்படும் இல்லறத்தில் தலைவனின் பங்கு எவ்வளவோ, அவ்வளவு பங்கு தலைவிக்கும் உண்டு. இங்ஙனம் கூறிய மாத்திரத்தே, எல்லாச் செயல்களையும் இருவருமே புறத்திலும் சேர்ந்து செய்தல் வேண்டும் என்பது கருத்தாகக்

கொண்டு பலரும் பிழைபடுப. இயற்கையான உடலமைப் பால் பெண் தானே செய்யவேண்டிய செயல்களும் உண்டு; ஆண் தானே செய்யவேண்டிய அலுவல்களும் உண்டு. வீட்டுக்கு வெளியே உழைத்துப் பொருளீட்ட வேண்டிய பல அலுவல்களை ஆண் செய்வதும், அங் ஙனம் ஈட்டிய பொருளை ஒழுங்காகப் போற்றி, வளத்துக் குத் தக்கபடி உணவு அட்டிச் சீராக வாழ்க்கை நடத்துதல் பெண் செய்வதும் பண்டு தொட்டு நம் நாட்டில் இருந்து வரும் மரபு. 'ஆணுக்கிங்கே பெண் இளைப்பில்லை காண்' என்று பெண்ணுரிமைப் புலவன் பாரதி பாடினால் அதன் பொருளென்னை? ஆண்கள் ஈடுபடும் அத்துணைத் துறை யிலும் பெண்கள் ஈடுபட வேண்டு மென்பதா கருத்து; அந்தோ! அறப் பிழையான எண்ண ஓட்டம் அது.

சங்க இலக்கிய காலத்தில் ஆண்களோடொப்பப் பெண்களும் வீரம் மிக்கவர்கள் எனப் பேசக் கேட்கின் றோம். புறநானூற்றுப் பாடல்கள் மூதின் முல்லைத் துறைக்கண் பெண்களின் பெருமிதத்தைப் பலவாறு பாராட்டுகின்றன. இங்ஙனம் சொல்லிய அளவிலே அக் காலப் பெண்கள் எல்லாரும் போர்க்களம் சென்று சமர் புரிந்தார்கள் என்ரு பொருள்? புறப்பாடல்களில் பெண் கள் போரிட்டதான பாடல்கள் ஏதேனும் உண்டோ? ஆராய்மின்! பின் வீரப்பெண்கள் என்பதன் பொருள் தான் யாது? தன் கணவனைத் தன் தமையனைத் தன் தந்தையைத் தன் மகனைத் தன் அரசனைத் தன் நாட் டானை வீரமுள்ளவராக, வீர மனமுடையவராக, மான முடையவராக ஆக்குதல் அவளின் வீரமாம். தன்னை எதிர்த்து வரும் மதிகெட்ட மறவர், புலியனையாரே யாயினும் கைமுறத்தால் அவரைப் புறங்கண்டு தற்காத் துக்கொள்ளல் அவர்தம் வீரம் என்க.

எனவே அவரவர்க்கு இயைந்தவாற்ருல் குடும்ப வேலைகளைப் பங்கு போட்டுக்கொண்டு ஏற்றத் தாழ்வு

மனப் பான்மையின்றி ஒத்து நின்று வாழ்க்கை நடத்து தலே நல்லறமாம். இம்முறைப்படி வீட்டுச் செயல்களைக் கவனித்தல் பெண்கடன். வெளி அலுவல்களைக் கவனித் தல் ஆண் கடன். பெரும்பான்மையும் மக்களின் உடல் வளர்ச்சியைத் தாயும், உளவளர்ச்சியை ஆணும் பேணுப. இங்ஙனம் கூறியவுடனே உடல் வளர்ச்சியில் தந்தைக்கும், உளவளர்ச்சியில் தாய்க்கும் பங்கில்லை என்று பொருள் கொள்ள வேண்டா. ஒருவரின் உள வளர்ச்சி பெற்றோரோடு சமுதாயம், ஆசிரியர், அரசு நிலை முதலிய அனைவராலும் உருவாக்கப்படுகிறது. எனினும் பெரும்பான்மைப் பொறுப்புப்பற்றி இங்ஙனம் விளக்கப் பட்டது என அறிக. 'ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே, சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே' என்றது, பொன்முடியார் என்ற சங்ககாலப் பெண் புலவர் பாட்டு.

இவ்வெல்லாம் நீள நினைந்தால் 'அறிவறிந்தமக்கள்' என்றதனுள் 'மக்களென்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது' என்ற பரிமேலழகரின் உரை பிழைபட்ட தென்று அறியலாம். எனவே கல்வி கற்றற்குப் பால் ஒதுக்கம் ஆசிரியர் வள்ளுவர்க்குக் கருத்தன்று.

பருவஒதுக்கமும் ஆசிரியர்விருப்பன்று. 'இளமையில் கல்' என்னும் முதுமொழி அப்பருவச் சிறப்பு நோக்கி எழுந்ததேயன்றி முதுமையில் கற்றல் ஆகாது என்பது அதன் பொருளாகாது.

> யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
> சாந்துணையும் கல்லாத வாறு

என்ற குறளால் சாகும் வரைக்கும் வயது பற்றிய வரை யரையின்றி ஒருவன் கற்கலாம், கற்கவேண்டும் என்பது தெளிவு.

இனிக் கல்வியின் இன்றியமையாமையை ஆசிரியர் விளக்கி மொழிவர். மக்களுயிர்க்குக் கண் போன்றது கல்வி. ஊனக்கண்ணால் குறித்த காலத்துக் குறித்த இடத்தையே காண இயலும். ஊனக் கண் பார்வைக்கு வரம்புஉண்டு. ஆனால் கல்விக்கண் பெற்றவர் தன்காலத்தைத் தாண்டி நின்று முன்னும் பின்னும் சிந்தித்து அறியவும், தான் ஊனக்கண்ணால் ஒரு நாளும் காணாத காணமுடியாத, தன் நாடு கடந்து, தன் எல்லை மீறிநிற்கும் பலவற்றையும் கற்று அறியவும்முடியும். கற்றோர்க்கு எல்லா ஊரும் தன் ஊராம். எல்லா நாடும் தன் நாடாம். உலகில் எப்பகுதிக்குச் செல்லினும் அவர்க்குப் பெருமையுண்டு. சிறப்பு உண்டு. இவ்வுலகில் தேடிச் சேர்க்கப்படும் ஏனைய எல்லாச் செல்வங்களும் அழியும் தன்மையுடையன. ஆனால் கல்வியென்னும் செல்வமோ, ஒரு நாளும் கெட்டொழிதலில்லாத சிறப்புடைச் செல்வமாகும். மேலும் இவ்வுடம்பு அழியினும்கூட என்றும் அழியாத உயிரோடு சேர்ந்து நின்று, ஏழு பிறப்பின் கண்ணும் வந்து உதவுதலை யுடையது. கற்றவன், கால வெல்லையைக் கடந்து நிற்கும் ஆற்றலுடைய னாதலோடு, எவற்றாலும் யாராலும் அழிக்கப்படாத செல்வத்தை உடையவனாய் இம்மையிற் சிறப்பும் மறுமைக்குச் சேமிப்பும் உடைய வாழ்க்கையனாகின்றான். இவையெல்லாம் ஆசிரியர் கல்வியின் இன்றியமையாமையையும், சிறப்பையும் கூறும் பொருள்மொழிகள்.

கற்கும் காலத்து ஐயம் திரிபறக் கற்கவேண்டுமென்பார் 'கசடறக் கற்க' என்றார். எவ்வளவு நாள் கற்க வேண்டு மென்பார்க்குச் 'சாந்துணையும்' எனப் பேரெல்லை காட்டுவதாயும் கொள்ளுதல் ஏற்புடைத்து. உயிர்வாழும் காலமெல்லாம் அறிவோடு இருக்க வேண்டுமாகலானும், வாழ்க்கை முழுவதும் கற்றுக்கொண்டேயிருப்பினும் கல்லாதது உலகளவு எஞ்சி நிற்றல் இயல்

பாகலானும் எவ்வளவு நாள் மனிதன் உயிருடன் இவ்வுலகில் வாழ விரும்புகின்ருனே அத்துணை நாளும் கற்றல் வேண்டப்படுவதென்க.

ஆயின், கற்றலோ எளிதான செயலன்று. விருப்பமிருந்தாலன்றி, முயற்சியிருந்தாலன்றி வேண்டுபவற்றை ஒருவன் கற்றல் இயலாது. பணக்காரனிடத்து ஏழையொருவன் சென்று பணத்தை விரும்பி எங்ஙனம் ஆசையால் தாழ்ந்து போய் இடைவிடாமல் அவனைச் சூழ்ந்து நின்று வழிபாடு செய்து பொருள்பெற முயல்வானே, அங்ஙனம் கற்றல்வேண்டும் எனப் பொருள் பற்றிய உலகியல் நாட் காட்சியைக் கூறி, 'உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்க' எனக் கற்கும் வழி முறை காட்டுவர்.

கற்ருர் முகத்திலிருப்பனவே கண் என்று சொல்லப்படும். கல்லார் முகத்திலிருப்பன நோய் செய்யும் புண்கள் என இழித்துரைக்கப்படும். கல்லாதார் களரனையர். களர் நிலத்தால் ஒருவருக்கும் ஒரு பயனுமில்லை. அவ்வுவர் நிலம் நெல் முதலியன விளைத்துப் பிறர்க்குப் பயன்படுதலின்மையின் அதனைப் பேணுவாரு மிலர். அது போலக் கல்லார் தமக்கும் பயனின்றிப் பிறர்க்கும் பயனின்றிவாழும் இழிநிலையினராவர். உயர் குடியிற் பிறந்தா ராயினும் கல்லாதார் இழித்தொதுக்கப்படுவர். கீழ்க்குடியிற் பிறந்தாராயினும் கற்ருர் உயர்த்தி மதிக்கப்படுவர். மக்களென்னும் சொல்லுக்கு உரியவர் கற்றவரே. கல்லார் மக்கள் யாக்கையோ டிருப்பினும் விலங்கெனவே இழிக்கப்படுவர். இனையவெல்லாம் கற்ருர் கல்லார் வேறுபாடுகள்.

கற்ருர்க்குச் சிறப்பு, சொல் வன்மையுடையனுதல். சொல்வன்மையின்றேல் பிறர்க்குத் தான் கற்றதை விரித்துரைத்து அறிவு கொளுத்த இயலாது போகும். தான்

கற்றதைப் பிறர் உணர விரித்துரைக்க இயலாதாரை ஆசிரியர் மலர்ந்து வைத்தும் வாசனையில்லாத நாருமல ரென இழித்துரைப்பர். கற்றவர் முன், தான் கற்றதனை நன்கு செலச் சொல்லுவாரைக் 'கற்ருருட் கற்ருர்' என விதந்து சிறப்பிப்பர். அங்ஙனம் அவையினர் முன் சொல் லாடுவதால், தான் கற்றதினும் மிக்கிருப்பதைப் பிறரிட மிருந்து அறிந்து கோடலும், தன் கல்வியளவை ஒரு வாறு அளந்து தெரிந்து கொள்ளலும், அறியாதார்க்கு அறிவு கொளுத்தலும் பயன்களாகு மென்க. நிற்க.

கல்லார்க்கு ஒன்றும் தெரியாது, நாம் மிக உயர்ந்த வர்கள் என எண்ணிக் கற்ருர் இறுமாப்புக் கொள்ளுதல் பேதைமைத்து. கல்லாரை மிகமிகக் கண்டித்து இழித் துக்கூறும் ஆசிரியரின் நோக்கம், எல்லாரும் கற்க வேண்டும் என்ற அடிப்படையை வலியுறுத்த எழுந்த தாகும். அரிய கற்றுக் குற்றங்களின்றி வாழ்வார் மாட்டும் அறியாமை யிருப்பது இயல்பென்பதையும், கல்லார் மாட்டும் நுண்ணறிவு துலங்குதல் உண்டென்பதையும் ஆசிரியர் நன்கறிந்தவர். ஒருவனை மதிக்க அவனது கல்வி ஒரு துணைக் காரணமேயாம். நுண்ணிய நூல்பல கற்றும் அறிவில்லாராய், கற்றறி மூடராய் மக்கள் வாழ் வதையும் வள்ளுவர் நன்கு கண்டவர். கல்வி அறிவாக மாருத வழி, நல்வாழ்க்கைக்கு வழிகாட்டாத இடத்து, வாழ்க்கையோடு ஒன்றிப் பயன் படாத ஞான்று, இயற்கை அறிவைத் தெளிவாக்கிக் கூர்மைப் படுத்தாத பொழுது, பன்னுளும் அனுபவத்தால் அறியவேண்டுப வற்றை மிக எளிதில் அறிவு கொளுத்தாத நிலையில் அக்கல்வியால் பயன் ஒன்றுமில்லை. குணநாடிக் குற்றமும் நாடி, மிகைதேர்ந்து ஒருவனைத் தெரிந்து தெளி என்பது ஆசிரியரின் அடிப்படைக் கருத்து. கல்வி, குணத்தை வளர்த்தல் வேண்டும். இன்றேல் அது பெற்றும்

பெற்றிலனும், ஓதுதலின் பயன் அறம் உணர்ந்து உயர்வதாகும்.

எனவே, மக்கட்கு இன்றியமையாச் சிறப்பினதாய கல்வியின் பயன் அறிவு என்பதையும், அவ்வறிவின் பயன் ஒழுக்கம் என்பதையும் நாம் எஞ்ஞான்றும் மறத்தல் கூடாது. உலகத்தோடு ஒட்ட ஒழுகலை அறியாதவர், எனைத்து நூல்களைக் கற்றும் அறிவிலா தாரே என இடித்துரைத்துக் கல்வியின் பயனை ஒருவாறு சுட்டுவர். மிகத் தெளிவாக, 'கற்றதனாலாய பயன் என் கொல்?' என வினவிடுத்து அதன் முடிந்த பயனாக 'வாலறிவன் நற்றாள் தொழுதல்' என முடிவுரைப்பர். கற்றலின் பயன் அறிவு விளக்கம்பெற்று, அகங்காரம் அடங்கி அடக்கமும் அன்பும் உடையனாய், சிறந்த ஒழுக்க சீலனாய், தூய அறிவாக விளங்கும் கடவுளைத் தொழுது வாழ்தல் என்பது ஆசிரியர் துணிவு. எனவே கற்க; கற்பவை கசடறக் கற்க; கற்றபின் அதற்குத்தக நிற்க.

## 4. அறிவுடையார் அறிவிலார்

மக்களினத்திற்கும் ஏனைய உயிரினங்கட்கும் உள்ள தலையாய வேறுபாடு அறிவென்பதும், அஃது இயற்கை யிலேயே மக்கட்பிறப்பினுள் அமைந்து கிடப்பதென் பதும், அவ்வறிவூற்றுக் கண்ணைத் திறந்து விடுதலே கல்வியின் பயன் என்பதும் சென்ற தலைப்பினுள் நாம் கண்ட சில கருத்துக்களாகும், மலருக்கு நிறம் இயல் பாதல் போல மக்கட்கும் அறிவு இயல்பு. 'அறிவறிந்த மக்கட்பேறு' என்ற ஆசிரியரின் குறிப்பை உன்னுக.

இத்தொடர்க்கு, உரையாசிரியர் பலரும் மக்களுள் காணப்படும் பலதிற அறிவு வேறுபாட்டை மனத்துக் கொண்டு 'அறிவினை அறிதற்குரிய மக்கள்' எனப்

பொருள் செய்தனர். அன்னுர் 'அறிவறிந்த' என்பது மக்கள் என்ற சொல்லின் சிறப்பு அடைமொழி யெனக் கொண்டு, மக்களுள் 'அறிவு அறியா மக்கள்' என்ற தொடர்க்கு எதிரதாக 'அறிவறிந்த மக்கள்' எனப் பொருள் கண்டனர். 'அறிவறிந்த' என்பது மக்களினத் துக்கே சிறப்பான உரிமையாக விளங்கும் தன்மையைச் சுட்ட வந்த இயல்பு அடை எனக் கொள்ளுதல் நேரிது. மக்கட் பிறவி யென்ருலே அறிவு அமைந்து கிடக்கும் பிறப்பு என்பது, தானே போதரும். அஃதற்ருக, அறிவு அறியா மக்கட் பிறப்பு, அறிவு அறிந்த மக்கட் பிறப்பு என வேறு பாடு கொள்ளுதல் பொருந்தாமை ஓர்க. எனவே பிரித்துக் காட்ட வந்த சிறப்பு அடை மொழி யெனக் கொள்ளாது, இயல்பின் வந்த தன்மை யடை மொழியெனக் கொள்ளலே ஆசிரியரின் கருத்தாதல் அறிக.

'விரிநீர் வியனுலகம்', 'உயிருண்ணும் கூற்று', 'ஏரின் உழாஅர் உழவர்' என்ற ஆசிரியரின் சொல் நடை காண்க. நீர் சூழா உலகம், உயிருண்ணுக் கூற்று, ஏரல்லாத பிறகொண்டு உழும் உழவர், யாண்டேனும் உண்டோ? ஆசிரியர்க்கு அது கருத்தன்று; இயல்பின் சுட்டலே கருத்தென்று கொள்ளுமாப் போல, ஈண்டும் அறிவறிந்த என்பது மக்களினத்துக்கே உரியதாகிய அறி வுத்தன்மையைப் பொதுவில் சுட்டவந்ததுஎனக்கொள்க. எனவேதான் ஆசிரியர் அறிவற்ற ஏனைப் பொருள், உயிர்கள் படைத்தலினும் அறிவுப் பிறப்பான மக்களைப் பெறுதல் சிறந்ததென 'யாம்' எனத் தற்சுட்டிப் பெருமிதம்பட,

> **பெறுமவற்றுள் யாம்அறிவ தில்லை அறிவறிந்த**
> **மக்கட்பே றல்ல பிற**

என அழுந்த மொழிந்தனர் என்க. நிற்க.

பெறுமவற்றுள் தலைசிறந்ததான மக்கட்பேறடைந்த ஒருவன் அக்குழவிகள் மெய்தீண்டி உடற்கின்பம் உறுகின்ருன். யாழினும் குழலினும் இனிய அவரின் மழலைச் சொல்கேட்டுச் செவிக்கின்பம் அடைகின்ருன். உச்சி மோந்து முத்தம் பலதந்து, குமிழ் சிரிப்புக்கண்டு கண் களித்துப் பெருமகிழ்வெய்துகின்ருன். குறுகுறு நடந்து சிறுகைநீட்டி அவர் செய்யும் சிறுகுறும்பு கண்டு உள் மகிழ்வு கொண்டு மயங்குகின்ருன். இவ்வெல்லாம் இல்லறத்தில்நின்று இயல்பு வழிஒழுகும் ஒருவன்பெறும் எள்ளுதற்கரிய, மாசு மறுவற்ற தூய இன்ப நிலைகள். ஆனால் இவையெல்லாம் குறிப்பிட்ட சில ஆண்டுகட்கே என்பதை நாம் மறத்தல் கூடாது. நிலைத்த இன்பமாக மக்கள் பெற்ருேர்க்கும் மற்ருேர்க்கும் தருவது அறிவால் தரும் இன்பமேயாகும்.

**தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க்கு எல்லாம் இனிது**

என்ருர் ஆசிரியர். பெறுமவற்றுள் மக்கட்பேறு சிறந்த தாமாறுபோல அவர்தரும் இன்பங்களுள் அறிவுடைமையே சிறந்தது. ஒருவனின் அறிவுடைமை உலகத்து வாழும் அனைத்துயிர்களுக்கும் இன்பம் தரவல்லது. எனவே மனிதனின் சிறப்புடைமை அறிவுடைமையேயாகும்.

மக்களுயிர்க்கெல்லாம் இயல்பின் அமைந்துகிடப்பது அறிவெனின் 'அறிவுடையார்'-'அறிவிலார்' என இரு வேறு பகுப்பு இருப்பானேன்? இஃதோர் அறிவு வினு. அறியவேண்டிய பொருள். அறிந்து தெளிந்து கொளத் தகும் கருத்து.

பூமிக்கடியில் நீர் எஞ்ஞான்றும் அமைந்து கிடப்பதாயினும், மணற்கேணி தொட்டனைத்து ஊறுமாப்போல நிலத்தின் எல்லாப் பகுதியினும் தொட்டனைத்து நீர்

ஊறுவதில்லை. ஓரளவு கல்லியவுடன் நீர் ஊறும் இடமும் உண்டு. மிக ஆழமாகப் பல ஆள்மட்டம் வெட்டியும் நீர் கசியாத வன்பாறை நிலமும் உண்டு. அறிவும் அத் தன்மைத்தெனக் கொள்க. வெட்டிய மாத்திரத்தே நீர் காணப்படவில்லையேல், அங்கே நீரில்லையென்பது பொருளன்று. பலகாலமாக சூரிய வெப்பம், சூழ்நிலம் முதலிய காரணங்களால் அந்நிலம் கெட்டிப்பட்டுப் பாறையாய் மாறியதே நீர் உடன் வெளிவராமைக்குக் காரணம். பிறந்த குடி, பெற்றோர் தன்மை, நாட்டின் தட்பவெப்பநிலை, ஆட்சி முறை, பொருள் வளம், கல்விப் பயிற்சி என இன்னோரன்ன பல காரணங்களால் மக்களி டத்துள்ள அறிவு வேறுபாடு, யாக்கை வேறுபாடு போலவே எண்ணத் தொலையாது. எனவே முயன்று அறிவைக் கூர்மையாக்கி அதனை ஆளும் மனிதனை அறிவுடையான் என்றும், அறிவுக் கருவியை வாளா துருப்பிடிக்க வைத்துவிட்டு அதனை ஆளாதவனை அறிவிலான் என்றும் சொல்வதே யாண்டும் கருத்தாகக் கொள்க.

ஒரு பலாக் கனியிலிருந்து எடுத்த விதைகளைப் பல்வேறு இடங்களில் பல்வேறு சூழ்நிலையில் போடு கின்றோம். நல்ல சூழ்நிலைபெற்ற விதை, செழித்து வளர்ந்து மரமாகிறது; ஆகாச் சூழ்நிலைப்பட்ட விதை, வளர்தலின்றி மடிகிறது. அதுவிதையின் வேறுபாடன்று, சூழ்நிலையின் விளைவு. விதையின் உயிர்ச்சத்தற்ற தன்மையன்று, உயிர்ச்சத்து வெளிவரமுடியாத நிலை. எனவே அறிவிலான் என ஒருவனில்லை. அறிவறிந்து ஆள்வினையின்மையே உண்டு. காலமும், இடமும், சூழ் நிலையும் ஒத்திருக்குமாயின் எல்லார்க்கும் அறிவு வெளித் தோன்ற வாய்ப்புண்டு.

ஈண்டு அறிவின் மற்றோர் தன்மையையும் அறிந்து கோடல் நலம். ஒரு மாமரத்திலிருந்து எடுத்த பல

கொட்டைகளை நிலம், நீர், வெப்பம், உரம் முதலிய எல்லாம் ஒத்திருப்பதாய ஒரு சூழ்நிலையில் நடுகின்றோம். அவற்றுட் சில செடிவரை வளர்ந்து அழிகின்றன. வேறு சில மரமாக வளர்கின்றன. அங்ஙன் மரமாக வளர்ந்த வற்றுள் ஒன்றில் இலைகள் பெருகிப் பழம் அருகியிருக்கக் காண்கிறோம். மற்றொன்றில் பழங்கள் ஏராளமாயிருந்தும் அவை புளிப்புடையனவாய் இருக்கின்றன. அம்மரத் திலேயே ஒரு பழத்தின் சுவை இருப்பதைப் போல் மற்றொன்றின் சுவை, வேறுபாடின்றி அமைவதில்லை. இவ்வாறு இனம் ஒன்றேயாயினும், சூழ்நிலை ஒத்திருந்த போதிலும், ஒவ்வொன்றின் இயல்பும் வேறுவேறுபட்டுத் தனித் தனி இருக்கக் காண்கிறோம்.

ஒரே பெற்றோர்க்குப் பிறந்து, ஒரே சூழ்நிலையில் வளர்ந்து வாழ்ந்து, ஒரே பள்ளிக்கு அனுப்பப்பட்ட உடன் பிறந்தார் இருவரின் அறிவு நிலையும் வேறு நிலை யில் இருப்பது கண்கூடு. எனவே இயற்கையாய் மக்க ளினத்துக் குரிய பிறப்பால் பெற்ற அறிவு யார்க்கும் பொதுவாயினும் அவரவர் சூழ்நிலைக்குத் தகவும், அவரவர் ஆள்வினைக்குத் தகவும் ஒவ்வொருவரின் நிலை யும் வேறுபட்டுக் காணப்படுகிறது. இதை அவரவரின் சிறப்பறிவு எனக் கூறலாம்.

> நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
> உண்மை அறிவே மிகும்

என இக்கருத்தினை ஆசிரியர் விளக்கிப் போந்தார். எனவே, இயல்பின் பெற்ற பொதுவான பிறப்பறிவோடு ஒவ்வொருவர்க்கும் தனித்தனிச் சூழ்நிலையாலும், ஆள் வினையாலும் வேறுபடும் சிறப்பறிவும் உண்டு எனத் தெளிக.

இனி, மக்கட்கு இன்றியமையாச் சிறப்பினதாய இவ் வறிவைப் பல்லாற்றானும் பெருக்கிக் கொள்ள வேண்டும்

என்று தனித்தெடுத்துக் கூறவேண்டுவ தில்லையெனி னும், ஆசிரியர் அறிவுடைமையின் சிறப்பையும், அஃதின்மையின் இழிவையும்,

> அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
> என்னுடைய ரேனும் இலர்

என மற்றைய எல்லா உடைமைக்கும் அடிப்படையான தும் சிறப்புடையதும் 'அறிவே' என விதந்து சுட்டி விளக்கினர். அதனையே

> அறிவின்மை இன்மையுள் இன்மை: பிறிதின்மை
> இன்மையா வையா துலகு

என உலகியல் பேசுவார்போல மற்றோர் நடையால் வலியுறுத்தினர்.

இவ்வறிவைத் தீட்டிக் கூர்மையாக்கிக் கொள்ளும் வழிகள் பலவற்றுள் கற்றலும், கேட்டலும் முதல் நிற்பன வாம். தத்தம் நிலைக்குத்தக அறிவு வளர்ப்பு ஒவ்வொரு வருக்கும் சாகும் வரைக்கும் வேண்டுமென்பது கூற வேண்டுவதில்லை. 'சாந்துணையும் கல்' என்பது ஆசானின் ஆணை. அரசனயிருந்தாலும், அமைச்சனு யிருந்தாலும்,தூதுவனயிருந்தாலும், வீரனயிருந்தாலும். குடிமகனயிருந்தாலும், வேறு எந்நிலையினனு யிருந் தாலும் தம் நிலைக்குத் தக அறிவை வளர்த்தல் அவரவர் கடன்.

இறைமாட்சி கூறுமிடத்து 'தூங்காமை, கல்வி, துணிவுடைமை', 'அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம்' எனக் கல்வியையும் அறிவையும் அரசர்க்கு இன்றியமை யாத வெனச் சுட்டுவர். அமைச்சனது இயல்பாக, 'மதி நுட்பம் நூலோடுடையான்' எனக் கூறுவர். தூதுவனின் பண்பாக, 'அறிவு, உரு, ஆராய்ந்த கல்வி' யென யாப் புறுப்பர். 'அறிவு அற்றம் காக்கும் கருவி' என வீரனுக்கு அழிக்க லாகாக் கருவி நல்குவர். 'ஆள்வினையும் ஆன்ற

அறிவும் என விரண்டின் நீள்வினையால் நீளுங்குடி' எனக் குடிசெய்யும் மகனுக்கு ஆக்கம் காட்டுவர். கற்று செலச் சொல்லுவாரை நோக்கி 'எண் பொருளவாகச் செலச் சொல்லல் அறிவு', என விதிப்பர். கேள்வி வழி அறிவு தீட்டுவாருக்குச் 'சொல்லுவர் வாய் நுண்பொருள் காண்பது அறிவு' என வழி துலக்குவர். பிறர் கூறுவன வற்றையெல்லாம் அறிவென ஏற்றுக்கோடல் தக்கதன்று; அறியாமையெனத் தள்ளுதலும் தக்கதன்று; அவர் கூறியவற்றைத் தம் அறிவோடு பொருத்தி ஆராய்ந்து எண்ணி, தக்கது, தகாதது என முடிவு செய்யவேண்டும் என்பார்,

> எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு

எனத் துணிபுரைப்பர்.

கல்வி, கேள்வி இரண்டினோடு அனுபவ முடிபுகளை யும் ஒன்றுக்கி, எப்பொருளாயினும் அப்பொருளை அலசி ஆராய்ந்து பன் மாணும் சிந்தித்து அதன் உண்மைத் தன்மையினை உணர்தல் வேண்டும். நம் ஒவ்வொரு பொறியும் ஒவ்வொரு நிலையில் ஏமாறும் இயற்கை யுடையது. மஞ்சள் நிறம் தீட்டிக் களிமண்ணால் செய்து சேய்மையில் வைக்கப்பட்ட வாழைப்பழத்தைக் கண்டு கண் ஏமாறும். ஆனால் தொட்டுப்பார்த்தலால் கையும் மோப்பதால் மூக்கும், சுவைப்பதால் நாக்கும் அதன் பொய்மைத் தோற்றத்தின் உண்மையினை அறிந்து வெளிப்படுத்தும். இஃதொப்பவே, ஒவ்வொரு பொறியும் பிழைபட்டு ஏமாறும் இடங்கள் இவ்வுலகில் பலவா யிருக்கக் காண்கிறோம். எனவே ஐயம் நேர்ந்துழி, பிற பொறிகளானும் ஆய்ந்து உண்மை காணல் வேண்டும். ஒரு பொருளை இவ்வனைத்து வகையானும் ஆராய்வ தோடு கற்றவை கேட்டவை இவற்றோடு பொருத்தி,

அதன்மேல் தன் அறிவொடு உரைத்து மெய்ப்பொருள் காண வேண்டும்.

> எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு.

நறுமணம் மிக்க சுவைத்தேனை உண்ட ஈ, அழுக்குப் பொருளிலும் ஆசையோடு அமர்ந்து உண்ணுமாறு போல, மனிதனின் மனம் ஒரு நிலையில் நில்லா இயற்கையது. நன்னெறிக்கண் சென்ற மனம், தீநெறிக்கண் சென்று உழல்தலும் இயல்பு. மாறுபடும் இயல்புடைய இம்மனக் குதிரையை அறிவெனும் கடிவாளத்தால் அடிக்கடி இழுத்துப் பிடித்து நிறுத்தி நல்வழிச் செலுத்தல் வேண்டும்.

> சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
> நன்றின்பால் உய்ப்பது அறிவு

என அறிவின் இலக்கணத்தை வரையறுப்பர்.

அறிவுடைமை, பேதைமை, புல்லறிவாண்மை என்ற மூன்றதிகாரங்களும் அறிவு நிலையில் வேறுபட்டிருக்கும் மூன்றுநிலை மக்களைப் பற்றியது.

'தீதினை விலக்கி நன்றின் பால் உய்த்தல்' என்ற அறிவின் இலக்கணத்தின் நேர்மாறுனது பேதைமை. அதனை 'ஏதங்கொண்டு ஊதியம் போகவிடல்' என்பர் ஆசிரியர். தனக்குக் கேடு பயப்பனவற்றைக் கைக்கொண்டு ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிடுவாரைப் பேதை எனக் கூறிய ஆசிரியர் 'கற்றுருட் கற்றுர்' என்ற சிறப்பு நடைபோல, 'பேதையிற் பேதை' என ஒருவர்ச் சுட்டுவர். கற்கவேண்டிய நூல்களை நன்கு கற்றுச், சிந்தித்துத் தெளிந்து, சொல்லவல்லனுய் அவற்றைப் பிறர்க்கெடுத்து உரைத்து விளக்கித் தான் மட்டும் அவ்வறிவுவழி நில்லாது அடங்காப்பிடாரி வாழ்க்கை நடத்தும் அன்னுரை,

ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தான்அடங்காப்
பேதையிற் பேதையார் இல்

என வருந்தி மொழிவர். அறிவின் பயன் அவரவர் ஒழுக்கம் என்பதை இது தெற்றெனக் காட்டும். ‘கற்றபின் நிற்க அதற்குத் தக’ என்பதும் இஃதே.

யாதும் அறியாமையாகிய பேதைமையினும் இன்னும் வருந்தத் தக்க நிலை புல்லறிவாண்மை என்பது. பேதை, சிந்திக்க அறியாதவன். புல்லறிவாளன், பேதையை நோக்க, சிந்திக்கும் ஆற்றலுடையன்; ஆனல் தான் கண்ட முடிபே சரியென்னும் செருக்குடையான். அவன் அறிவுடையார் சொல்லுபவற்றைக் கேட்டொழுகவும் மாட்டான், தானுக்வும் தெளிந்து நல்வினை மேற் செல்லான். இரண்டுங்கெட்ட இந் நிலையினரால் எள்ளத்தனையும் எவருக்கும் நன்மையில்லாததோடு துன்பம் வருவதும் ஒருதலை. எனவே ஆசிரியர் அவனை உலகத்திற்கே ஒரு நோய் எனக் கடிந்துரைப்பர்.

ஏவவும் செய்கலான், தான்தேருன், அவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

பேதை தனக்கு மட்டும் கேடுசூழ்வான். புல்லறிவாளன் நன்மை என நினைத்துக்கொண்டே தனக்கும் பிறர்க்கும் கேடு சூழ்வான்: அவனிடம் சென்று உறவாடிய காரணத்தால் அறிஞனும் முட்டாளாக்கப்படுவான் என்கிருர் ஆசிரியர்.

அவன் தனக்குத்தானே தன் புல்லறிவால் செய்துகொள்ளும் தீமைகள் அது செய்யக் காத்திருக்கும் அவன் பகைவரால் கூடச் செய்யமுடியாது என ஆசிரியர் அவனை இழித்துரைப்பர். தன் அறிவே மெய்யறிவு, பிறர் அறிவெல்லாம் பயனற்றது என எண்ணும் புல்லறிவாளன் அச் செருக்கால் பேய்போலப் பல ஆகாச் செயல்களைச் செய்வான் என வள்ளுவர் இரங்கி வருந்துவர்.

இனி, அறிவுடையாரிலேயே சிற்சில நுணுக்கமான வேறுபாடுகளையும் ஆசிரியர் ஆங்காங்கே சுட்டி உண்மை யறிவு கொளுத்துவர். அதிகாரச் செருக்கால், அறிவு மமதையால் மக்கள் ஒரோவழி தவறிப்போவதை ஆசிரியர் நன்கறிந்தவர். 'இவ்வுலகில் பிறக்கும்பொழுது யாரும் ஆடையோடு பிறப்பதில்லை. பின் எற்றுக்குக் காலத்தையும், பணத்தையும் செலவு செய்து ஆடைகளை நெய்து அணிவது? அங்ஙனம் ஆடையோடிருப்பார் எல்லாம் அறிவிலிகளே' எனவாங்கு, வழியல்லா வழி யில், நிமிர்த்த இயலாக் கோணல்நெறியில் சிந்தித்து, உலகம் செல்லும் நெறியினின்று விலகி நடப்பது அறி வன்று என்பார், 'எவ்வதுறைவது உலகம், உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு' 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார், பல கற்றும் அறிவிலாதார்' எனக் கடிந்து பழித்துரைப்பர்.

'மிதமிஞ்சி நீரைத் தேக்கிவைத்தால் செடி அழுகிப் போகும்' என்பதைச் சிந்திக்காது, அடிக்கடி நீர் ஊற்றிச் செடியை விரைவின் வளரவைப்பதாக எண்ணும் 'அறிவாளர்களைப்' பார்த்து 'ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினை ஊக்கார் அறிவுடையார்' என இடித்துரைப்பர். தம் அறிவு வன்மையால் பிறர் பொருளை அவரறியாமல் கவர நினைக்கும் பொருளாசையுடையாரை நோக்கி, அறவழி நின்று பிறர் பொருளைக் கவரும் எண்ணமின்றி வாழ்ந்தால் திரு தானே வந்துசேரும் எனப் பொருள்வரும் வழியை அவர்க்குக் காட்டி அறநெறி நிறுத்துவர்.

ஒருவனது அறிவு, சுற்றுப்புறச் சூழ்நிலையால் பெரிதும் மாறுபடுவது இயல்பு. எனவே நல்லோர் இணக்கம் நாடோறும் வேண்டப்படும். ஒரு கூடைப் பழத்தில் ஒன்று அழுகினும் சிறிது சிறிதாக மற்றெல் லாம் அழுகத் தொடங்குவது, நாட்காட்சி. வானிலிருந்து

கீழே விழும் மழைநீர் மிகத் தூய்மையுடையதுதான் எனினும், கீழேவிழும் நிலத்தின் இயற்கைக்குத் தகுந் தாற்போல் அந்நீர் மாறுபடும். அதுபோல் 'மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு' என விளக்குவர். நட்பாளரைத் தேரும் இடத்து, பேதை பெருங்கெழீஇய நட்பு அறிவுடையாரின் பகைமையினும் கேடுதரும் என விலக்கி, 'அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை திறனறிந்து தேர்ந்து கொளல்' வேண்டும் என விதிப்பர்.

கற்கவேண்டிய பல நூல்களைக் கற்றுவைத்தும், தனக்கு நன்மை தருவது எது, எதிர்காலத்து வருவது யாது என்று தெரியாமல் மயங்கித் தெளிவு கைவரப் பெருதாரை நோக்கி,

**அறிவுடையார் ஆவது அறிவார், அறிவிலார்**
**அஃதறி கல்லா தவர்**

என அவரின் முன்னுணர்ந்து தெளிந்து கொள்ளாத துணிவின்மையைச் சுட்டிச் சிந்திக்கவைப்பர். அன்னுரை யொப்பப் பலநூல்களைக் கற்றும், கேட்டதைச் சொல்லும் கிளிப்பிள்ளைபோல, நுட்ப அறிவின்றி இருக்கும் அழகு மிக்காரைக் கண்டு,

**நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்**
**மண்மாண் புனைபாவை யற்று**

எனச் சுதையாற் செய்தஅழகிய பாவைபோல்வாரென்று எள்ளி அவருக்குக் கூர்த்த மதிவேண்டுமென்பர். இனி நுண்ணிய கூர்த்த மதியுடையாரேயாயினும் மக்கட் பண்பில்லாதவர் மரம்போல்வர் எனக் கொதித்துப் பேசுவர்.

**அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்**
**மக்கட்பண் பில்லா தவர்**

இவ்வாறு ஆசிரியர் ஆங்காங்குக் காட்டும் அறிவுடையார் குறை நிரப்பும் குறள்கள் பலவாம்.

அறிவுடையாரின் சிறந்த பண்புகளாக ஆசிரியர் கூறுவனவும் பலவாம். அறிவுடையான் என்ருல் முதற் கண், தன்னிலும் அறிவுடையார் உலகில் பலருண்டு என்ற உண்மையை நினைத்துக், குறைகுடம் கூத்தாடு மாப் போலத் தான் வீண் ஆரவாரம் செய்து அலையாமல் அடங்கி நடத்தல் வேண்டும். அங்ஙனம் நடப்பரேல் அவ் வடக்கம் செறிவறிந்து சீர்மை பயக்கும் என்பது உறுதி.

மக்களாய்ப்பிறந்தார்க்கு இன்பமும், துன்பமும் மாறி மாறி வருவது இவ்வுலக இயல்பு. எனவே இடும்பை இயல்பென்று அறிவது அறிவுடைமையாகும். அங்ஙனம் அறிந்த அறிவாளன் வெள்ளத்தனைய இடும்பை, ஒருசேர வந்தாலும், அதனை ஒரு பொருட்டாக மதியாது, யாது செய்யவேண்டும் எனச் சிந்தித்துச் செயலாற்று வான். அக்கணத்தே அவனுக்கு வந்த இடையூறுகள் நீங்கிவிடும்.

மேலும், இன்பமும், துன்பமும் மனத்தகத்தே தோன்றுவதோர் உணர்ச்சிநிலை யென்பதை அறிந்தவர் கள், இன்பம் வந்தபோது மகிழ்ந்து கூத்தாடுதலோ, அன்றித் துன்பம் வந்தபோது துயருற்றுச் சோர்தலோ இன்றி அமைதியாய் அதனை ஏற்பர்.

**வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்**
**உள்ளத்தின் உள்ளக் கெடும்**

ஆவது அறியும் அறிவுடையார் எந்த நிலையையும் எதிர்நோக்கி, முன் உணர்ந்து அதற்கு வேண்டிய செயல் களைச் செய்வர். அதிரவருவதோர் நோய், எதிரதாக் காக் கும் அறிவினர்க்கில்லை என்பது ஆசிரியர் முடிபு. இவற் ருல் துன்பத்திற் கிடங்கொடாமையும், துன்பம் வருமுன் னர்க் காத்துக்கொள்ளுதலும் அறிவுடைமைக்கு அழ கென அறியலாம்,

இவ்வுலகத்துன்பத்துள் பெரும்பாலன பணமின்மை யால் வருவன. எனவே பொருளை அவாவுதல் மக்களின் இயற்கை. பொருளாசை யில்லாதாரை உலகில் காண்ப தரிது. பொருளாசை காரணமாய் அறிவுடையார் தவறி நடப்பராயின் அவரின் கூர்த்த மதியாலோ, பரந்த கல்வி அறிவாலோ யாது பயன்?

> **அஃகி அகன்ற அறிவென்னும் யார்மாட்டும்**
> **வெஃகி வெறிய செயின்**

என்ற வினாவின் மூலமாகப் பொருள் வேட்கையால் ஆகாத செயல்களில் இறங்குதல் அறிவுடைமையன்று என அறிவுறுத்துவர்.

இவ்வாறு தான் அடங்கி நின்று, தனக்குத் துன்பம் வாராது காத்துப், பிறர் பொருள் வெஃகாது இருத்தல் மட்டும் அறிவுடைமை யாகாது. பிற உயிர்க்கு வந்த துன்பத்தைத் தனக்குவந்த துன்பமாயெண்ணிக் கண் ணோட்டம் செலுத்தி அத்துன்பத்தைக் களைதலே உண்மை அறிவு என்க. இல்லையேல் அவ்வறிவு அதனை உடையானுக்கு என்ன நன்மை ஆக்கிற்று என வியப்பர்.

> **அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்**
> **தன்நோய்போல் போற்றாக் கடை**

என்பது இரக்கமில்லா அறிவு, செழுங்கருணையைப் பெருக்காத அறிவு, உண்மை அறிவாகாது என்பதைத் தெள்ளிதின் விளக்கும். இக்குறளகத்துப் பிறிதின்நோய் என்ற அஃறிணைச் சுட்டை உன்னுக. குறளின் கடைசிச் சீராகிய மலர் வாய்பாட்டுக் 'கடை'யென்ற சொல் 'கண் ணோட்டமில்லா அறிவு கடையானது; தாழ்ந்தது' என்ற பொருண்மையையும் பயந்து நிற்கும் நயம் ஓர்க.

இனி, இறுதியாக அறிவின் உச்சநிலையாக,

> **பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்**
> **செம்பொருள் காண்பது அறிவு**

என அதன் முடிந்த பயனைக் கூறுவர். அறிவறிந்து, ஆள்வினையோடு, ஒழுக்கநெறி நின்றால் செம்பொருளைக் காணலாம், காண வேண்டும் என்பது ஆசிரியர் குறிப்பு.

இவ்வனைத்தையும் உள்ளடக்கியே, ' அறிவுடையார் எல்லாம் உடையார், அறிவிலார் என்னுடையரேனும் இலர் ' என்ற குறள் நிற்பதாம். எனவே மக்களெல் லாரும் அறிவுடையராக இன்னே முயல்க!

## 5. சான்றோர் கயவர்

அறத்துப்பாலை முடித்துப் பொருட்பாலைத் தொடங்குகின்ற ஆசிரியர் அதன் முதற் குறளாக,

**படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு**

என அரசர்க்கு இன்றியமையாதனவற்றை ஆறு பிரிவினதாகத் தொகுத்துக் கூறினர். அரசரைப்பற்றி இருபத்தைந்து அதிகாரமும், அமைச்சரைப்பற்றிப் பத்ததிகாரமும், நாடு, அரண், கூழ் இவற்றிற்கு ஒவ் வோர் அதிகாரமும், படைபற்றி இரண்டதிகாரமும், நட்புப்பற்றிப் பதினேழு அதிகாரமும், அதன் பின்னர் பதின்மூன்றதிகாரம் நாட்டில் வாழும் குடிமக்களைப் பற்றி யும் அமைந்து, மொத்தம் எழுபது அதிகாரங்களாய்ப் பொருட்பால் இலங்குகிறது.

அரசனுக்கு, " உறுப்புப் போல் இன்றியமையாதன எனத் தொகுத்தோதப்பட்ட ஆறனுள் ஈண்டுக் ' குடி ' யென்றது அதனையுடைய நாட்டினை " எனப் பொருள் விரித்தனர் பரிமேலழகர். இவருக்கு முன்னவரான மணக்குடவர் " ஈண்டுக் 'குடி'யுள் நாடு அடங்கிற்று " எனப் பொருள் மொழிந்தனர். காளிங்கர் என்னும் பிறிதொரு நுண்ணுரையாசிரியர் " அரசனை உறுப்பாகக் கொண்டு இவ்வாறினோடும் கூட்டி ராச்சியமெல்லாம்

ஒன்றுக்கி வடநூலார் கூறுமவற்றின் சில வேறுபடுத்து மாசனம் முதலாக நாட்டிற்கு இவ்வாறினையும் உறுப் பாக்கிக் கூறினர். இனி இங்குச் சொன்ன எழுவகைப் பொருளுமே இப்பொருட்பால் நடைப்பொருள் என்று அறிக" என்று விரிவுரை அறைந்தனர். காளிங்கர் கருத்து பரிமேலழகர் மணக்குடவர் இருவரினும் வேறு பட்டது. நாடே அடிப்படையானது; எனவே மேற் கூறப்பட்ட ஆறனோடு அரசனையும் ஓர் உறுப்பாக்கி நாட்டின் உறுப்புக்களே இவ்வேழுவகையும் என்று கூறி நாட்டுக்கு முதன்மை கொடுத்துத் தனிப்படுத்தினர் காளிங்கர்.

இவ்வடிப்படைக் கருத்து மாறுபாட்டுக் கேற்ப, இப் பொருட்பால் 'இயல்' பிரிவிலும் பல முறையான வேறு பாடுகள் இவர் தம்முள் காணக்கிடக்கின்றன. இறுதியில் பேசப்படுகின்ற குடிமக்களைப் பற்றிய பதின்மூன் றதிகாரங்களைப் பரிமேலழகர் 'ஒழிபியல்' என்றனர். ஆயின் மணக்குடவரும், பரிப்பெருமாள் என்ற உரை யாசிரியரும் "குடியியல்" என்றே தலைப்பு அமைத்தனர்.

முடியாட்சியெல்லாம் முறியடிக்கப்பட்டு குடியாட்சி யாக வளர்ந்துவரும் இன்றைய உலகிலே, குடிமக்களைப் பற்றிப் பேசும் பகுதியை 'ஒழிபியல்' என்னது 'குடி யியல்' என்னலே தக்கதாம். ஒரு நாட்டின் குடிமக்கள் எத்தகைய குணம் உடையோராய் இருத்தல் வேண்டும் எனக் காட்டுகின்ற இப்பகுதியில் கூறப்படும் பொருள், அரசராயினும், அமைச்சராயினும், தூதுவராயினும், வீரராயினும் எல்லார்க்கும் வேண்டப்படும் பொதுவான அடிப்படைக் குணங்களேயாகும். ஏனெனில் அரசர் முதலான அனைவரும் அந்நாட்டின் மக்களேயன்றோ?

எனவே, பரிமேலழகர்'ஒழிபியல்' எனப்பெயரிட்டமை பொருந்தாமை ஓர்க. பிறர் கொண்டாங்கு 'குடியியல்'

என்று கொள்ளலே நேரிது. பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்களும் 'குடியியல்' என்றே தம் தெளிவுரை நூலுள் குறித்தமை அறிக, நிற்க.

இக்குடியியலின் முதற்கண் குடிப்பிறப்புப்பற்றி ஓரதிகாரம் கூறி, மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை என அடுத்த நான்கதிகாரங்களால் உயர் குடி மகனொருவனுக்கு அமைய வேண்டிய குணங்களைத் தொகுத்துக் கூறினார். இந்நான்கு அதிகாரங்களும் 'கல்வி, கல்லாமை, கேள்வி' என்பனபோல ஒன்றை யொன்று தழுவி நிற்பனவாம்.

இவற்றுள், சான்றாண்மை என்பது பல குணங் களானும் நிறைந்து ஒழுகும் தன்மை எனப்பொருள் படும். வள்ளுவர் சான்றாண்மையின் இலக்கணமாக முதற் குறளிலேயே 'உலகத்துள்ள நல்லனவாய குணங் களெல்லாம் நிறைந்து ஒருங்கிருத்தல்' எனக் கூறினர். சான்றாண்மை, சால்புடையனாய் அதனை ஆளுந்தன்மை. சால்பு என்பது மனிதனின் கல்வியாலும், அறிவாலும், அறவொழுக்கத்தாலும் நிறைந்து, விளைந்து முற்றிச் செறிந்து கனிந்த ஒரு குணம்.

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் மிக உயர்ந்த, திண்மைவாய்ந்த, நிலைபெற்ற ஐந்து தூண்களின் மேலே கட்டப்பட்ட ஒரு சிறந்த மாளிகைக்குச் 'சால்பு' என்பது பெயர் என்றனர் வள்ளுவர். மேற்கூறிய ஐந்து குணம் பற்றியும் ஆசிரியர் அன்புடைமை, கண்ணோட்டம், ஒப்புரவறிதல், நாணு டைமை, வாய்மை எனத் தனித்தனி அதிகாரம் வகுத் தருளினார். எனவே சான்றாண்மை என்பது மிகமிகப் பரந்து விரிந்த பொருளையுடைய நனியுயர் குணமாகும் என்பது வெளிப்படை.

ஆசிரியர், நேர்முகமாகமாவும், மறைமுகத்தானும் மக்களின் நற்குணங்களைப் பற்றிப் பேசும் அனைத்து

அதிகாரங்களும் இச்சால்புக் குணத்தின் கூறுகளே எனல் பொருத்தமுடையது. சொல்லகத்துப் புலப்படும் பொருள் போலும், உடலகத்து நிலவும் உயிர்போலும், ஆசிரியரின் ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறள் அகத்தும் காணப்படும் உட்கோள் சால்பு எனல் உண்மை.

ஆசிரியர் சால்புபற்றிப் பல்லிடத்தும் பலவாறு விரித்துப் பேசுவர். " நாணென்னும் நன்மை குறித்தது சால்பு', 'பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு', 'இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோசால்பு' எனப்பல்வேறு நடையானும் சால்பின் தன்மையை விதந்தோதுவர்.

சால்புப் பண்புபற்றி இங்ஙனம் கூறியதோடமை யாது, சால்புக் குணமுடையோராகிய சான்ருேர் பற்றிப் பேசும் பல பாக்களிலும் அதன் தன்மையை ஆங்காங்கே சுட்டுவர்.

சான்ருேர் சிறப்பு குண நலமேயாகும். சான்ருேர்க்கு அழகு நெஞ்சத்துக் கோடாமையாகும். சமன்செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து,ஒருபால் கோடாமையே சான்ருேர்க்கு அணி. மேலும் அணியாக விளங்குவது, பழிபாவங்கட்கு அஞ்சுகின்ற நாணுடைமையாகும்.

அன்புடைமையும், பயனில்லவற்றைப் பகராதிருத்த லும், நாளும் நல்லினத்தாரோடு இணங்கி வாழ்தலும் சான்ருேரின் மனமொழி மெய்க் குணங்களாகும். நண்பர் களின் உரிமையை மதித்து, அவர் உரிமைச் செயலுக்கு இடந்தந்து, உடன்பட்டு இனியராதல் சான்ருேரின் கடமையாகும்.

சான்ருேர்க்குப் பொய்யா விளக்கே விளக்காம். சால் பென்னும் குணம் நிறைந்த திண்மை உண்டாகப் பெற்ருல், ஒருவர்க்குப் பொருள் இல்லாக் குறை இழி

வாகக் கருதப்படமாட்டாது. ஊழிக்காலமே வந்து வாழ்க்கையில் மிக்கவேறுபாட்டை உண்டுபண்ணி அலேக் கழித்தாலும் சான்ருேர் தம் நிலையினின்று கொஞ்சமும் மாறுபடாது உறுதியாக நிலைத்து நிற்பர்.

சான்ருேர்க்குப் பகைவராயினுர் இருத்தல் அரிது. அங்ஙனம் யாரேனும் ஏற்படுவாராஞல் அவரைத் தம் பணிவுடைமையினுல் வென்று நட்பாக்கிக்கோடல் அவர் ஆற்றலாம். பணிவென்னும் கருவியால் பகைவரை மனம் மாற்றி நட்பாளர் ஆக்குதல் செயற்கரிய செயல்வன்மை என்பது தெளிவு. மகாத்மா காந்தியடிகளின் அறப்போர் இவ்வடிப்படையை யுடையதென்பது கண்கூடு.

மிக்கவறுமை வந்த காலத்தும் பழியை மேற்கொண்டு இழிதொழில் செய்து அதனுற் செல்வராதலேவிட, வினைத் தூய்மையோடிருந்து வறுமைப்பட்டு வாழ்தலேசான்ருேர் இயல்பாம். இனி வாழ வழியில்லை என்ற வறுமையின் கடைநிலைவந்தபோதும், பிறரிடம்சென்று இரந்துபெற்று வாழ்வோம்என்ற எண்ணம் வாராதிருக்கும் சான்ருேரின் பெருமை, இவ்வுலகத்தின் இடமெல்லாம் கொள்ளாத அத்துணைச் சிறந்ததாம்.

பொன்னின் தரத்தை அறிய (மாற்றுஅறிய) பொன் வாணிகர் உரை கல்லில் அதனை உரைத்து அதன் மாற் றறிவர். அதுபோலச் சான்ருேர்களின் மாற்றை-தரா தரத்தை-உயர்ந்த நிலையை அறிய ஆசிரியர் ஓர்உரைகல் காட்டுவர்.

**சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி**
**துலையல்லார் கண்ணும் கொளல்**

தமக்கு ஒப்பில்லாத மிகத்தாழ்ந்தோரிடத்தும், தம் தோல் வியை ஏற்றுக்கொள்ளும் பண்பே அவரது சால்பைக் காட்டும் உரைகல்லாம்.

இனி, இத்தகைய நற்குணங்களின் கொள்கலமாய் விளங்கும் சான்ருேர் ஒருசிலராவது வாழ்வதனுலேயே இவ்வுலகம் ஒருவாறு நடைபெற்று வருகிறது. 'நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்பதும் அது. பாண்டியர் குலத்தில் பிறந்து புலவராய் வாழ்ந்த 'கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி' என்னும் சங்ககாலச் சான்ருேர்,

"தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே
உண்டா லம்ம இவ்வுலகம்"

எனவிதனை அழுந்த மொழிந்தனர்.

கோப்பெருஞ் சோழனேடு, உணர்ச்சியால் நட்பாங் கிழமை பூண்டு அவன் வடக்கிருந்துழி ஆண்டுச் சென்ற பிசிராந்தையார், தமக்கு நரையின்மைக்குக்காரணம்கூறிய ஒப்பற்ற புறப் பாட்டில் 'ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்ருேர் பலர்யான் வாழும் ஊரே' என்றமையும்ஈண்டு உளங்கொளற்பாற்று. இவர் வாக்கால் சான்ருேர் என்பார் 'ஆன்று அவிந்து, அடங்கிய, கொள்கையினர்' என்ற விளக்கமும் நாம் பெறுகிருேம்.

இங்ஙனமாய, மிகஉயர்ந்த குணக்கடலான சான்ருேர் யாண்டேனும், எப்பொழுதேனும், எக்காரணத்தாலேனும் தம் குணத்தினின்றும் ஒரு சிறிதும் வழுவார். அங்ஙனம் வழுவித் தாழ்வரேல் இவ்வுலக நிலை என்னுகும் ?

சான்றவர் சான்ருண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னே பொறை

என்றனர் ஆசிரியர். இப்பூமி தன் பாரத்தைத் தாங்க இயலாத நிலையை அடையும். ஆம். சான்ருேர் தம் நிலையினின்று தாழ்வரேல் இப்பூமியும் நிலைகுலைந்து ஒழியும். கடல் கரைபுரண்டால் ஆற்றுவாரு முண்டாங் கொல் !

பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

இனி சால்புக் குணம் உடையாரைச் சால்புடையார் என்றாற் போல, சால்புக் குணம் இல்லார் சால்பிலார் எனப்படுவர். ஆயின் சால்பிலார் என்ற சொல்லே திருக்குறளகத்துக் காணுமாறில்லை.

சான்றோர், சான்றோர் பாலரா ப
சாலார், சாலார் பாலரா குபவே

என்ற கண்ணகனாரின் புறநானூற்று அடிகளால் சான்றோர் என்பதற்கு எதிர்ச்சொல் 'சாலார்' என்பது பெறப்படுகிறது. இவ்வரிய சொல்லும் வள்ளுவர் வாக்கில் காணுமாறில்லை.

அன்பிலார், அறிவிலார், அருளிலார், பண்பிலார், கல்லார், துறவார், மாணார், வன்கணார் எனவாங்கு பலபட மறுதலைச் சொல் எடுத்தாளும் ஆசிரியர் வள்ளுவர், சால்பிலார், என்றோ 'சாலார்' என்றோ யாண்டும் சுட்டாமை வியப்பிற்குரியதே. ஆனால் 'சான்றோர் குழாத்துப் பேதை புகல்' என்ற தொடரால் 'பேதை' என்ற சொல் மறுதலையாக ஆளப்படுவதாக ஒருவாற்றாற் கொள்ளலாம். மற்றோரிடத்து இதனினும் தெளிவாக, 'கரும்பு போல் கொல்லப் பயன்படும் கீழ்' என்பதில் 'கீழ்' என்ற சொல்லை எதிர்மொழியாகக் கையாள்வர். இவ்விரண்டிடத்தும் 'பேதையார்' என்றோ 'கீழோர்' என்றோ சுட்டாமையை நோக்கும்பொழுது, சான்றோர்க்கு எதிராய 'இவை'களை 'ஆர்'விகுதி சேர்த்துச் சுட்டுதல் தகாதென ஆசிரியர் எண்ணினர் போலும் எனத் தோற்றுகிறது. அறிவும், பண்பும் கூடியது சான்றாண்மை என்றும், பேதமையும் கீழ்மையும் கூடியது கயமை என்றும் இக்குறிப்புக்களால் ஓராற்றான் பொருள் விரிக்கலாம்.

மக்கட்கு ஆகாக் குணங்களுள் இறப்ப இழிந்த நிலையைக் 'கயமை' எனச் சுட்டிக் குடியியலின் கடைசியில், அஃதாவது பொருட்பாலின் இறுதி அதிகாரமாக அதனை